புதுமுறை

# நாமகள் வாசகம்

இரண்டாம் புத்தகம்




TB
031(7)
N49
86501

ஓரியண்டல் பப்ளிஷிங் ஹவுஸ்
286, எஸ்பிளனேட் ...... சென்னை.1

# புது முறை
# நாமகள் வாசகம்

## இரண்டாம் புத்தகம்


ஆசிரியர்கள் :

வித்துவான் K. C. வன்மீகநாதன், B.O.L., L.T.,
துணைத்தமிழ்ப் பேராசிரியர், தமிழ்ப் பண்டிதப் பயிற்சிப் பிரிவு,
ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, சைதாப்பேட்டை.

வித்துவான் E. M. ஆறுமுக செட்டியார்,
தலைமைத் தமிழாசிரியர்,
ஸர். பி. தியாகராய செட்டியார் உயர்நிலைப்பள்ளி, சென்னை.



ஓரியண்டல் பப்ளிஷிங் ஹவுஸ்

[அப்பா பில்டிங்ஸ்]

286, எஸ்பிளனேட் :: சென்னை

காபிரைட்] 1949 [விலை அணா 15




# முகவுரை

---

நம் தமிழ் நாட்டு மாணவர்கள் தமிழ்ச் சுவையை நன்கு நுகர்ந்து, இன்புறுமாறு செய்வது நம்மனோர் தலையாய கடமையாகும். இக்கருத்தினைக் கொண்ட அரசியலார் சென்ற மாதத்தில் உயர்நிலைப் பள்ளி மாணவர்கட்குரிய தமிழ்ப்பாட இயலைச் (Syllabus) சீரியமுறையில் திருத்தி, முடிவுகட்டி வெளியிட்டனர். அப்பாட இயலை ஒட்டியே 'புதுமுறை நாமகள் வாசகம்' என்னும் பெயர் பெற்ற இந்நூல் வரிசை எழுதப் பட்டுள்ளது. இவ்வரிசையின் சில தனிப்பட்ட இயல்புகளும், நோக்கங்களும் பின் வருவனவாம் :—

1. உரை நடைப் பகுதியின் நடை, எளியதிலிருந்து படிப்படியாகக் கடின நிலைக்குச் செல்கின்றது.

2. பொருள்களின் சுவைக்கேற்பப் பாடங்கள் நிரல்பட அமைக்கப் பட்டுள்ளன.

3. 'இலக்கணத்திற்கும் உரைநடைப் பாடத்திற்கும் நெருங்கிய தொடர்பு வேண்டும்; நடைமுறையில் பயன்படக்கூடிய இலக்கணமே (Functional Grammar) மாணவர்கட்குக் கற்பிக்கப்பட வேண்டும்' என்று புதுக் கல்வி முறை கூறுகின்றது. அக்கருத்தினை உட்கொண்டு இலக்கண வகுப்பிற்கு உதவுமாறு, ஈண்டு மொழிப் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன.

4. தற்காலக் கல்வி முறையில் புதுமுறை வினாக்கள் (New Type Tests) பெரிதும் வற்புறுத்தப்படுகின்றன. அத்தகைய வினாக்களே 'சிறு விடை வினாக்கள்' என்னும் பகுதியில் இடம் பெற்றுள்ளன.

5. ஈண்டு அமைந்துள்ள கட்டுரையாக்கப் பயிற்சிகள், மாணவர்களுடைய கட்டுரை எழுதும் ஆற்றலை வளர்ப்பதற்கு ஏற்ற முறையில் இயைந்துள்ளன.

6. அகராதி பார்க்கப் பயிற்சி பெறுவதற்கேற்ற வாய்ப்புகள் நம் மாணவர்கட்கு இல்லை. அக்குறையை நீக்கக் கருதியே ஒவ்வோர் பாடத்தின் இறுதியிலும் 'பொருள் காண்க' என்ற பகுதியை அமைத்துள்ளோம். அச் சொற்களுக்குப் பொருள்கள் அகராதி வரிசையில், புத்தகத்தின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றின் துணை கொண்டு, மாணவர்கள் அகராதி பார்க்கப் பயிற்சி பெறலாம்.

7. ஆங்கிலக் கல்வி முறை, இளைஞர்களின் சொற்பொழிவுகளுக்கு (Little men's lectures) ஏற்ற வாய்ப்பு இருக்க வேண்டும் என்கின்றது.

அக்கருத்தினை உட்கொண்டு, ஐந்து நிமிஷப் பேச்சிற்கு உரிய பயிற்சிகள் 'கட்டுரையாக்கம்' என்ற தலைப்பில் தரப்பட்டுள்ளன.

8. உரை நடைப் பாடங்களிற் சில, சங்க நூல்களோடும், இடைக்கால நூல்களோடும் தொடர்புள்ளன. அப்பாடங்கள், அவற்றோடு தொடர்புள்ள நூல்களைப் படிக்க வேண்டும் என்னும் அவாவினை மாணவர்கட்கு எழுப்பும் விதத்தில் எழுதப்பட்டுள்ளன.

9. செய்யுட்பகுதியில் அமைந்துள்ள செய்யுட்கள் எளியவை; இனியவை; சுவை மிக்கவை; மாணவர்களுக்கு ஏற்றவை.

10. முடிவாகக் கூறுமிடத்து, மாணவர்களின் இயல்பூக்கத்திற்கும் (Instinct), உள்ளப் பண்பிற்கும் ஏற்ற பாடங்களே இயன்ற வரையில் இவ்வரிசையில் சேர்க்கப்பட்டுள்ளன.

மேற்கண்ட எம் நோக்கங்களுள் சிலவேனும் நிறைவேற அருள் செய்யுமாறு இறைவனை இறைஞ்சுகின்றோம். புது முறை நாமகள் வாசகத்தைப் படிக்கவும், நாமகளின் அருளைப் பெறவும் மாணவர்கட்கு வாய்ப்பு அளிக்குமாறு தமிழாசிரியர்களையும், தலைமையாசிரியர்களையும் வேண்டுகின்றோம்.

சென்னை
25-5-49

K. C. வன்மீகநாதன்
E. M. ஆறுமுக செட்டியார்

# உள்ளுறை

**உரைநடைப் பகுதி**





# செய்யுட்பகுதி




"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தில் அரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய்."




# புது முறை நாமகள் வாசகம்

---

## இரண்டாம் புத்தகம்

## 1. கவியரசி சரோஜினி தேவியார்

'பாரத நாடு' என்ற பெயர் காதில் விழுந்ததும் ஒவ்வோர் இந்தியனும் புத்துணர்ச்சி பெறுகிறான்; தனது நாடு என்று அதனைப் பெருமையொடு கூறிக்கொள்கிறான்; அந்நாட்டின் சிறப்பினைப் பாக்களால் பாடி மகிழ்கிறான். இந்திய நன்னாட்டினில் அக்காலத்தும், இக்காலத்தும் எந்நாட்டவரும் விழைந்து போற்றத்தகும் கவிஞர் பலர் தோன்றியுள்ளனர். அவர்கள் அரும்பெருங்காப்பியங்களை இயற்றியுள்ளனர்; கலைகளை வளர்த்துள்ளனர். பெண்டிரில் பலரும் அத்தகைய கவிஞர்களாய் விளங்கினர். தமிழ் நாட்டு நல்லிசைப் புலமை மெல்லியலார்களின் பாடல்களைச் சங்க நூல்களில் காணலாம். தோருதத் என்னும் அம்மையார் தமது இளமைப் பருவத்திலேயே ஆங்கிலத்தில் இனிய கவிகள் பாடும் ஆற்றல் பெற்றுத் திகழ்ந்தார்; அழியாப் புகழ் எய்தினர். '**இந்தியக் குயில்**' என்றும், '**கவியரசி**' என்றும் உலகமே போற்றும் சரோஜினி தேவியார் நம் நாட்டுப் பெண்பாற் புலவர் ஆவார். அவரது பாடல்கள் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன.

தக்காணத்தில் ஐதராபாத்து நகரில் டாக்டர் அகோரநாத் சட்டோபாத்தியாயர் என்பவர் ஒருவர் வசித்து வந்தார். அவர் ஒரு சிறந்த விஞ்ஞானி; 'பிரம்மநகர்' பிராமண குலத்தவர். அப்பெரியார் அரும்பெரும் பட்டங்கள் பெற்றவர். அவரது மனைவியார் ஸ்ரீமதி வரதசுந்தரி அம்மையார் என்பவர் ஆவார். அகோரநாதர் தம் வாழ்நாள் முழுவதையும் கல்வி கற்பதிலும் ஆராய்ச்சி செய்வதிலுமே கழித்தார்.

அப்பெரியார் செய்த அருந்தவப் பயனாக 1879-ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் அவருக்கு ஒரு பெண் மகவு பிறந்தது. அக்குழந்தையே சரோஜினி தேவியார். தந்தையின் அரிய குணங்கள் யாவும் குழந்தையிடம் விளங்கின. அப்பெரியார் சரோஜினி தேவிக்கு ஆங்கிலக் கல்வியைக் கற்பித்தார். அம்மையார் ஆங்கிலத்தினைப் படிக்க முதலில் விருப்பங்கொண்டிலர். ஆயினும் தந்தையின் கட்டளைக்கு இசைந்து கற்பாரானார். வீட்டில் சரோஜினி தேவியார் தாய் தந்தையரோடு ஆங்கிலத்திலேயே பேசி வந்தார். கல்வி வளர்ச்சிக்கு அம்மையாரின் சூழ்நிலை பெரிதும் துணை புரிந்தது.

சரோஜினி தேவியார் தம் பன்னிரண்டாம் வயதில் சென்னை மெட்றிகுலேஷன் பரீட்சையில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். அம்மையார் இளமையிலேயே நுண்ணறிவு படைத்தவர். எப்பொருளையும் கூர்ந்து நோக்கும் வழக்கம் அவரிடம் இயல்பாக அமைந்திருந்தது. அவர் தமது பதின்மூன்றாவது வயதில் நீண்ட கவி ஒன்றை எழுதினார்; இரண்டாயிரம் அடிகளைக் கொண்ட நாடகம் ஒன்றையும் இயற்றினார். எனவே, இளமையிலேயே அம்மையாருடைய மனம் கவி பாடுதலில் ஈடுபட்டிருந்தது என்பதை அறியலாம். ஆனால் அம்மையாரைப் பெரிய கணிதநூற் புலவராகவோ, விஞ்ஞானியாகவோ ஆக்க வேண்டும் என்ற ஆவல் அவரது தந்தையாருக்கு இருந்தது.

அம்மையாருக்குப் பதினாறாவது வயது தொடங்கிற்று. 1894-ஆம் ஆண்டு அம்மையார் உயர்தரக் கல்வி கற்கும் பொருட்டு இங்கிலாந்திற்குச் சென்றார்; 1895 முதல் 1898 வரை லண்டனில் உள்ள கிங்க்ஸ் கல்லூரியில் கல்வி கற்று வந்தார். அக்காலத்தில் அம்மையாருக்குக் கணிதத்திலும், விஞ்ஞானத்திலும் அறிவு பெருகுதற்கு மாறாக, வர்ஜில், டான்ட்டே, பெட்ரார்க் போன்ற கவிஞர்களின் கவிகளில் அவர் மனம் ஆழ்ந்து மகிழ்ந்தது. பின்பு அம்மையார் இதாலிக்கு வந்து சிறிது காலம் தங்கியிருந்தார். இங்கிலாந்தில் அம்மையார் இருந்த காலத்தில் ஸர் எட்மண்டு

கோஸ், ஆர்தர் ஸைமன்ஸ் என்னும் இரு பேரறிஞர்களின் நட்பு ஏற்பட்டது. அவ்விருவரும் அம்மையார் எழுதிய ஆங்கிலக் கவிகளைக் கேட்டு இன்புற்றுப் புகழ்ந்து பாராட்டி அவருக்கு ஊக்கம் அளித்தனர். அதனால் அம்மையாரின் இளமைப் பருவத்திலேயே மேனாட்டில் அவரது புகழ் எங்கும் பரவலாயிற்று. அம்மையார் **'தாமரைத் தவிசுறை புத்த தேவன்' 'கட்டு மரம்' 'பாரத மாதாவின் பரிசு'** என்பன போன்ற அரிய கவிதை நூல்களை இயற்றியுள்ளார். மேனாட்டிலும் அம்மையாரின் கவிதைப் பெருவெள்ளம் யாவர் மனத்தையும் இழுத்தது. அம்மையார் 1898-ஆம் ஆண்டு இந்தியாவிற்குத் திரும்பினார்.

சரோஜினி தேவியார் தம் அறிவிற்குப் பொருந்தியவற்றையே ஏற்றுக்கொள்வார். பொருந்தாதவை எவ்வளவு பழைமையவாயினும் அவற்றை ஏற்றுக்கொள்ளும் இயல்பு அவரிடம் இல்லை. அவர் இந்திய மக்களுக்குப் புதுநெறி காட்டவேண்டும் என்று எண்ணினார். ஆதலால், அவர், நாயுடு வகுப்பைச் சேர்ந்த மேஜர் எம். ஜி. நாயுடு என்பாரைப் பிரம்ம சமாஜ முறைப்படி மணந்து கொண்டார். அம்மையாரின் இல்லற வாழ்க்கை இன்பமாகவே இருந்தது. அம்மையாருக்கு இரு ஆண் குழந்தைகளும், இரு பெண்களும் பிறந்தனர். இளைய குமாரி 'பத்மஜா' தாயைப் போல் ஐதராபாத்தில் சமூக சேவையில் ஈடுபட்டுள்ளார். ஐதராபாத்தில் சரோஜினி தேவியார் பெண்கள் சமூகத்திற்கும், பொது மக்களின் சமூகத்திற்கும் அரிய தொண்டுகள் பல செய்துள்ளார். வெள்ளப் பெருக்குக் காலத்தில் அவர் ஆற்றிய பெருந்தொண்டு போற்றத்தக்கது.

அம்மையாருக்குத் தேசப்பற்று அதிகம். அவர் தமது கவிதா வாழ்க்கைக்கு ஐதராபாத்து ஏற்றதன்று என்று எண்ணிப் பெரும்பாலும் பம்பாயில் 'தாஜ்மஹால்' ஹோட்டலில் தங்கியிருப்பார். அக்காலத்தில் அம்மையாருக்குக் கோபால கிருஷ்ண கோகலே, ஜெயகர், ஸர் பிரோஸ் ஷா மேத்தா, பால கங்காதர திலகர், ஜனப்

ஜின்னா, ஸர் வாச்சா, புலாபாய் தேசாய், ஸர் செதல்வாட், டாக்டர் அன்னிபெஸன்டு அம்மையார் முதலான பெரியார்களின் நட்பு ஏற்பட்டது. அப்பெரியார்கள் அறிவும், தேசப்பற்றும் நன்கு அமைந்தவர்கள். அம்மையாரின் கவித்திறனை அறிந்த இந்திய அரசாங்கம் அவருக்கு 'கெய்சரி ஹிந்த்' என்னும் மதிப்பிற்குரிய பொற்பதக்கம் அளித்தது. அத்தகைய பொற்பதக்கத்தை, கவி இரவீந்திரநாத தாகூரும் பெற்றிருக்கிறார். ஆனால், இருவரும் தேசப்பற்றின் காரணமாக 'அப்பதக்கம் வேண்டாம்' என்று திருப்பி அளித்துவிட்டனர்.



கவியரசி

அம்மையார் பேசுந்திறமை மிகப் படைத்தவர். 'சொல்லின் செல்வி' என்று அவரைக் கூறின் அது மிகையாகாது அவர் மேனாடுகளிலும், இந்தியாவிலும் இனிய அரிய பிரசங்கங்கள் பல ஆற்றியுள்ளார். அவர் பிரசங்க மாரியில் கவிதைத் தேன் சொட்டும். அது யாவர் உள்ளத்தையும் இன்பூட்டிக் குளிர்விக்கும். தேவியார்க்கு 'மக்கள் சேவையே ஆண்டவன் சேவை' என்பது ஊன்றிய சொள்கை. பஞ்சாபில் 1919-ல் நிகழ்ந்த கொடு நிகழ்ச்சிகள் அம்மையாரின் உள்ளத்தை உருக்கின. அதன் காரணமாக அஞ்சாமை அவர் உள்ளத்தில் பிறந்தது; ஆங்கிலப் பிரதம மந்திரியையும் எதிர்த்துச் சொற்போரிட்டார். அவர் அக்காலத்தில் ஆற்றிய பிரசங்கங்கள் இந்தியரைத் தட்டி எழுப்பின; ஆங்கிலேயர் இந்தியர்களை வஞ்சிக்கின்றனர் என்பதை விளக்கின. அம்மையார் சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்டுப் பன்முறை சிறைக்குச் சென்றுள்

ளார். அவர் அகில இந்திய தேசீய காங்கிரஸ் என்னும் பேரமைப்பின் சேவகியானர்; மகாத்மா காந்தியடிகளின் உண்மைத் தொண்டர்களில் ஒருவரானர். காந்திஜி உண்ணுவிரதம் மேற்கொண்ட பொழுது அம்மையார் அப் பெரியார்க்கு உற்ற துணையாக இருந்தார்.

சரோஜினி தேவியார் அகில இந்திய தேசீய காங்கிரஸின் தலைவராக இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் செய்த பிரசங்கங்கள் உள்ளத்தை உருக்கித் தேச சேவையில் யாவரையும் இழுக்கும் ஆற்றல் வாய்ந்தன. காங்கிரஸின் மந்திரா லோசனை சபை அங்கத்தினராக இருந்து அம்மையார் அரும்பணி ஆற்றியுள்ளார். உண்மையில் அம்மையாரை, 'மகாத்மா காந்தியடிகளின் மாணவி; உண்மையான தேச பக்தியுடையவர்; மாதர் விடுதலைக்குப் பாடுபட்டவர்; மாண வர்களை ஊக்கி எழுப்பி உற்சாகமூட்டும் சக்தி; சமாதானத் தூதர்; அடிமை, அச்சம், அயர்வு முதலானவற்றைத் துரத்தியடித்த பேரொளி' எனக் கூறலாம். கான்பூர் காங் கிரஸ் அவைத் தலைவராக இருந்து அம்மையார் ஆற்றிய சொற்பொழிவு யாவராலும் போற்றப்படுகின்றது.

சுதந்திரம் பெற்ற இந்த நாடு அம்மையாரின் அருஞ் செயல்களை மறக்கவில்லை. அம்மையாருக்கு ஐக்கிய மாகாணத்தின் கவர்னர் பதவியை அளித்து இந்திய நாடு போற்றியது. அம்மையார் தம் எழுபதாம் ஆண்டிலும் தளரா உள்ளத்தோடு தாம் ஏற்ற பதவியைச் சிறப்பாகப் போற்றி வந்தார். அம்மையாரின் அரும் பணிகளை அறியாதார் நம் தாய் நாட்டிலும், பிற நாட்டிலும் இலர். இத்தகைய அம்மையார் 1949-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நோயுற்ருர். நோயுற்றுப் படுக்கையில் படுத்திருந்த நிலையிலும் அரசியல் அலுவல்களை அவர் நன்கு கவனித்து வந்தார். இதிலிருந்து அவரது தாய் நாட்டுப் பற்று நன்கு விளங்குகிறதன்ருே!

காலம் கடந்து கொண்டே இருக்கிறது. காலத்தைக் கடந்து வெற்றி கொள்வது அரிது. வாழ்நாள் உலந்தால்

மண்ணில் யாவரும் மடிவர். அம்மையாரும் அவ்விதிக்கு உட்பட்டவரே அல்லரோ? அம்மையார் 1949-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் தேதி இரவு, மண்ணுலகில் அழியாப் புகழை நிலைநாட்டிப் பொன்னுலகு புகுந்தார். அவரது அருமொழிகளைக் கவனியுங்கள் :—

"மன்னர்களும், மந்திரிகளும் தத்தம் வீர வெற்றிகளைப் பேசட்டும்."

"ஆண்டவனே! தோற்றவர்க்குச் சமாதானம் அருள். பலமற்றவர்களுக்கு வலிமையை அருள்."

"என்னைக் கவி பாடிப் பரவசமடையச் செய்."

"தளர்ந்தவர்க்கு ஆறுதல் அருள்."

"சமாதானம் நிலவ வேண்டும்; மகிழ்ச்சி பெருக வேண்டும்."

"சத்தியமே வெற்றி பெறும்; அன்பும் மங்களமும் அம்புவியில் தழைக்க."

### பொருள் காண்க

பா, விழைந்து, போற்ற, இயற்றி, புலமை, இயல், மெல்லியலார், திகழ்ந்தார், மகவு, கூர்ந்து, கணிதம், தவிசு, உறை, நெறி, ஆற்றி, மாரி, அயர்வு, பணி, அலுவல், புவி, பரவசம், அம்புவி.

### சிறுவிடை வினாக்கள்

1. சங்ககாலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர்களில் இருவர் பெயர்களைக் குறிப்பிடுக.

2. சரோஜினி தேவியாரின் பெற்றோர் யாவர்?

3. சரோஜினி தேவியார் எத்தகைய பதவிக்கு வரவேண்டுமென்று அவரது தந்தையார் விரும்பினர்?

4. தேவியார் இயற்றிய நூல்களில் மூன்றினை வரைக.

5. தேவியாருக்கு இந்திய அரசாங்கம் 'கெய்சரி ஹிந்த்' என்னும் பதக்கத்தை அளித்தது ஏன்? தேவியார் அதைத் திரும்பக் கொடுத்துவிட்ட காரணம் என்ன? அப்பதக்கம் பெற்ற மற்றொருவர் யார்?

6. சுதந்திர இந்தியாவில் தேவியாருக்குக் கிடைத்த பதவி யாது?

7. கீழே சில புலவர்களின் பெயர்களும், அவர்கள் இயற்றிய நூல்களின் பெயர்களும் உள்ளன. அவை முறைமாற்றி அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைச் சரியாகப் பொருத்திக் காட்டுக.

| | |
|---|---|
| இளங்கோவடிகள் | சத்திய சோதனை |
| கம்பர் | கீதாஞ்சலி |
| சேக்கிழார் | இராமாயணம் |
| திருவள்ளுவர் | பெரியபுராணம் |
| இரவீந்திரநாத தாகூர் | திருக்குறள் |
| காந்திஜி | சிலப்பதிகாரம் |

8. நாட்டுத் தொண்டு செய்வதிலேயே தம் காலத்தைக் கழித்து, இவ்வுலகை விட்டு மறைந்த பெரியார்களுள் நால்வர் பெயர்களைக் குறிப்பிடுக.

## கட்டுரையாக்கம்

1. 'தமிழ் நாட்டுப் பெண்பாற் புலவர்கள்' என்னும் பொருள்பற்றி உன் வகுப்பு மாணவர் சங்கத்தில் ஐந்து நிமிடப் பேச்சு நிகழ்த்துவதற்கு வேண்டிய குறிப்புக்கள் தயார் செய்க.

2. சரோஜினி தேவியாரின் கவித் திறனைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் வரைக.

3. தேவியாரின் நாட்டுத் தொண்டினைப் பத்து வரிகளில் எழுதுக.

4. 'தேவியாரின் இளமையும் கல்வியும்' என்னும் பொருள்பற்றிப் பதினைந்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

## மொழிப் பயிற்சி

1. பிரித்துக் காட்டுக :—புத்துணர்ச்சி, நன்னாடு, இயற்றியுள்ளார், அருந்தவம், தவப்பயன், நுண்ணறிவு, தேசப்பற்று, இத்தகைய, அருஞ்செயல்.

2. புணர்த்திக் காட்டுக :— சொல்+போர், அழியா+புகழ், ஆங்கிலம்+கல்வி, பத்து+இரண்டு, மிகை+ஆகாது, ஒருவர்+ஆயினர், சொல்+பொழிவு, நன்கு+கவனித்து, அ+விதி, பண்+உலகு.

3. நன்னாடு, நந்நாடு ; இவ்விரண்டிற்கும் உள்ள பொருள் வேறுபாடு யாது? இரண்டையும் ஒவ்வோர் வாக்கியத்தில் அமைத்துக் காட்டுக.

4. 'அவரது அருமொழிகளைக் கவனியுங்கள்' இது கட்டளை வாக்கியம் என்பது உங்களுக்குத் தெரியும். கட்டளை வாக்கியங்கள் நான்கு எழுதுக.

5. வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக:—இத்தகைய, புத்துணர்ச்சி, சூழ்நிலை, தட்டியெழுப்பின, அருஞ்செயல்கள்.

## 2. கரும்பு

'நிலத்திற்கு அணி என்ப நெல்லுங் கரும்பும்' என்னும் பழமொழியை நீங்கள் கேட்டிருப்பீர்கள். நிலத்தை அழகுபடுத்துவது நெற்பயிரும் கரும்புப் பயிரும் ஆகும். மக்கள் வாழ்விற்கு உணவாவதாகிய அரிசி, நெல்லிலிருந்து கிடைக்கின்றது. உணவின்றி உயிர்வாழ முடியாதல்லவா? ஆதலின் நெல் இன்றியமையாத விளை பொருள்களுள் ஒன்று. கரும்பும் நெல்லைப்போல் உயர்ந்த விளைபொருள்களுள் ஒன்று. மற்றும் நெல்லும் கரும்பும் செழுமை மிக்க நிலங்களில்தான் நன்கு பயிராகும். ஆதலால், நெல்லும் கரும்பும் விளையும் நிலம் என்று கூறினால் நிலத்தின் செழுமை சொல்லாமலே விளங்கும். இவ்விரு பயிர்களுக்கும் நிலவளத்தோடு நீர்வளமும் மிக்கிருத்தல் வேண்டும். நிலமும் நீரும் ஆகிய இருவளங் களும் நிறையுமாயின் ஏர்வளம் அங்கு ஏற்றமடையும் என்பதை இயம்பவும் வேண்டுமோ?

கரும்பை நன்செய், புன்செய் என்னும் இருவகை நிலங்களிலும் பயிரிடுவர். கரும்புப் பயிர் செல்வந் தரக் கூடிய சிறந்த பயிர். மற்றும், அதனால் கைத்தொழிலையும் தோற்றுவித்துக் கொள்ளலாம். நீர்வளமும் நிலச்செழிப் பும் உள்ள இடங்களில் கரும்புப் பயிர் வளர்க்கப்படும். இப் பயிர் உஷ்ணப் பிரதேசங்களில்தான் பயிராகும். முதலில் நிலத்தை நன்றாய் உழுது நல்ல எரு இடுவர். பின்னர் நன்கு முற்றிய கரும்புகளைத் துண்டந் துண்டங்களாக வெட்டிச் சிறிது சாய்வாக நடுவார்கள். ஒவ்வொரு துண்டத்தையும் தனித்தனியாகவும், இடையில் இடமுள்ள தாகவும் நடுவார்கள். பூமிக்குள் ஒரு கணு மறைந்திருக்கும். மேலே தோன்றும் பகுதியில் வெட்டப்பட்ட வாயைச் சாணியினால் மூடுவதும் உண்டு. நிலத்துள்ளிருக்கும் கணுவிலிருந்து வேர் இறங்கும். கரும்பிற்கு ஆணிவேர் இல்லை; சல்லி வேர்களே உண்டு. அவை கணுக்களிட மிருந்து தோன்றிப் பரவி, பூமியில் பாய்ந்திருக்கும். ஆகவே, கரும்பு கீழே விழுந்துவிடாமல் அவ்வேர்கள்

தாங்கிப் பிடித்துக்கொள்கின்றன. ஒவ்வொரு கணுவி லிருந்தும் தளிர்கள் தோன்றும்.

கரும்பு, பேய்க்கரும்பு, நாணல், மூங்கில் என்பன ஓர் இனமாகும். மக்காச் சோளமும் அவ்வினத்தைச் சேர்ந்ததே. இவற்றைப் புல்லினம் என்பர்; நன்கு கவனியுங்கள். பெரிய கழிகள்போல் உள்ள இவற்றின் உடல்களில் கணுக்கள் பலவற்றைக் காணலாம். இவற்றின் இலைகள் நீண்டனவும், கூர்மையுடையனவும், சொர சொரப்புடையனவும் ஆகும். ஆதலால், கரும்புத் தோட்டத் தினுட் புகுங்கால் மிகவும் கவனம் வேண்டும். கரும்பு எட்டடி முதல் இருபதடி உயரம் வரை வளரும். கரும்பு களுள் தடிக்கரும்பும், சன்னக் கரும்பும் உண்டு. மற்றும் செங்கரும்பு, நாமதாரிக் கரும்பு, வெண்கரும்பு, ரஸ்தாளிக் கரும்பு என்று பல வகைகள் உண்டு. கரும்பு அடர்த்தி யாக வளரும்.



கரும்புப் பயிர்

மூங்கில் நாணல்களைப்போல் கரும்பு புதர் புதராகவும் இருக்கும். படத்தைப் பாருங்கள். அவை எவ்வளவு

அடர்த்தியாகப் பயிரிடப்பட்டுள்ளன என்பது விளங்கும். கரும்பின் இலைகள் சொரசொரப்பும் கூரிய ஓரங்களும் உடையவை. ஆதலால் அவ்வப்போது அவ்விலைகளைக் கழித்து விடுவார்கள். கரும்பு வரிசையாக நடப்படுவதால் நடும்பொழுதே இடைவெளிகள் கொடுத்து நடுவார்கள். கரும்புத் தோட்டத்தினுள் பாம்புகளும், எறும்புகளும், எலிகளும் அதிகம்.

முன் பக்கத்திலுள்ள கரும்புத் தோட்டத்தைப் பாருங்கள். ஐந்தாறு கரும்புக் கழிகள் ஒவ்வொரு கொத்திலும் இருப்பதைக் காணலாம். எவ்வளவு அடர்த்தியாகவுள்ளன! கரும்பிற்குப் பூவுண்டு. அது வேலைப்போல் கூரான முனையை உடையது. கரும்புக் கழியின் மேற்பகுதிக்குக் கொழுந்தழை என்று பெயர். அது கோந்தாழை என்று மருவியும் வழங்கும். கரும்பு வளர வளரக் கணுக்களிலிருந்து தோன்றிய வேர்கள் அற்றுவிழும். அவ்விடத்தில் வடுக்களையும் காணலாம். கரும்பின் அடிப்பாகம் மிகச் சுவை உள்ளதாக இருக்கும். மேலே செல்லச் செல்லச் சுவை குறையும். மேலோர் நட்பிற்குக் கரும்பின் அடிப்பாகமும், கீழோர் நட்பிற்குக் கரும்பின் நுனிப்பாகமும் உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன. கொழுந்தழையுள்ள இடம் உப்புக்கரிக்கும். ஆதலால், அப்பகுதியை வெட்டி எறிந்து விடுவார்கள். கரும்பினது தடித்த மேற்பட்டை, தனது உட்புறத்திலிருக்கும் சாறு வெயிலால் சுண்டி விடாமல் காக்கின்றது. கரும்புப் பயிர் மிக்க ஊதியம் தரும் பயிராகும். ஆயினும், அது விளைந்த நிலத்தில் பூசாரம் குன்றிவிடும். எனவே, கரும்பு பயிரிடப்படும் நிலங்களுக்குச் சிறந்த எரு இடுதல் வேண்டும். கரும்பின் இலை, தழை, வேர், அடிக்கட்டை, சக்கை யாவும் எருவாக உபயோகிக்கத் தக்கன.

நாம் உட்கொள்ளும் உணவு வகைகளில் ஆறுசுவைகள் உள்ளன. அவை உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, இனிப்பு, துவர்ப்பு, புளிப்பு என்பன. நம் நாட்டில் விசேட தினங்களிலும், பண்டிகைப் பருவங்களிலும் இன்சுவையுள்ள

தின்பண்டங்களைச் செய்கின்றனரல்லவா? சிற்றுண்டிச் சாலைகளில் எவ்வளவு வகையான இனிப்புப் பண்டங்கள் உள்ளன! மற்றும், சிறு குழந்தைகளுக்கு மிட்டாய், பெப்பர்மென்டு என்பவை இனிய பண்டங்கள் அல்லவா? இவற்றிற்கு இனிப்பூட்ட யாது செய்கின்றனர்? இனிப்புத் தரும் பொருள்கள் சர்க்கரை, கற்கண்டு, வெல்லம் என்பன. இவை கருப்பஞ்சாற்றினால் செய்யப்படுவன.



சாறு எடுப்பதும், காய்ச்சுவதும்

கரும்பு முதிர்ந்தபின் வெட்டி, அவற்றின் தழைகளையும் நுனிப்பகுதியான கொழுந்தழைகளையும் அகற்றியபின் துண்டம் துண்டங்களாக வெட்டுவார்கள். அவற்றை ஆலையில் கொடுத்துக் கசக்கிப் பிழிவார்கள். அவ்வாலையை மாடுகள் இழுக்கும். சாறு ஒரு புறமும், சக்கை ஒரு புறமுமாக விழும். சாற்றை ஒரு பாத்திரத்தில் ஏந்துவார்கள். பின் அச்சாற்றை அதற்கென அமைந்த பாத்திரமான கொப்பரையிலிட்டுக் காய்ச்சுவார்கள். பக்குவமறிந்து அதனை

அச்சுக்களிலும், பெருந் தட்டங்களிலும் ஊற்றி, ஆறிய பின்பு எடுப்பார்கள். அச்சில் ஊற்றியது அச்சு வெல்லம் என்றும், தட்டங்களில் ஊற்றியது உருண்டை வெல்லம் என்றும் பெயர் பெறும். கருப்பஞ் சாறு காயும் பொழுது அதனுள் சிறிது சுண்ணும்பு நீரைத் தெளிப்பார்கள். அதனல் அழுக்குகள் திரண்டு மேலே மிதக்கும். அதற்கென அமைந்த கரண்டியால் அழுக்குகளை எடுத்து எறிவார்கள். பிறகு அதிலிருநது வெண்மையான சர்க்கரை செய்யப்படும். கருப்பஞ் சாற்றுக்கு 'இக்கு' என்று பெயர். கரும்பிற்கு வேழம், கன்னல், கழை என்ற பெயர்கள் உண்டு.

கரும்பு பல வகையிலும் நமக்கு உபயோகப்படுகிறது. சிறுவர்கள் கரும்பைத் துண்டந் துண்டங்களாக வெட்டித் தின்பர். கரும்பைத் தின்ருல் பல் சுத்தமாகும்; வெண்மையாகத் துலங்கும். கரும்பைக் கலியாணப் பந்தர்களில் கட்டுவதைக் காணலாம். பொங்கல் முதலான பண்டிகை நாட்களில் கரும்பை உபயோகிக்கிருர்கள். யானைக்குக் கரும்பே இனிய உணவு. அதனலன்றே, 'கரும்பும், இளநீரும், கட்டிக் கனியும் விரும்பும் விநாயகன்' என்று ஒரு புலவர் கூறினர். வேழம் என்ற சொல் யானைக்கும் கரும்புக்கும் பொதுப் பெயராக அமைந்துள்ளதும் அறியத்தக்கதே. சுவை மிக்க இன் சொல்லிற்குக் கரும்பினைப் புலவர்கள் உவமையாகக் கூறுவது வழக்கம்.

பழங்கால முதலே நம் நாட்டில் கரும்பு ஆலைகள் இருந்து வருகின்றன. அவை மாடுகளினல் இழுக்கப்படுகின்றன. இக்காலத்தில் பொறிகள் மின்சாரத்தால் இயங்கும் தன்மை பெற்று விளங்குகின்றன. எனவே, கரும்பிலிருந்து சாறு எடுப்பதும், கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுதலும் மின்சார உதவி கொண்டு நடைபெறுகின்றன.

இக்காலத்தில் சர்க்கரைத் தொழில் அபிவிருத்தி அடைந்துள்ளது. சர்க்கரைத் தொழிலை வளர்க்க ஆங்காங்கு மின்சாரத்தின் துணை கொண்டு கரும்பாலைகள் ஏற்படுகின்றன. சென்னையிலுள்ள பாரி கம்பெனியார் நெல்லிக்குப்பத்தில் பெரிய சர்க்கரைத் தொழிற்சாலையை

ஏற்படுத்தியுள்ளனர். நீங்கள் விரும்பியுண்ணும் பெப்பர் மென்டுகள் அந்தப் பாரி கம்பெனியாரால் நெல்லிக்குப்பத்தில் தயாரிக்கப்படுவனவே ஆகும்.



நெல்லிக்குப்பத்திலுள்ள சர்க்கரைத் தொழிற்சாலையின் உட்புறம்

மாணவர்களே, இப்பாடத்தில் காட்டப்பட்டுள்ள படங்களைக் கூர்ந்து கவனியுங்கள். கரும்புத் தோட்டம், ஆலை, காய்ச்சும் விதம் யாவும் காட்டப்பட்டுள்ளன. தொழிற்சாலையின் உட்புறப் படத்தினை நன்கு கவனித்துப் பாருங்கள். இக்காலத்தில் தொழில்கள் யாவும் மின் சாரத்தின் உதவியால் விரைவாகவும், எளிதாகவும், மிகுதியாகவும், இலாபகரமாகவும் நடைபெற்று வருகின்றன. கரும்புப் பயிர், சர்க்கரை செய்தலாகிய அரிய தொழிலைத் தோற்றுவித்தற்கு ஆதாரமாக இருப்பது உணரத்தக்கது.

நம் நாட்டில் நமக்குத் தேவையான அளவு கரும்பு பயிரிடப்படவில்லை. எனவே, நாம் வேறு நாடுகளிலிருந்து சர்க்கரையைத் தருவித்துக் கொள்கின்றோம். இதனை நாம் நிறுத்திவிட வேண்டும். இந்திய அறிஞர்களில் சிலர்

கரும்பு ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளனர். அவர்களுள் சிறந் தவராக ஸர் டி. எஸ். வேங்கடராமன் அவர்களைக் குறிப் பிடலாம். கரும்பினை மிகுதியாகவும், விரைவாகவும் பயிர் செய்வதற்கேற்ற வழி வகைகளை அவர் கண்டுபிடித்துள் ளார். அவர் கூறும் முறைகளை வெளி நாட்டவரும் விரும்பி யேற்றுப் பின்பற்றுகின்றார்கள். இன்னும் சில ஆண்டு களில் நமக்குத் தேவையான அளவு கரும்பு நம் இந்தியா விலேயே கிடைத்து விடும் என்று நாம் எதிர்பார்க்கலாம்.

### பொருள் காண்க

அணி, இன்றியமையாத, வளம், புன்செய், துண்டம், புல்லினம், வடு, சுண்டிவிடாது, இக்கு, கன்னல், வேழம், தளிர், இடைவெளி, கழி.

### சிறுவிடை வினாக்கள்

1. பழமொழி என்றால் என்ன ?
2. நன்செய், புன்செய்—விளக்குக.
3. கரும்பு பயிரிடும் முறை யாது ?
4. கரும்பினால் உண்டாகும் கைத்தொழில் யாது ?
5. சல்லிவேர்—விளக்குக. மற்றொரு வேர் யாது ?
6. கரும்பு எவ்வினத்தைச் சேர்ந்தது ? மற்றையவை யாவை ?
7. அறுசுவை எவை ?
8. கரும்பினை எதற்கு உவமையாகப் புலவர் கூறுவர் ? ஏன் ?
9. கீழே காணப்படும் செய்திகளுள் சில சரியானவை; சில தவறானவை. அவற்றுள் சரியானவற்றிற்கு எதிரில் 'சரி' என்றும், தவறானவற்றிற்கு எதிரில் 'தவறு' என்றும் எழுதுக.

அ. கரும்புப் பயிருக்கு உஷ்ணம் மிகுதியாக வேண்டும்.

ஆ. கரும்பிற்கு விதைகள் உண்டு.

இ. கரும்பின் பூ வேலைப்போல் இருக்கும்.

ஈ. இன்சொல்லிற்கு உவமையாகப் புலவர்கள் கரும்பைக் குறிப்பிடுவது வழக்கம்.

உ. ஸர் சி. வி. இராமன் அவர்கள் கரும்பு ஆராய்ச்சியில் ஈடு பட்டிருக்கிறார்.

ஊ. இராஜபுதனத்தில் கரும்பு மிகுதியாகப் பயிர் செய்யப் படுகிறது.

## கட்டுரையாக்கம்

(1) நன்செய், புன்செய் நிலங்களைப்பற்றி ஆறு வரிகள் எழுதுக.

(2) 'பயிர்த் தொழில்' என்பதுபற்றிப் பேசக் குறிப்புகள் தயார் செய்க.

(3) 'கரும்பினால் நாட்டிற்கு விளையும் நன்மைகள்'—என்பதுபற்றிப் பத்து வரிகள் எழுதுக.

(4) பழைய காலத்துக் கரும்பாலைக்கும், தற்காலத்திய ஆலைக்கும் உள்ள வேறுபாடுகளை எட்டு வரிகளில் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. **பிரித்துக் காட்டுக :—**
உணவாவதாகிய, நெற்பயிர், வெட்டியெறிந்து, கருப்பஞ்சாறு, அச்சாற்றை, இனியவுணவு, செங்கரும்பு.

2. **புணர்த்திக் காட்டுக :—**
நிலங்களில் + தான், கரும்பு + சாறு, இரும்பு + தூண், துண்டம் + துண்டம், தனி + தனி.

3. தழை, தலை, தளை, கழை, கலை, களை, } இவற்றை ஒவ்வோர் வாக்கியத்தில் அமைத்துக் காட்டுக.

4. நீர்வளமும், நிலச்செழிப்புமுள்ள இடங்களில் கரும்புப் பயிர் உண்டாக்கப்படும்.
—இஃது என்ன வாக்கியம்? இதனைச் செய்வினை வாக்கியமாக மாற்றுக.

5. நீர்வளம், நிலச்செழிப்பு, சொரசொரப்பு, அறுசுவை, கைத்தொழில், மின்சாரம், செல்லச் செல்ல, வளர வளர: பொருள் பொருந்துமாறு இவற்றை வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.

## 3. மெய்ப்பொருள் கண்ட மன்னன்

தமிழகம் மிகப் பழைமையானது. அது சேரமண்டலம், சோழ மண்டலம், பாண்டி மண்டலம், தொண்டை மண்டலம் என நான்கு மண்டலங்களாகப் பிரிந்திருந்தது. தொண்டை மண்டலம் சோழர்களாலும், பல்லவர்களாலும், தொண்டைமான் குடியினர்களாலும் ஆளப்பட்டு வந்தது. தொண்டைமண்டலத்தில் சிறு நாடுகள் பல உள. அவற்றுள் **மலையமான்** என்னும் மரபைச் சேர்ந்த சிற்றரசர்களால் ஆளப்பட்ட நாடு **மலையமான் நாடு** அல்லது **மலாடு** எனப் பெயர் பெறும். அந்நாட்டிற்குச் சேதி நாடு என்ற பெயரும் உண்டு. அஃது இக்காலத்தில் தென்னார்க்காடு ஜில்லாவிலுள்ள திருக்கோவலூரை அடுத்த பகுதியாகும். அச்சேதி நாட்டிற்குத் தலைநகர் திருக்கோவலூர்.

முன்னொரு காலத்தில் மலையமான் மரபைச் சேர்ந்த அரசர் ஒருவர் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு சேதிநாட்டை ஆண்டு வந்தார். அவர் பெயர் **மெய்ப்பொருள் நாயனர்** என்பது. அம்மலாடர் வேந்தர் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். அம்மன்னர் சிவபெருமானிடத்து அளவிலாப் பக்தி உடையவர்; ஈசனடியாரிடத்து மிக்க அன்பு பூண்டவர்; வேதநெறியைக் கடைபிடித்தொழுகும் நேர்மையாளர்.

அவ்வேந்தர் கோல் நெறி கோடாது ஆட்சி புரிந்து வந்தார். அவர் வீரத்திலும் சிறந்தவர். ஆதலால், பகைவர்களைத் தம் தோள்வலியால் அடக்கி நாட்டைச் செம்மையாக அமைதியுடன் ஆண்டுவந்தார். சிவனடியார் வேடத்தையே சிந்தையில் இருத்திய அவர் சிவனையும், சிவனடியாரையும் வணங்கி வந்தார். மேலும் அவர் சிவபெருமான் கோயில்களுக்கு நிவந்தங்கள் அளித்து பூசை, திருவிழா முதலியன சிறப்புற நடத்தி வந்தார். சிவனடியார்களைக் கண்டால் அளவிலா அன்புடனும், உவகையுடனும், அவர்கள் வேண்டுவனவற்றை வரையாது அளிக்கும் வள்ளலாகவும் அவர் விளங்கினர். அந்நிருபர் சிவனடி

யார்களைச் சிவனெனவே மதித்தொழுகும் சீலமுடையவர். திருநீறும், அக்கமணியும் அணிந்து விளங்கும் இயல்பினர் அக்காவலர்.

இவ்வாறு மெய்ப்பொருள் நாயனர் அரசாண்டு வருங்கால் முத்திநாதன் என்றோர் அரசன், அவரைப் போரில் வெல்லக் கருதிப் படைகளைத் திரட்டினன். அவன் பலமுறை பெருஞ் சேனைகளோடு வந்து போர் புரிந்தான். மெய்ப்பொருள் நாயனர் தாமும் படை திரட்டி எதிர்த்துப் போர் புரிந்து ஒவ்வொரு முறையும் வெற்றி பெற்றார். முத்திநாதனே தோல்வியே பெற்றதுமன்றித் தன் சேனையிலுள்ள குதிரை, யானை, காலாள் முதலியவற்றையும் இழந்து ஓடினன். அதனல், அவனுக்கு மெய்ப்பொருள் நாயனர்மீது பகைமை அதிகமாக உண்டாயிற்று. தான் அடைந்த மானக்கேட்டை முத்திநாதன் உன்னி உன்னி வருந்தினன். அவன் எவ்வாருயினும் மெய்ப்பொருள் நாயனரை வென்று, பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று உறுதி செய்து கொண்டான். ஆனல், அவரைப் போரில் வெல்லுதல் எளிதன்று என்பது அவனுக்குத் தெரியும். எனவே, நாயனரை வஞ்சகத்தால் வெல்ல நெஞ்சகத்தில் உறுதி செய்து கொண்டான்.

மெய்ப்பொருள் நாயனரின் சீலத்தையும் குணநலன்களையும் முத்திநாதன் நன்கறிந்திருந்தான். ஆதலால், அவரை ஏமாற்றி வெல்வதே ஏற்றது என எண்ணினன். தன் சூழ்ச்சியை முடித்துக் கொள்வதற்குத் தக்கதோர் வேடம் சிவனடியார் வேடமே என்று அவன் கருதினன். ஆகவே, முத்திநாதன் உடல் முழுவதும் நீறணிந்தான்; அக்கமணி மாலைகளைப் பூண்டான்; சடைகளைச் சேர்த்துக் கட்டினன்; கூரிய வாளை மறைத்து அமைத்த புத்தகக் கவளி ஒன்றைக் கையில் ஏந்திக்கொண்டான்; கள்ள உள்ளத்துடன் அரண்மனை வாயிலை அடைந்தான்.

அரண்மனையின் உட்புகும் சிவனடியார்களை யாரும் தடுத்தல் கூடாது என்பது அரசனின் கட்டளையாகும். ஆகவே, சிவனெனவே பொலியும் திரு

வடிவு கொண்ட முத்திநாதனைக் காவலர் தடையின்றி அரண்மனையினுள்ளே ஏகுமாறு விடுத்தனர். பொய்த் தவ வேடம் பூண்ட முத்திநாதன் வாயில்கள் பலவற்றைக் கடந்து சென்று, அரசனும் அரசியும் துயிலுறும் அறையின் வாயிலை நெருங்கினன். அங்குக் காவல் செய்து கொண்டிருந்த தத்தன் என்பான், "அரசர் துயில்கின்றார்; சமயம் அறிதல் வேண்டும்," என்று கூறித் தடுத்தான். தடுக்கப்பட்ட முத்திநாதன், "யாம் அரசருக்குச் சிவாகமம் ஒன்று உபதேசிக்க வந்துள்ளேம்; ஆதலால் நீ என்னைத் தடுக்காதே; நில்," என்று கூறி உட்சென்றான். உட்புகுந்த முத்திநாதன்மீது ஐயங்கொண்ட தத்தன் தனது கருத்தையும் கண்ணையும் அப்புதியோன்பாற் செலுத்தி, சிவனடியாராதலின் சினந்து கூறமாட்டாது நின்றனன்.

புதியோன் புகுதலும் அரசி திடுமென விழித்தெழுந்து மன்னவரை எழுப்பினள். மன்னர் துயில் நீங்கி எழுந்து சிவனடியாரைக் கண்டார்; மனம் மகிழ்ந்தார். தலைமேற்குவித்த கையினராய், அவர், "நலம் பல உண்டாகுமாறும், என் வாழ்வு சிறப்புறுமாறும், இங்கு எழுந்தருளிய காரணம் யாதோ?" என்று பணிந்து கேட்டார். அதற்கு முத்திநாதன், "உம் தலைவரான சிவபெருமான் அருளிய ஆகமங்களுள் ஒன்று என்பாலுள்ளது; உலகில் எங்குமில்லாதது; உமக்கு உபதேசிக்கக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான். அம்மொழி கேட்ட மன்னர், "இதனைவிடப் பெறற்கரிய பேறு உண்டோ? உபதேசித்தருளும்" என வேண்ட, முத்திநாதன், "அதனைத் தாங்கள்மட்டும் தனித்திருந்து கேட்டல் வேண்டும்; உமது மனைவியார் இங்கிருத்தலாகாது" என்றான். உடனே மெய்ப்பொருள் நாயனர் தம் மனைவியாரை அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டார். பின்பு அவர் சிவனடியாரைத் தக்கதோர் இருக்கையில் அமர்த்தி, தாம் கீழிருந்து, "இனி, அருள்செய்து உபதேசிக்க வேண்டும்" என்று வணங்கினர்.

முத்திநாதன், வஞ்சகமான புத்தகக் கவளியை மடிமேல் வைத்து, புத்தகம் எடுப்பான்போல அவிழ்த்தான். மெய்ப்பொருள் நாயனூர் வணங்கி நின்றபொழுது, அவன் விரைவில் வாளையெடுத்துத் தான் நினைத்து வந்தபடியே அவரைக் குத்திவிட்டான். குத்துண்டு வீழ்கின்ற மெய்ப்பொருள் நாயனூரோ, 'சிவவேடமே மெய்ப்பொருள்' என்று வணங்கியே நிலத்தில் சாய்வாரானூர். தான் தடுத்தும் கேளாது மீறிச்சென்ற முனிவன் பின்னே கண்ணைச் செலுத்தி நின்ற தத்தன் விரைந்தோடி வந்து, அக்கொடியவனைத் தன் உடைவாளினூல் வெட்டத் தொடங்கினூன். அந்நிலையில் குருதி சொரிய நின்ற மெய்ப்பொருள் நாயனூர், "தத்தா, இவர் நமர். தீங்கு செய்யாதே" எனத் தடுத்துக் கூறி நிலத்தில் சாய்ந்தார்.

தத்தன் செய்வதறியாது திகைத்து, மன்னவரை வணங்கி, "நான் செய்யக்கடவது என்ன?" என்று கேட்டான். அதற்கு மன்னர், "எம் தலைவரான இவ்வடியார்க்கு எத்தகைய இடையூறும் நேரிடாவண்ணம் காத்து, இவ்வூரின் வெளிப்புறத்தே கொண்டுபோய் விடுக," என்றூர். மன்னர் பணியை ஏற்ற தத்தன், முத்திநாதனை அழைத்துச் சென்றூன். அதற்குள் அரண்மனையில் பரபரப்புண்டாக, யாவரும் திரண்டு, 'பொய்த்தவ வேடத்தானைக் கொல்வோம்' என்று நெருங்கிச் சினந்து வந்தனர். அவ்வாறு வந்தவர்களுக்குத் தத்தன் அரசனது ஆணையைக் கூறித் தடுத்து, முத்திநாதனை அழைத்துச் சென்று, மக்கள் நடமாட்டம் இல்லாத காட்டில் விடுத்து மீண்டான்.

'சிவனடியார் இடையூறின்றிச் சென்றூர்' என்னும் சொல்லைக் கேட்கும் ஆவலோடு உயிர் வைத்துக்கொண்டிருந்த மன்னர்முன் தத்தன் வந்து, "பொய்ம்மையான வேடம் பூண்டுவந்து வெற்றிகொண்டவனை இடையூறில்லாது ஊரின் புறத்தே விடுத்து வந்தேன்" என்று கூறிக் கண்களில் நீர் வடித்து நின்றூன். அம்மொழிகளைக் கேட்ட மன்னர், "இன்றெனக்கு நீ செய்த உதவியை யாரே செய்ய வல்லவர்?" என்று கூறிக் கருணையோடு

பார்த்தார். பின்னர், அரசாட்சிக்குரிய மக்களையும், அன்புமிக்க சுற்றத்தாரையும் நோக்கி, "திருநீற்றின்மீது நான் அன்பு வைத்திருந்ததுபோலவே நீங்களும் அன்பு வைப்பீராக" என்று கூறிப் பொன்னம்பலத்தில் நடனம் செய்யும் நடராசப் பெருமான் திருவடிகளைத் தியானம் செய்தார். சிவபெருமான் பார்வதி தேவியாரோடு காட்சி யளிக்க, மெய்ப்பொருள் நாயனர் மன அமைதியோடு இறைவன் திருவடி நீழல் அடைந்து, அழியா இன்பம் எய்தினர்.

இத்தகைய பெரியார்களின் சரித்திரங்களைச் **சேக்கிழார்** என்னும் பெரும்புலவர் **பெரிய புராணம்** என்ற நூலில் சுவை படப் பாடியுள்ளார்.

### பொருள் காண்க

நிருபர், தோள்வலி, நெறி, கோடாது, நிவந்தங்கள், வரையாது, வள்ளல், உவகை, சீலம், நெஞ்சகம், நீறு, கவளி, ஐயம், துயில், பேறு, ஆகமம், குருதி, இடையூறு, பொன்னம்பலம்.

### சிறுவிடை வினுக்கள்

1. தமிழகத்தின் பிரிவுகளைக் கூறுக.
2. தமிழகத்தை ஆண்டு வந்த அரச மரபினர்கள் யாவர்?
3. மலாடு—இதற்குள்ள வேறு பெயர்கள் யாவை?
4. மெய்ப்பொருள் நாயனரின் இயல்பை விளக்குக.
5. முத்திநாதன் என்பான் யாவன்? அவன் ஏன் வஞ்சக வேடம் பூண்டான்?
6. முத்திநாதன் பூண்ட வேடத்தை விளக்குக.
7. தத்தன் என்பவன் யாவன்?
8. முத்திநாதன் தன் கருத்தை எவ்வாறு முற்றுவித்துக்கொண்டான்?
9. "தத்தா, இவர் நமர். தீங்கு செய்யாதே"—சந்தர்ப்பம் தருக.
10. அரசர் ஆணையும் தத்தன் செயலும் யாவை?
11. "இன்றெனக்கு நீ செய்த உதவியை யாரே செய்யவல்லார்?"—சந்தர்ப்பம் தருக.
12. அரசர் இறுதியில் யாவர்க்கும் கூறியது என்ன?
13. அரசர் பெற்ற பேறு யாது?
14. பொன்னம்பலம் எங்குள்ளது?

15. சில ஊர்ப் பெயர்களும், அவை அமைந்துள்ள பகுதிகளும் கீழே மாற்றிக் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைச் சரியாகப் பொருத்தி அமைக்க:—

| | | |
|---|---|---|
| தஞ்சை | — | சேரநாடு |
| திருச்சி | — | பாண்டிநாடு |
| மதுரை | — | சோழநாடு |
| திருவஞ்சைக்களம் | — | பாண்டிநாடு |
| கொற்கை | — | சோழநாடு |

## கட்டுரையாக்கம்

1. வஞ்சக நெஞ்சத்தார் செயல்களை விளக்கி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
2. மெய்யன்பர்களின் இயல்புகளை விளக்கி எட்டு வாக்கியங்கள் எழுதுக.
3. 'தமிழகம்' என்பதுபற்றி உங்கள் வகுப்பு மாணவர் கழகத்தில் பேசுவதற்கு வேண்டிய குறிப்புகளைத் தயார் செய்க.
4. 'மெய்ப்பொருள் நாயனாரின் திருநீற்றுப்பற்று' என்பதை விளக்கிப் பதினைந்து வரிகள் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. **பிரித்துக் காட்டுக:—** தமிழகம், சிற்றரசர், சிவனடியார், நீற்றன்பு, சிறப்புற, நீறணிந்தான்.

2. **சேர்த்து எழுதுக:—** பெருமான் + இடத்து, ஈசன் + அடியார், அந்த + சிவனடியார், அ + நிருபர், படைகளை + திரட்டினான், தடை + இன்றி, உள் + புகுந்த.

3. இப்பாடத்திலிருந்து தனி வாக்கியம், தொடர்வாக்கியம், கட்டளை வாக்கியம், உணர்ச்சி வாக்கியம் என்பவற்றிற்கு ஒவ்வோர் உதாரணம் எடுத்து எழுதுக.

4. கீழ்வருவனவற்றை வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக:— உறுதி, பழிக்குப் பழி, வஞ்சக நெஞ்சம், பரபரப்பு.

## 4. பர்மாவும் பர்மியரும்

இந்தியாவின் கிழ்ப்பகுதியிலுள்ளது பர்மா நாடு. பர்மா நீர்வளமும், நிலவளமும் உடையது. மலைத்தொடர்கள் இந்தியாவையும் பர்மாவையும் வேறு பிரிக்கின்றன. இதன் மேற்குப் பக்கத்தில் வங்காளக்குடாக் கடல் இருக்கிறது. வடபால் தொடங்கும் அம்மலைத்தொடர்கள் தென்பால் வரையில் பரவியுள்ளன. ஆதலால் மேடு பள்ளங்கள் அதிகம். இப்பள்ளத்தாக்குகளின் வழியாக ஐராவதி, சிண்ட்விங், சால்வீன் என்னும் பேராறுகள் ஓடிப் பாய்கின்றன. இவற்றுள் ஐராவதியே தலைசிறந்ததாகும். இந்நாடு இருபாகமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை மேல் பர்மா, கீழ்பர்மா என்பன. மேல்பர்மாவுக்கு மாண்டலேயும், கிழ் பர்மாவுக்கு ரங்கூனும் தலைநகர்கள். சென்னை மாகாணத்திற்கு உதகமண்டலம் கோடை வாசஸ்தலமாக விளங்குவதுபோல் மாய்யோ என்பது பர்மாவுக்கு மலைநாட்டுக் கோடை வாசஸ்தலமாகும். இஃது எழில் வாய்ந்தது. பர்மாவின் சில பகுதிகளைச் சோழ அரசர்கள் முன்பு கைப்பற்றி ஆண்டுள்ளனர்.

பர்மாவில் வாழ்வோர் பர்மியர். அவர்கள் இயற்கை எழில் வாய்ந்தவர்கள்; முழந்தாள் வரை நீண்டு தொங்கும் கூந்தலை உடையவர்கள். ஆடவர்கள் தலைமயிரை வாரிச் சுற்றி உச்சியில் முடிவார்கள். பெண்டிரோ இயற்கையாகத் தமக்குள்ள தலைமயிருடன், கடைகளில் விற்கும் சவரிகளாலான பொய்க் கொண்டைகளையும் வாங்கிச் சேர்த்து முடிந்து கொள்வர்.

செல்வப் பர்மியர் பட்டுடையும், ஏழைப் பர்மியர் பருத்தியுடையும் அணிந்துகொள்வார்கள். பெண்கள் அரையில் ஒரு நிற ஆடையும், மேலே வேறு நிற ஆடையும் அணிந்து கொள்வார்கள். அரை ஆடையின் இரு தலைப்புகளும் இணைத்துத் தைக்கப்பெற்றிருக்கும். அதனை லுங்கி ஆடை என்று கூறுவர். அவர்கள் பொன் அணிகள் அணிவதுண்டு. ஆனால் அவற்றை அவர்கள் சில சமயங்

களில்தான் அணிந்து கொள்வார்கள். பர்மா மலைப் பாங்கான நாடு. ஆதலால் நம் நாட்டைப்போல் செங்கற்



சூளை போட இயலுவதில்லை. எனவே பர்மியரின் இல்லங்கள் பெரும்பாலும் மூங்கில்களால் ஆயவை. தேக்கு மரங்களால் ஆகிய வீடுகளும் அங்கு உண்டு. பர்மாவின் காடுகளில் தேக்கு மரங்கள் அதிகம். அவற்றை வேரோடு வெட்டிக் கீழே தள்ளித் துண்டுகளாக அறுப்பார்கள்; யானைகளைக் கொண்டே அத்துண்டுகளை ஆறுகளில் இடுமாறு செய்வார்கள். அவற்றை ஆற்றுநீர் அடித்துக் கொண்டு செல்லும். வேறு நகரங்களின் துறைகளில் தயாராக நிற்கும் பர்மியர் அவற்றை இழுத்துக் கரையிற் சேர்ப்பர். பர்மாவின் தேக்கு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

பர்மாவில் பெரும்பாலும் பயிர்த்தொழிலே நடைபெறுகிறது. பர்மாவின் சமநிலப் பகுதிகளில் நெல்

ஏராளமாகப் பயிராகிறது. பர்மா அரிசி ஆண்டுதோறும் பெரிய அளவில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றது. பர்மாவில் கரும்பு, தேயிலை, புகையிலை, ரப்பர் முதலியனவும் பயிராக்கப்படுகின்றன. இவையன்றி மண்ணெண்ணெய்க் கிணறுகள் பர்மாவில் பல உள்ளன. அவற்றிலிருந்து மண்ணெண்ணெய் எடுத்து வேறு நாடுகளுக்கு அனுப்புகிறார்கள்.

பர்மியர் வாழ்க்கை விநோதமானது. ஆடவர்கள் பெரிதும் சோம்பலுடையவர்கள். அந்நாட்டுப் பெண்டிரே வீட்டு வேலைகளையும், வெளி வேலைகளையும் கவனித்துக் கொள்கின்றனர். உடல் வருந்தி உழைத்துப் பொருளீட்ட வேண்டும் என்ற எண்ணம் பர்மிய ஆடவனிடம் தோன்றா திருப்பது பெருங் குறையே. பர்மியப் பெண்களில் பெரும் பாலோர் வாணிகம் செய்கின்றனர். வாணிகத்தில் ஈடு படாத பர்மியப் பெண்களைக் காணல் அரிது. ஆடவர்கள் அவ்வப்போது வயல்களுக்குச் சென்று பயிர்த் தொழிலைச் செய்வர். பர்மாவில் பெண்களுக்கு அதிகாரமும் செல் வாக்கும் அதிகம். இக்காலத்தில் பர்மியர் பிறநாட்டாரோடு கலந்து பழகுகின்றனர். அவர்களுடைய நாகரிகமும் நன்கு வளர்ந்துள்ளது.

பர்மியர் சிறிது குள்ளமானவர்; வெண்மை கலந்த மஞ்சள் நிறமுடையவர். ஆடவர்கள் தம் உடம்பில் சிங்கம், புலி, யானை, சிறுத்தை முதலான விலங்குகளின் உருவங் களைப் பச்சை குத்திக் கொள்வர். அவ்விலங்குகளின் வீரம் தங்களுக்கு அமையும் என அவர்கள் நம்புகின்றனர். நம் நாட்டிலுள்ளவைபோன்ற பல சாதிப் பிரிவினைகள் பர்மியரிடம் இல்லை. அதனால் அனைவரும் ஒரு தன்மையின ராகவும் ஓரினத்தவராகவும் கருதப்படுகின்றனர். அவர் களிடம் உலோபம், பேராசை, பொறாமை என்னும் தீய குணங்கள் இல்லை. அவர்கள் தம்மை 'தெய்வப் பிறவி யினர்' என எண்ணும் இயல்புடையவர்கள்.

பர்மியரைச் சிறிது செருக்குடையவர் என்றே கூறலாம். மேலும் அவர்கள் சிறிதளவு முன்கோபமும்

உடையவர்கள். பர்மியர் குறைந்த வருவாயையுடைய வேலைகளைச் செய்யத் துணியார். இன்பதுன்பங்களை ஒப்ப நோக்கும் உயர்ந்த இயல்பு அவர்களிடம் உண்டு. அவர்கள் ஊழ்வலியில் நம்பிக்கை உடையவர்கள். ஆதலால் 'நாளைக்கு என் செய்வது' என்னும் கவலை அவர்களிடம் தோன்றுவதில்லை. பொருளைச் சேமித்து வைக்கும் பழக்கமும் அவர்களிடம் இல்லை. அவர்கள் தம்மிடமுள்ள பொருளை அறச்செயல்களுக்கும், சமயச் சார்பான கொண்டாட்டங்களுக்கும், விருந்துகளுக்கும் பெரிதும் பயன்படுத்துவர்.

பர்மியர்களுக்கு விளையாட்டில் விருப்பம் அதிகம். கோழிப் போர், ஆட்டுக்கிடாய்ப் போர், மற்போர், குதிரைப் பந்தயம் என்பன போன்ற ஆட்டங்களில் பர்மியர் தம் பொருளைச் செலவு செய்து மகிழ்வர். அவர்கள் தங்களுடைய சிறந்த வேலைகளைக்கூட விடுத்து ஆட்டங்களைக் காணச் செல்வர். பர்மியர் நாடகங்களில் ஊக்கமுள்ளவர்; தாமே நாடகத்தில் நடிப்பர். செல்வர்கள் நாடகத்தின் செலவை ஏற்றுக்கொள்வார்கள். அதனால் நாடகத்தைக் காணக் கட்டணம் இல்லை. ஏழைகள் கட்டணம் இன்றி நாடகம் பார்த்துக் களிப்பர். அவர்களுடைய நாடகங்கள் பெரும்பாலும் மத சம்பந்தமான கதைகளாக இருக்கும்.

பர்மியப் பெண்கள் சுதந்திரம் உடையவர்கள். அவர்கள் பதினெட்டு வயதான பிறகே தமக்கேற்ற ஆடவரை மணந்துகொள்வர். பர்மியப்பெண்கள் நுண்ணறிவு படைத்தவர்கள்; இல்வாழ்க்கையை இனிது நடத்தும் திறத்தினர். கணவனும் மனைவியும் கலந்து ஆலோசித்த பின்னரே தான் எக்காரியமும் செய்யப்படும். அதனால் கணவன் மனைவியர்களுக்குள் அன்பு ஊன்றி வளர்கிறது. கணவன் இறந்து விட்டால் மனைவி மறுமணம் செய்து கொள்ளும் முறை பர்மியரிடம் உண்டு. கணவன் மனைவி என்பாருள் மனவேற்றுமை ஏற்படின் அவர்கள் மண நீக்கம் எனும் 'விவாக ரத்து' செய்து கொள்ளலாம். அப்பொழுது வீட்டிலுள்ள பொருள்களை இருவரும் சமமாகப் பங்கிட்டுக்கொள்

வர். அதன்பின் ஆண் குழந்தைகளைத் தந்தையும், பெண் குழந்தைகளைத் தாயும் அழைத்துத் தம்பால் இருத்திக் கொண்டு காப்பாற்ற வேண்டும். பெண்களுக்கு வெளி உலகில் கலந்து பழக உரிமை உண்டு. கணவன் இல்லாத காலத்தில் வீட்டிற்குச் செல்லும் விருந்தினரை மனைவியே உபசரிப்பாள்.

பர்மியர்க்கு முக்கிய உணவுப் பொருள் அரிசி. சமைத்த உணவைத் தட்டில் அமைத்து, வீட்டில் உள்ளார் அனைவரும் ஒன்றுசேர்ந்து உண்பர். அவர்களுக்குத் தனித்தனி உண்கலங்களும் உண்டு. பர்மியரிடம் குருட்டு நம்பிக்கையும் மூடப்பழக்கங்களும் அதிகம். பர்மியர் அழகுடைய பொருள்களைப் பெற ஆசைகொள்வர். அழகுள்ள பொருள்கள் எந்த நாட்டினவாயினும் அவர்கள் வாங்குவர்.

பர்மாவில் பர்மியரே யன்றி இந்தியர், சீனர், ஐரோப்பியர், முஸ்லிம்கள் முதலானவரையும் காணலாம். இந்தியர் அங்குள்ள நிலங்களில் வேலை செய்யச் சென்றவர் ஆவர். சீனர் வியாபாரத்தின் பொருட்டும், ஓவியக்கலை புகட்டும் பொருட்டும் போந்தவராவர். முஸ்லிம்கள் வியாபாரத்தின் பொருட்டே அங்குக் குடியேறினர். ஐரோப்பியரோ நாட்டைப் பிடித்து ஆள எண்ணிப் போந்தவர்.

பர்மா ஏறத்தாழப் பம்பாய் மாகாணத்தினை ஒத்துளதாகும். தேக்கு, நெல், மண்ணெண்ணெய், பொன், வெள்ளி, இரும்பு, தகரம், செம்பு, ஈயம், வைரம் முதலியன பர்மாவிலிருந்து வெளி நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. பிறநாட்டு வைரங்களைவிட ரங்கூன் வைரம் விலையிற் குறைந்தது. இத்தகைய பர்மா ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் இந்தியாவைப்போல் அமைந்திருந்தது. இந்தியா சுதந்திரம் பெற்றதும் பர்மாவும் சுதந்திரம் பெற்றது. சுதந்திர பர்மாவும் சுதந்திர இந்தியாவும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்த சகோதரிகள் போன்று அன்பும் உறவும் பூண்டு இன்புற்று மிளிர்வனவாக.

### பொருள் காண்க

தென்பால், கோடை, கூந்தல், இல்லம், உலோபம், ஊழ்வலி, சேமித்து வைத்தல், சமயச் சார்பு, கட்டணம், உண்கலம், எழில், போந்தவர், செருக்கு, மிளிர்தல்.

### சிறுவிடை வினாக்கள்

1. பர்மா எங்குள்ளது? அதன்கண் உள்ள ஆறுகள் எவை?
2. பர்மா எவ்வாறு பிரிக்கப்பட்டுள்ளது? அவற்றின் தலைநகர்கள் யாவை?
3. 'மாய்யோ' பற்றி அறிவது என்ன? இரண்டு வரிகள் எழுதுக.
4. பர்மியரிடம் காணப்படும் தனிப்பட்ட குண நலங்களுள் இரண்டினைக் குறிப்பிடுக.
5. பர்மாவில் தேக்கு மரங்கள் எவ்வாறு அப்புறப்படுத்தப்படுகின்றன?
6. பர்மியரின் ஆடையில் காணப்படும் விசேஷம் யாது?
7. பர்மியர் விளையாட்டு வினோதங்களைப் பற்றி அறிவதென்ன?
8. பர்மாவின்மீது படையெடுத்த சோழ அரசர்களுள் ஒருவர் பெயரைக் குறிப்பிடுக.
9. பர்மா தொழிலுற்பத்தியில் முன்னேற்றமடையக் காரணம் என்ன?
10. கீழ் வருவன ஒவ்வொன்றும் சரியா தவறா என எழுதுக :—

அ. பர்மா இந்தியாவின் மேல்பாலுள்ளது : அரேபியா கீழ்பால் உள்ளது :

ஆ. பர்மியர்கள் நெட்டையானவர்கள்.

இ. பர்மியர் ஊழ் வலியில் நம்பிக்கையுள்ளவர்.

ஈ. பர்மியர் தம்மை 'தெய்வப் பிறவியினர்' என்று கருதும் இயல்புடையர்.

உ. பர்மா இப்பொழுது ஆங்கிலரின் ஆளுகையில் இருக்கிறது.

### கட்டுரையாக்கம்

1. பர்மாவின் இயற்கை வளத்தைப் பத்து வரிகளில் எழுதுக.
2. 'பர்மியர் வாழ்க்கை'—என்பதுபற்றிப் பதினைந்து வரிகள் எழுதுக.
3. 'பர்மாவும் தொழிலுலகும்' என்பதுபற்றிப் பத்து வரிகள் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. கீழ் வருவனவற்றைச் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—

மேடு பள்ளங்கள், வாழ்க்கைப் பயன், ஏராளமாக, ஏறத்தாழ, நம்பிக்கை, இன்பதுன்பங்கள், ஏறக்குறைய.

2. எதிர்ச் சொற்கள் எழுதுக:—

தென்பால் ×
ஏராளமாக ×
பள்ளம் ×
சுகமாக ×
ஓரினத்தவராக ×
தனித்தனி ×

3. பிரித்து எழுதுக:—

மலைத் தொடர், பட்டுடை, ஓரினத்தவர், இந்நாடு, அவ்விலங்கு, செங்கற் சூளை, இயல்புடையர், தமக்கேற்ற, அழகுடைய.

4. பர்மியர் சிறிது குள்ளமானவர்; வெண்மை கலந்த மஞ்சள் நிறமுடையவர்: இஃது என்ன வாக்கியம்? ஏன்? இதனைத் தனித்தனி வாக்கியங்களாகப் பிரித்துக் காட்டுக.

# 5. குண்டூசி கண்ட கருந்தனம்



ஏறக்குறைய நூற்றறுபது ஆண்டுகளுக்கு முன் ஓர் ஆங்கிலச் சிறுவன் பாரிஸ் நகரத்திற்குச் சென்றான். அப்பொழுது அவனுக்கு வயது இருபத்தொன்று. வெளித் தோற்றத்தாலேயே அவன் ஒரு பட்டிக்காட்டான் என்று கூறிவிடலாம். அவன் வறுமையால் வாடி வருந்தினன். இரவு முழுவதும் ஓயாது நடந்ததனல் அவன் தளர்ச்சி அடைந்திருந்தான். அவன் உடல் மெலிவுற்று வலிமையற்று இருந்தது. மற்றும், அவன் அன்று முழுவதும் உணவின் றிப் பசியால் வருந்திக் கொண்டிருந்தான். அவன் முதலில் உணவிற்கு வேண்டிய வழியைச் செய்துகொண்ட பின் னரே வேலைக்கு வழிதேடுவான்போலக் காணப்பட்டான். அவன் கையில் ஒரு காசும் இல்லை. 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்பது பழமொழி யல்லவா? ஆனலும் அவன் மனத்தில் உறுதியுடையவன் என்பதை முகம் நன்கு விளக்கிற்று. தெய்வ நம்பிக்கையுடைய அச்சிறு வனின் உடல் தளர்ந்ததே ஒழிய உள்ளம் தளரவில்லை. அவன் கையில் ஒரு கடிதம் இருந்தது. அக்கடிதம் பாரிஸ் நகரில் உள்ள செல்வமிக்க வியாபாரி ஒருவனுக்கு எழுதிக் கொடுக்கப்பட்டது.

செல்வ வணிகனைச் சிறுவன் அறியான். அதனல் அச்சிறுவன் பலவிடங்களுக்குச் சென்று, பல்லோரைக்

கேட்டு முடிவில் அவ்வியாபாரி இருக்குமிடத்தை அறிந்தான்; அப்பெருஞ் செல்வனைக் கண்டு, தான் கொணர்ந்த காகிதத்தைக் கொடுத்தான். அப்பொழுது அவனது மனம் எவ்வாறு அலைவுற்றது என்று யாரே கூறவல்லார்! ஏனெனில், அப்புதிய நகரில் அவனுக்கிருந்த ஆதரவெல்லாம் அக்கடிதம் ஒன்றேயாம். அக்கடிதத்தால் அவனுக்கு நன்மை ஏற்படாவிடில் அவன் அப்பொழுதே உயிரை விட்டுவிடுவான்போல் தோன்றினன். கடிதத்தினைப் படிக்கும் வியாபாரியின் முகத்தில் தோன்றும் மாற்றங்களையே சிறுவன் கண் கொட்டாது பார்த்துக்கொண்டிருந்தான். வியாபாரியோ அக்கடிதத்தை இறுதிவரை எழுத்தெண்ணிப் படித்துவிட்டு, மனக்கவலையுடன் மடித்து, "என்னுடைய வர்த்தகசாலையில் இப்பொழுதே அளவுக்குமேல் ஆட்கள் உள்ளனர்; இன்னும் அதிகமாய்ச் சேர்த்துக் கொள்ள இடம் இல்லையே" என்று மெல்லிய சொற்களில் கூறினன்.

அவன் மொழிகள் சிறுவன் உள்ளத்தைக் கலக்கின. அவனது திக்கற்ற நிலையைக் கண்கள் விளக்கின. உள்ளம் உரத்தை இழந்தது. துக்கம் மேலிட்டது. வாய் திறந்து வார்த்தை ஒன்றும் கூற அச்சிறுவனுக்கு முடியவில்லை. உறுதி அழிந்தது. உள்ளம் உடைந்தது. அவன் ஒன்றும் பேசாமலே வணிகனை வணங்கி வெளிப்போந்தான். இறைவனை அன்றி வேறு யார் அவனுக்குத் துணை? வெளியில் போகத் தீர்மானித்த அவன் எங்குப் போவது என்றும் அறியான்; கவலைக் கடலுள் மூழ்கினன். ஆனல் அச்சிறுவனைப் பார்த்தது முதல் வணிகனின் உள்ளத்தில் ஏதோ சிறிது நல்ல கருத்துக்கள் தோன்றின. அதனல் அச்சிறுவன் அவ்விடம் விட்டு வெளியே போகும்வரையில் வியாபாரியின் கண்கள் அச்சிறுவனையே பின் தொடர்ந்து சென்றன. அவ்வாறு அவ்வியாபாரி பார்த்துக் கொண்டிருந்ததற்குக் காரணம் இல்லாமலும் இருக்கலாம்; காலத்தைக் கழிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாலும் இருக்கலாம். எதுவாயிருப்பினும் அவன் பார்த்துக்கொண்டிருந்தது வீணுகப் போகவில்லை.

வெளியே போன பையன் அங்கோர் இடத்தில் குனிந்து ஏதோ ஒரு பொருளைத் தரையினின்றும் எடுத்துத் தன் உடையில் செருகிக் கொண்டான். அதனைக் கண்ட வியாபாரி, அதுவரை அச்சிறுவனை அலட்சியமாகப் பார்த்துக் கொண்டிருந்த தன்மை நீங்கி, அதிகமாகக் கவனத்துடன் சிறுவனைப் பார்த்தான். சிறுவன் கண்டெடுத்த பொருள் யாது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? அது ஒரு சிறிய குண்டூசியே அன்றி வேறில்லை. பூமியில் வீழ்ந்து கிடக்கும் குண்டூசி போன்ற அற்பப் பொருள்களை ஏழைகள் பொறுக்கி யெடுப்பது சாதாரண நிகழ்ச்சியே என்று நீங்கள் எண்ணுவீர்கள். அவ்வாறு அற்பமானவற்றைச் சாலையினின்றும் பொறுக்கி யெடுப்பது காணத் தக்க காட்சியும் அன்று என்பது உங்கள் எண்ணம் அல்லவா? ஆனால் அச்செயல், அச்சிறுவனிடம் இயல்பாக அமைந்திருக்கும் தன்மையை விளக்கும் பெருங்குறியாகும் என்று வணிகன் கருதினான். பொருள்களிடத்தில் அவன் செட்டும் சீருமாய் இருப்பான் என்பதை அச்செயல் நன்கு விளக்கிற்று. அதனால் அவ்வியாபாரிக்கு அச்சிறுவனிடத்தில் அன்புண்டாயிற்று. சென்ற சிறுவனை வணிகன் திரும்ப அழைத்தான்; மிகப் பெரியதான காசுக் கடையில் எளிய தொழிலைச் செய்யும் தொழிலாளியாய் அமர்த்திக் கொண்டான். அச்சிறுவன், தான் கண்டெடுத்த குண்டூசியைக் கருத்துடன் வைத்துக் கொண்டான்.

அச்சிறுவன் யார்? அச்சிறுவன் ஜாக்ஸ் லப்பீட்டு என்னும் பெயரினன்; பேயன் நகரத்தில் வாழ்ந்த ஒரு தொழிலாளியின் மகன். அவன் தந்தைக்குப் பத்துப் பிள்ளைகள் இருந்தனர். அந்தத் தந்தை நாள் முழுவதும் உழைத்தே தன் பிள்ளைகளைக் காப்பாற்ற வேண்டிய நிலையில் இருந்தான். லப்பீட்டு காணச் சென்ற வியாபாரியோ, சிறந்த செல்வம் படைத்தவன்; அரசிறைக் கணக்கனும் ஆவான். அச்செல்வன் பெயர் மெஸ்காக்ஸ் என்பது. ஜாக்ஸ் லப்பீட்டினுடைய நடை உடைகள் ஒருபுறமிருக்க இயற்கை அவனுக்குப் பெருந் துணை செய்தது. இயற்

கைக்கு ஏழை, செல்வன் என்ற வேற்றுமை இல்லையல்லவா? மிக அழகான முகம், தனக்கு முக்கிய ஆதாரமான காரியம் கைகூடாமற்போன காலத்திலும் மாறுபாடு அடையாதிருந்த நிலை, பெருந்தன்மை, மிகத் தெளிவான வாய்மொழி, கள்ளங்கபடமற்ற தோற்றம் ஆகிய இவைகள் லப்பீட்டினிடம் அமைந்திருந்தன. அவற்றைக் கண்டே அந்த வியாபாரிக்கு அச்சிறுவனிடத்தில் அன்பு தோன்றிற்று. குண்டூசியை எடுத்த செயல் அவன் பொருள்களினிடத்து மிகவும் கருத்துடையவன் என்பதை விளக்கியது.

பணியை ஏற்ற சில நாட்களுக்குள் சிறுவனது திறமை நன்கு வெளிப்பட்டது. ஆட்சித் திறம் அச்சிறுவன்பால் காணப்பட்டது. யுக்தி, புத்தி, சாமர்த்தியம் என்பன அச்சிறுவனது ஒவ்வொரு செயலிலும் காணப்பட்டன. அதனால் அச்செல்வ வியாபாரிக்கு அவனிடம் அன்பும் மகிழ்ச்சியும் உண்டாயின. சிறுவனே தானாகவே முயன்று, எல்லாவற்றையும் கூர்ந்து நோக்கி அரிய விஷயங்களை அறிந்தானே அன்றி எங்கும் அவன் முறையாகப் படித்து அறிந்தவன் அல்லன். வேலை செய்யும் பழக்கத்தையும் அவன் அதிகமாய்ப் பெற்றிருக்கவில்லை. அவன் வேலை செய்யப் புகுந்ததும், எவ்விதத்திலாயினும் பொருள் சேர்த்துச் செல்வனாக வேண்டும் என்ற நோக்கங் கொண்டல்ல. ஆனால், கடவுள் தனக்கு அளித்துள்ள திறமையை வீணாக்காது அனுபவத்தில் காட்ட வேண்டும் என்னும் கருத்துக்கொண்டே அச்சிறுவன் அவ்வேலையை ஏற்றான்.

தொழிலேற்றது முதல் அவன் அற்பமென்று எதனையும் கருதாததுடன், பல நற்குணங்கள் அமைந்தவனாகவும் விளங்கினான். கள்ளங்கபடமற்ற உள்ளத்தோடு தொழிலில் ஊக்கமுடையவனாகவும் அவன் காணப்பட்டான். தொழிலில் ஒழுங்கு முறையைக் கையாண்டான். தன் புத்திக்குத் தோன்றியதே சரியானது என்ற பிடிவாதம் அவனிடம் ஒருநாளும் தோன்றியதில்லை. பிறர் ஏதாவது எடுத்

துரைத்தால் அவற்றை ஆராய்ந்து பார்த்துத் தக்கனவற்றைக் கொண்டு தகாதனவற்றைத் தள்ளுவான். அதனல் ஆலோசனையில்மட்டுமன்றி, காரியங்களைத் தானே ஆய்ந்து பார்த்து நடத்தும் முறையிலும் அவன் மிக வல்லவன் என்பது அச்செல்வ வணிகனுக்குத் தெரிந்தது. அதனல் லப்பீட்டு விரைவில் அந்த வர்த்தகசாலைக் கணக்கு வழக்குகளைப் பார்க்கும் விசாரணைத் தலைவனுக ஏற்படுத்தப்பட்டான். நாளுக்கு நாள் அவனுடைய அறிவும் ஆற்றலும் வெளிப்படலாயின. அதனல் அச்செல்வ வியாபாரிக்கு லப்பீட்டின்மீது விசுவாசமும் நம்பிக்கையும் மிகுதியாகத் தோன்றின. அதன் பயனுக அவன் பொருளாளன் பதவியை ஏற்ருன். அவனது செயல் படிப்படியாக அவனை உயர்ந்த நிலைக்கு உய்த்துக் கொண்டே வந்தது. அம்மட்டோ? லப்பீட்டு அவ்வர்த்தக சாலையின் பங்காளருள் ஒருவனுனன். மெஸ்காக்ஸ் இறந்ததும் அவ்வர்த்தகசாலைக்கு லப்பீட்டே தலைவன் ஆனன். அஃது அவன் பெருமையை விளக்குகிறது அல்லவா?

பின்னர், 'லப்பீட்டு அண்டு கம்பெனி' என்று ஒரு வர்த்தகசாலை ஏற்பட்டது. லப்பீட்டு தன்னை ஆதரித்த செல்வ வியாபாரியின் மகனுக்குத் தன் வர்த்தகசாலையிலிருந்து ஆண்டுதோறும் ஒரு பங்குத்தொகையை அளித்து வந்தான். இஃது அவனுடைய செய்ந்நன்றி மறவாமையைப் புலப்படுத்துகிறதன்றோ? பின்பு அவன் பெருஞ் செல்வனுகி அறங்கள் பல செய்து அழியாப் புகழை அடைந்தான். சிக்கனம், எவற்றையும் அற்பமாகக் கருதாமை, வாழ்விலும் தாழ்விலும் உறுதியுடைமை, பிடிவாதமில்லாமை, பிறர் கூறுவனவற்றைக் கேட்டு ஆராய்ந்து அறிதல், உண்மை உடைமை, ஒழுங்கு என்பன ஒருவனை உயர் நிலையிற் சேர்க்கும் உத்தம குணங்கள் என்பதை லப்பீட்டின் வாழ்க்கை வரலாற்றினல் நாம் நன்கு உணரலாம்.

**பொருள் காண்க**

வெளித் தோற்றம், தளர்ச்சி, வர்த்தகன், மாற்றம், ஆதரவு, நிகழ்ச்சி, பெருங்குறி, ஆதாரம், பணி, கபடம், சிக்கனம், உய்க்கும், புலப்படுத்துதல்.

## சிறுவிடை வினக்கள்

1. முதற் பத்தியில் வந்துள்ள பழமொழி யாது? விளக்குக.
2. வணிகனை அடைவதற்குமுன் சிறுவனது நிலை எத்தகையதாக இருந்தது?
3. சிறுவனது கண்கள் எவற்றை விளக்கின?
4. சிறுவன் வியாபாரியை விட்டு வெளியே சென்ற நிலையை மூன்று வாக்கியங்களில் எழுதுக.
5. சிறுவன் கண்டெடுத்தது என்ன? அஃது எதனைக் காட்டும்?
6. சிறுவனை ஏன் வியாபாரி மீண்டும் கூப்பிட்டான்?
7. சிறுவன் எவ்வூரைச் சேர்ந்தவன்?
8. சிறுவன் எக்கருத்துக் கொண்டவன்? எக்குணங்கள் அவனிடம் காணப்பட்டன?
9. சிறுவனுடைய சரித்திரத்தினல் அறியும் நீதி யாது?

## கட்டுரையாக்கம்

1. முன்னேற்றத்தை விரும்புபவனிடம் இருக்க வேண்டிய குணங்களை விளக்கி ஒரு சிறு கட்டுரை எழுதுக. (10 வரிகளுக்குள்)
2. வணிகனிடம் வேலையில் அமரும்வரை லப்பீட்டின் நிலை எவ்வாறிருந்தது? எட்டு வரிகளில் வரைக.
3. லப்பீட்டின் வரலாற்றைப்பற்றி உனது வகுப்பு மாணவர் சங்கத்தில் பேசுவதற்கேற்ற குறிப்புகள் தயார் செய்க.

## மொழிப் பயிற்சி

1. அவன் மொழிகள் சிறுவன் உள்ளத்தைக் கலக்கின.—இவ் வாக்கியத்தின் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை எடுத்து எழுதுக.

2. கீழ்வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் யாவை?

(அ) செல்வ வர்த்தகனைச் சிறுவன் அறியான்.

(ஆ) அவனது திக்கற்ற நிலையைக் கண்கள் விளக்கின.

3. கீழ்வரும் வாக்கியங்கள் எவ்வெவ்வகை வாக்கியங்கள்? ஏன்?:—

அ. அவன் வறுமையால் வாடி வருந்தினன்.

ஆ. 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்பது பழமொழியல்லவா?

இ. அப்பொழுது அவனது மனம் இன்னவாறு அலைவுற்றது என்று யாரே கூறவல்லார்!

ஈ. அச் சிறுவன் யார்?

4. தெய்வ நம்பிக்கை உடையவன் அச்சிறுவன். அவன் தனது நிலையைக் கண்டான். அவன் உடல் தளர்ந்தது. அவன் மனம் குன்றவில்லை—இவற்றைச் சேர்த்து ஒரு வாக்கியமாக எழுதுக.

# 6. இசை இன்பம்

இன்பத்தை அனுபவிக்க ஆசைப்படாத மக்கள் இலர். எவரும் இன்பம் அடையவே விரும்புவர்; அதனைப் பெறற்கே அல்லும் பகலும் முயல்வர். இன்பம் என்பது யாது? ஆராய்ந்து பார்த்தால் அதனை, இதுதான் என்று எடுத்துக் கூற இயலாது. எனினும் ஐம்புலன்களுக்கும் மகிழ்ச்சியை அளிக்கவல்லது எதுவோ அதுவே இன்பம் தரத்தக்கதொன்று. எனவே, இன்பம் என்பது ஒருவகை மனவுணர்ச்சி. அந்த மனத்தால் உணரப்படும் இன்பம் அருஞ்செயலால், பொருளால், கல்வியால், பிற பல காரணங்களால் உண்டாகும்.

ஐம்புலன்களும் இன்பம் நுகர்தற்கு உரியன. செவியால் நுகரப்படும் இன்பத்தை அளிக்கவல்லது இசை. இசை, சங்கீதம் என்பன ஒரு பொருளுடைய சொற்கள். பெருங்கவிகள் தம் கற்பனைத் திறம் தோன்ற, அழகுகள் நிரம்ப இயற்றிய காவியங்கள் அறிவுக்கும் செவிக்கும் அளவிலா இன்பம் அளிக்க வல்லன. ஆயினும் காவியம், இலக்கணம் என்பவெல்லாம் அவற்றை நன்கு கற்றுணர்ந்தவர்க்கே இன்பம் பயப்பனவாகும். கல்லாதவர்க்கு அவை இன்பம் பயவா. ஆனால் இசையோ கற்றவர், கல்லாதவர் யாவர்க்கும் இன்பம் அளிக்கவல்லது. இசை அரங்கிற்கு (சங்கீதக் கச்சேரி) மக்கள் விரும்பிச் செல்கின்றனர். எல்லோரும் பாடக்கூடியவரல்லர்; இசை இலக்கணம் உணர்ந்தவரும் அல்லர். ஆனால் யாவரும் செவிக்கு இன்பந்தரும் அவ்விசையை அனுபவித்து இன்புறும் தகுதி உடையவர் ஆவர். பகுத்தறிவற்ற விலங்குகளும் பறவைகளும் இசையின் வசமாகின்றன. எனவே இன்பம் அளிக்கும் திறத்தது இசை என்பது விளங்கும். கண்ணன் தன் வேய்ங்குழலின் இசையால் கன்றுகாலிகளை எளிதில் மேய்த்து ஓட்டி வந்ததையும், ஆனய நாயனர் அவற்றை இசையினல் மயங்கச் செய்ததையும் நம் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

இயல், இசை, நாடகம் என்று தமிழ் மூன்று வகைப் படும். அவற்றுள் நடு நாயகமாய் இருப்பது இசைத் தமிழ். இயற்றமிழ்ச் செய்யுட்களை இசையுடனே பாடுதல் வேண்டும். தேவாரம், திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் முதலியன இசையுடன் பாடப்படுவதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். நாடகங்களிலும் இசைப் பாட்டுக்களைக் கேட்கிறீர்கள். நாடகத்திற்கு இசையும் நடிப்பும் இன்றியமையாது வேண்டப்படுவனவாகும். எனவே, முத்தமிழிற்கும் இசை வேண்டப்படுவதும் இன்பந் தருவதும் ஆகும்.

தெருவிலும், புகை வண்டிகளிலும் வரும் பிச்சைக் காரர்களைக் கவனியுங்கள். அவர்களும் இசையைத் தம் இரக்கும் தொழிலுக்குத் துணையாகக் கொண்டு பாடி வந்து பிச்சை கேட்கிறார்கள். இசையைக் கேட்டார்க்கு உள்ள நெகிழ்ச்சியுண்டாகும்; அதனால் மனம் இசைந்து யாதேனும் கொடுப்பர் என்பதே இரப்போர் எண்ணம்.

பாம்பாட்டி தனது பெட்டியில் நாகங்களை வைத்துள்ளான். அவை தம் இஷ்டம்போல் திரிவதை யிழந்து, ஏற்ற உணவு இல்லாமல் பெட்டியில் வாடி வருந்தியிருப்பனவாகும். பாம்பாட்டி 'மகுடி' என்னும் கருவியை யெடுத்து, இனிய ஓசையை எழுப்பி,

"நாதர் முடி மேலிருக்கும் நல்லபாம்பே
நச்சுப் பையை வைத்திருக்கும் நல்லபாம்பே"

என்பது போன்ற இனிய பாட்டுக்களைப் பாடுகிறான். அவ்விசையைக் கேட்ட நாகம் மகிழ்ந்து தலை நிமிர்ந்து படம் விரித்து ஆடி நிற்கின்றது. பாம்பிற்கு இசை கேட்டு இன்புறும் பண்பு இயல்பாக அமைந்துள்ளது என்பதை இதனால் நாம் அறியலாம். 'புன்னாகவராளி' என்னும் இராகத்தைப் பாடினால் பாம்பு வரும் என்று பெரியோர் சொல்வர். சோழ நாட்டில் ஒரு சமயம் மழை பொய்த்துப்போக, அப்பொழுது ஒரு சங்கீத வித்துவான் 'மேகராகக்குறிஞ்சி' என்ற பண்ணைப் பாடி மழையை வரவழைத்தார் என்பர். மற்றும், வீடுகளில் குழந்தைகளைத் தூங்க வைப்பதற்குத் தாய்மார்கள் நாவால் ஒலியெழுப்பித் தாலாட்டுகின்றனர்.

அந்த இசையில் ஈடுபட்ட குழந்தைகள் அழுகை ஒழிந்து துயில்கின்றன.

கிராமங்களில் பயிர்களுக்குக் கிணற்றிலிருந்து கபிலை ஏற்றத்தால் நீர் இறைப்பார்கள். ஏற்றத்தில் இரண்டு மாடுகள் கட்டப்பட்டிருக்கும். ஏற்றச்சாலோ மிகவும் பெரியது. நீர்முகக்கப் பெற்ற நிலையில் கனமானதுமாகும். அந்நிலையில் இரண்டு மாடுகள் இழுக்கின்றன. அப்பொழுது அம்மாடுகளுக்குச் சலிப்புண்டாகாதபடி தெம்மாங்கு பாடுவார்கள். அப்பாட்டைக் கேட்டுக்கொண்டே மாடுகள் சலிப்பின்றி இன்புற்று உற்சாகத்துடன் இழுக்கும். 'ஏற்றப் பாட்டிற்கு எதிர்பாட்டில்லை' என்ற பழமொழியும் உண்டல்லவா?

பாரவண்டி இழுப்போர், நிலங்களில் வேலை செய்வோர் முதலிய யாவரும் தம் வேலையில் சலிப்புத் தோன்ருதிருக்கப் பாடிக் கொண்டே உற்சாகத்துடன் வேலை செய்தலைக் காணலாம். இதனல் இசைக்கு அயர்ச்சியைப் போக்கும் ஆற்றலுண்டு என்பதை உணரலாம். குயிலின் குரல் இனிமை பயப்பதை நாம் உணர்கிருேம். பாடல்களை இனிமையாகப் பாடுவோரை 'குயில்போல் பாடுகிருர்' என்று கூறுகிருேம் அல்லவா?

இறைவனும் இசைக்குக் கட்டுப்பட்டு அடியார்க்கு அருள் புரிகிருன். அதனலன்ருே நாயன்மார்களும் ஆழ்வார்களும் இசையோடு கூடிய பாடல்களைப் பாடியருளினர். தியாகையர் என்பவர் பாடிய கீர்த்தனங்களை நீங்கள் கேட்டிருக்கிறீர்களல்லவா? அவருடைய இசையில் ஈடுபட்ட இறைவன் காட்சியளித்தனன் என்று அவரது வரலாறு கூறுகின்றது. இவற்ருல் இசை முத்தியாகிய உயர்நிலையையும் அளிக்கவல்லது என்பதனை அறியலாம்.

'இசையில் ஈடுபடுவது மனித இயற்கை. இசையில் ஈடுபடாதவன் விலங்கினும் கேடானவன்' என்று ஓர் ஆங்கிலக் கவி கூறுவது இங்கு அறியத்தக்கது. 'இசைமயமான இயற்கை நிலத்தில் வாழ்வு நடாத்தி, அவ்வியற்

கைத் தமிழைச் சுவைத்தவர்கள் தமிழர்களாகிய நம் முன்னோர்' என்று ஓர் அறிஞர் கூறுவதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும். கலைகளுக்குத் தேவியான சரசுவதி கையில் வீணை கொண்டிருப்பதாகப் பாடல்களில் கூறப் பட்டிருத்தலும், படங்களில் சித்திரமாகத் தீட்டப் பெற்றிருத்தலும் யாவரும் அறிந்ததொன்றே. வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள்கூடப் பொருநர்களின் பாலைப் பண்ணைக் கேட்டுத் தம் கையிலுள்ள படைகளை நழுவ விட்டு மயங்கி நிற்பராம். தமது கொடுஞ் செயலையும் அவர்கள் அப்பொழுது மறந்து விடுவார்களாம். எனவே, கொடியோரையும் தன் வசமாக்கும் தன்மை இசைக்கு உண்டென்பதை அறியலாம்.

இறைவர் இசையின் வடிவாய் இருப்பவர் என்பர். 'ஏழிசையாய் இசைப்பயனாய்' என்பன அருள் வாக்குகள்.



இசைக் கருவிகள்

இசையில் விருப்புடையவராகிய சிவபெருமான் இரு கந்தர்வர்களைக் குண்டலமாய்க் கொண்டுள்ளார் என்று புராணம்

கூறும். 'எம்மிறை வீணை வாசிக்குமே' என்னும் அடியும், 'வீணு தக்ஷிணுமூர்த்தி' என்ற பெயரும் இறைவன் கையில் வீணை இருத்தலைப் புலப்படுத்துகின்றன அல்லவா?

இசைக்கருவிகள் முத்திறப்படும். அவை, தோற் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி என்று அழைக்கப்படும். மிருதங்கம், தவுல், தபேலா, கஞ்சரா, முரசு என்பன தோற் கருவிகள். புல்லாங்குழல், நாதசுரம் போன்றன துளைக் கருவிகள். வீணை, யாழ், கோட்டு வாத்தியம், பிடில் என்பன நரம்புக் கருவிகள். ஹார்மோனியம், பியானே என்பன மேனுட்டு வாத்தியக் கருவிகள்.

முன்பு உயர்ந்த நிலையை அடைந்திருந்த இசைக்கலை இடைக்காலத்தில் புரப்பார் அற்றுக் குன்றுதல் அடைந்தது. இக்காலத்தில் இசைக் கலை பெரிதும் போற்றப் பெற்று உயர்வடைந்து வருகிறது. நகரங்களில் இசை அரங்குகள் ஏற்படுத்தப் பெற்று, இசைக் கலைவாணர் பெரிதும் போற்றப்பட்டு வருகின்றனர். மற்றும், கலாசாலைகளிலும் பல்கலைக் கழகங்களிலும் இசைக்கலை பாடதிட்டங்களுள் ஒன்ருக அமைந்துள்ளது. அவ்வாறு இசைக் கலைக்குப் பேராதரவு அளித்துவரும் அண்ணுமலைப் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக் கழகம் முதலியன போற்றற்குரியன ஆகும்.

மாணவர்களே, இசை மக்களுக்கு இன்பம் அளிக்க வல்லது; சோர்வு அகற்றும் இயல்பினது; மனத்தை மகிழ வைப்பது. அத்தகைய இசையை வாழ்க்கையில் பயன்படுத்திக் கொள்ளுதல் இன்ப வாழ்க்கைக்கு வேண்டுவதாகும். நீங்கள் "எனக்குப் பாட வராது" என்று இருந்து விடாதீர்கள். 'பாடப் பாட ராகம்' என்பது பழமொழி. உங்கள் தமிழ்ப் புத்தகத்திலுள்ள பாடல்களை இசையுடன் இயன்றவரையில் படித்துப் பாடிப் பழகுங்கள். அவ்வாறு இசையுடன் பாடிப் பழகினுல் பாடல்கள் எளிதில் மனப்பாடமாகும். அவற்றின் அரும் பொருள்கள் எளிதில் விளங்கும். உங்களுக்கே இன்பம் தோன்

றும். அங்ஙிலையில் பாட்டின் அருமை, பெருமை, சுவை, பொருளாழம் முதலியன யாவும் உங்களுக்குப் புலனாகும். அதனால் மொழியிற் பற்றுண்டாகும். இசையால் இசை பெற்ற பெரியோர் பலர் நம் நாட்டில் முன் இருந்தனர்; இன்றும் உள்ளனர்.

### பொருள் காண்க

அல், ஐம்புலன், நுகர்தல், கற்பனை, திறம், காவி, நாயகம், நள்ளிருள், பண், உற்சாகம், அயர்ச்சி, குண்டலம், புரப்பார், இரப்போர்.

### சிறுவிடை வினாக்கள்

1. மக்கள் இயல்பு யாது?
2. இன்பம் எவற்றால் உண்டாகும்?
3. ஐம்புலன்கள் யாவை?
4. காவியங்கள் எத்தகையன?
5. இசை எத்தகையது?
6. இசையின்பத்தை விளக்கும் நூல்களுள் இரண்டினைக் கூறுக.
7. கண்ணன், ஆனாய நாயனார்: இவர்கள் இசையின் துணையால் எளிதில் செய்த காரியங்கள் யாவை?
8. முத்தமிழ் எவை?
9. புன்னாகவராளி, மேகராகக்குறிஞ்சி: இரண்டிரண்டு வாக்கியங்கள் ஒவ்வொன்றைப் பற்றியும் எழுதுக.
10. இறைவன் இசையில் ஈடுபட்டவன் என்பதை எவ்வாறு அறியலாம்?
11. இசைக் கருவிகள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
12. இசை—இச்சொற்கு இருபொருள் தருக.

### கட்டுரையாக்கம்

1. 'இசையும் இருதிணை உயிர்களும்' என்ற தலைப்பமைத்து 15 வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

2. கீழ்க்காணும் பழமொழிகள் தோன்றக் காரணம் என்ன? விளக்கி எழுதுக.

   1. ஏற்றப் பாட்டிற்கு எதிர்பாட்டில்லை.
   2. பாடப் பாட ராகம்.

3. 'இசையின் ஆற்றல்' என்ற தலைப்பு அமைத்துப் பத்து வரிகள் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. எதிர்சொல் எழுதுக :—
கல்லாதவர், இன்பம், மகிழ்ச்சி, பெரியது, ஒழிந்து.

2. கீழ் வரும் சொற்களை அமைத்துச் சொந்த வாக்கியங்கள் எழுதுக :—
ஐம்புலன், முத்தமிழ், நள்ளிருள், உற்சாகம், ஏறக் குறைய, இன்றியமையாதது.

3. இசை ஐம்புலன்களுக்கும் இன்பத்தை அளிக்க வல்லது : இவ் வாக்கியத்திலுள்ள எழுவாய் பயனிலை செயப்படுபொருள்களை இடம் மாற்றி எழுதுக.

4. நீர் கிணற்றிலிருந்து இறைக்கப்படும் : இது செயப்பாட்டு வினை வாக்கியம். இத்தகைய வாக்கியங்களுள் நான்கினை எழுதுக.

5. உங்களது பாட புத்தகத்திலுள்ள பாடல்களை இசையுடன் பாடுங்கள் : இஃது என்ன வாக்கியம்? ஏன்?

# 7. கோவூர் கிழார்

தமிழகத்தில் பண்டைக் காலத்தில் அரும் பெரும் புலவர்கள் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்கள் கல்வி, அறிவு, ஒழுக்கங்கள் நிரம்பியவர்களாயும், அஞ்சாமை, அறிவு, கவிபாடும் திறன் முதலியன உடையவர்களாயும் விளங்கினர்கள். அம்மட்டோ! உயிரினும் மானமே பெரிதெனமதிக்கும் இயல்பினர் அப்புலவர் பெருமக்கள். அவர்கள் முடிமன்னர்களையும், சிற்றரசர்களையும், வள்ளல்களையும் அடுத்து வாழ்ந்தனர். அச்செல்வர்கள் நெறி தவறுவராயின் இப்புலவர் பெருமக்கள் இடித்துக் கூறிச் செந்நெறிப் படுத்துவர்.

சோழ நாட்டில் கோவூர் என்ற ஊர் ஒன்று உளது. அவ்வூரில் வேளாண் குடியில் பிறந்து, கல்வி கேள்விகளில் சிறந்து, பேரும் புகழும் பெற்றவர் **கோவூர் கிழார்** என்னும் பெரும் புலவர். அவருடைய இயற்பெயர் மறைந்து விட்டது. அவர் பிறந்ததால் அவ்வூர்க்கே சிறப்புண்டானதுபற்றி யாவரும் அவரைக் கோவூர் கிழார் என்றே அழைப்பாராயினர்.

அவர் காலத்தில் சோழநாட்டை அரசாண்ட மன்னன் பல நற்குணங்கள் பொருந்தியவன்; புலவர் பாடும் புகழ் உடையவன்; **சோழன் நலங்கிள்ளி** என்னும் பெயரினன். அவன் கோவூர் கிழாரின் அருமை பெருமைகளை அறிந்து அவரைத் தன்பால் வைத்துக்கொண்டு ஆதரித்து வந்தான். அரசனும் புலவரும் மனங்கலந்த அன்புடையவராய் விளங்கினர். சோழனது வீரம், நீதி, தியாகம் என்பன குறித்துப் பல பாட்டுக்களைப் பாடிப் புலவர் மன்னனை மகிழ்வித்தார்.

சோழன் நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் தாயத்தார்கள். சோழன் நலங்கிள்ளி காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரிந்து வந்தான். சோழன் நெடுங்கிள்ளியோ உறையூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டு வந்தான். சோழ நாட்டு அரசுரிமை குறித்து

இருவருக்கும் பல போர்கள் நடந்தன. அதனால் இருவருக்கும் தீராப் பகைமை உண்டாயிற்று. அவ்வாறு நிகழ்ந்த போர் ஒன்றில் சோழன் நெடுங்கிள்ளியால் நலங்கிள்ளியை எதிர்த்துப் போர் புரிய முடியவில்லை. அதனால் அவன் சோணாட்டு ஆமூர்க்கோட்டையைத் தனக்கு அரணாகக் கொண்டான். அதனை அறிந்த நலங்கிள்ளி அக்கோட்டையைக் கைப்பற்ற எண்ணிப் பெருஞ் சேனையோடு சென்று வளைத்துக்கொண்டான். நெடுங்கிள்ளி போர் புரியாது கோட்டைக்குள் இருந்தான். முற்றுகையோ பன்னாள் நீடித்தது. உணவுப் பொருள்கள் சுருங்கவே உள்ளிருந்த படையினரும் ஏனையோரும் பெருந்துன்பம் உற்றனர்.

கோவூர் கிழார் இந்நிலையை அறிந்தார். "ஒரு குடியிற் பிறந்த இருவரும் தம்முட் பகைமைகொண்டு போர்புரிதல் நன்றன்று" எனப் புலவர் எண்ணினார். அவரது அன்புள்ளம் அவரை வாளாவிருக்க விடவில்லை. அவர் விரைந்து வந்து கோட்டைக் கதவினை அடைத்துக்கொண்டிருக்கும் நெடுங்கிள்ளிக்குத் தம் வருகையைத் தெரிவித்தார்; பின்னர் உட்சென்றார்; அரசனைக் கண்டார். புலவர் அரசனைப் பார்த்து, "அரசே, கேள் ; யானைகள் எல்லாம் குளத்தில் குளியாமல் இருக்கின்றன; நெற்கவளங்களைக் கொள்ளாமல் இருக்கின்றன; கம்பங்களைச் சாய்த்து நிலத்தின்மீது புரளும் கையுடன் பெருமூச்சு விட்டுக் கொண்டு பேரிடி போல முழங்குகின்றன. குழந்தைகள் பால் இல்லாமல் அழுகின்றன. பெண்கள் எல்லோரும் தம் கூந்தலை மலர் கொண்டு அணிசெய்யாது இருக்கின்றனர். குடிகள் எல்லோரும் தண்ணீர் இன்றி வீடுகளிலிருந்து வருந்திக் கூவுகின்றனர். இவற்றிற்கெல்லாம் நாணம் அடையாமலும், இரங்காமலும் நீ இவ்விடத்தில் இனிதாக இருத்தல் மிகக்கொடிது. வலிமை மிக்க படையை உடையவனே, நீ உண்மையில் அறத்தை உடையவனாயின் உனது குலத்தவனாகிய பகைவனிடம் செல்; 'இக்கோட்டை உன்னுடையது' என்று கூறிக் கோட்டைக் கதவைத் திறப்பாயாக; இல்லையேல் நின் வீரம் விளங்கப் போர்

செய்து வென்று விரைவில் திறப்பாயாக. இவை இரண்டும் இன்றித் திறவாமல் அடைத்த கதவினை உடையவனாய், பெரிய மதிலினுள் ஒரு புறத்தில் இனிது ஒதுங்கி யிருத்தல் வெட்கும் தன்மையுடைய செயலாகும்" என்ற அரிய கருத்துக் கொண்ட ஒரு பாடலைப் பாடினார். அப்பாடல் நெடுங்கிள்ளியின் உள்ளத்தில் தைத்தது. உடனே அவன் கதவைத் திறந்து விட்டு உறையூருக்குச் சென்று அரண் செய்துகொண்டிருந்தான். ஆவூரை நலங்கிள்ளி கைப் பற்றிக் கொண்டான்.

அக்காலத்தில் இளந்தத்தர் என்ற புலவர் ஒருவர் இருந்தார். அவர் ஆவூரிலிருந்த சோழன் நலங்கிள்ளியைப் பாடிப் பரிசில் பெற்றுக் கொண்டார்; சோழன் நெடுங்கிள்ளியைக் காணச் சென்றார். நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் ஏற்பட்டுள்ள பகைமையைப் புலவர் அறிந்திலர் போலும்! அல்லது புலவர்கள் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்று கருதினர்போலும்! புலவர் சோழன் நெடுங்கிள்ளியைக் காண உறையூர் வந்தடைந்தார்; அரசனைக் கண்டார். அரசனாகிய நெடுங்கிள்ளி புலவரைத் தவறாக எண்ணி விட்டான். பகைவரது ஒற்றனே புலவர்போல் மாறுவேடம் பூண்டு வந்துள்ளான் என்று கருதினான். அதனால் நெடுங்கிள்ளி இளந்தத்தராகிய புலவரைக் கொல்லத் துணிந்தான்.

கோவூர் கிழார் அச்செய்தியைக் கேள்வியுற்றார். அவர் மனம் புலவர்க்கு நேரப்போகும் துன்பங் கருதித் துடித்தது. குற்றமற்ற புலவர் கொல்லப்படுதலைக் கேட்ட அவர் விரைவில் நெடுங்கிள்ளிக்கு அறவுரை கூறிப் புலவரை விடுவிக்க எண்ணினார்; உடனே புறப்பட்டார். அவர் சோழனைக் கண்டு, "மன்ன, நான் சொல்வதை விழைந்து கேட்பாயாக. புலவர்கள், பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகளைப்போல வரையாது அளிக்கும் வள்ளல்களை நாடிச் செல்லும் இயல்புடையவர்கள். அதன் பொருட்டு அவர்கள் கடத்தற்கரிய காடுகளையும் கடந்து செல்வர். வள்ளல்களின் பெருமைகளை உள்ளங் குளிரப்

பாடிப் பரிசில் பெற்று இன்புறுவர்; தாம்பெற்ற பரிசிற் பொருளைக் கொண்டு தாமும் சுற்றத்தாரும் உண்டு மகிழ்வதோடு ஏழைகளுக்கும் அளிப்பர். அப்பொருள் தீர்ந்துவிட்டால் அப்புலவர்கள் வள்ளல்களை நாடிச் செல்வர். அவர்கள் எவ்வுயிர்க்கும் தீங்கு நினைக்கமாட்டார்கள். அத்தகைய இயல்புடைய புலவர்களுள் ஒருவர் இவர்; ஒற்றரல்லர். இவரைக் கொல்லத்துணிதல் அறமாகுமோ?" என்று மன்னன் மனத்தில் நன்கு பதியும்படியாக எடுத்துக் கூறினர். நெடுங்கிள்ளியும் புலவர் நன்மொழி கேட்டுத் தெளிந்து இளந்தத்தரைக் கொல்லாது பரிசளித்து விடுத்தான். இவ்வாறு கோவூர் கிழார் புலவரை உய்வித்தார்.

ஆவூரைக் கைப்பற்றியிருந்த சோழன் நலங்கிள்ளி உறையூரை முற்றுகையிட்டான்; பெரும் போர் தொடங்கலானான். இதனை அறிந்த கோவூர் கிழார் எவ்வகையாலேனும் அவ்விருவர் பகைமையையும் ஒழித்தல் வேண்டும் என்று கருதினர்; விரைந்து சென்றார். "அரசர்களே! இங்குப் பகைத்து நிற்கும் உங்கள் இருவருள் ஒருவனேனும் பனம்பூமாலை அணிந்த சேரனும் அல்லன்; வேப்பம் பூமாலை அணிந்த பாண்டியனும் அல்லன். இருவரும் அணிவது ஆத்திப்பூ மாலையே. அஃதொன்றே நீங்கள் இருவரும் ஒருகுடியிற் பிறந்தவர் என்பதை விளக்குகின்றதன்றோ? ஆதலால் உங்களுள் எவர் தோற்றாலும் தோற்றது உங்கள் குடியே. இருவரும் வெல்லுதல் இவ்வுலகத்து இயற்கையன்று. இவ்வாறு இருக்க நீங்கள் இருவரும் போர் செய்தல் உங்கள் குடியின் பெருமைக்குத் தக்கது அன்று என்பதை உணரவேண்டாவோ? மற்றும் நீங்கள் பொருவது கேட்டுச் சேர பாண்டியர் மகிழ்வர்; உங்களை இகழ்வர். ஆதலால் இனி இப்போரை நிறுத்துங்கள்; நட்புக் கொள்ளுங்கள்; இதுவே நீவிர் செய்யத் தக்கதாகும்" எனக் கோவூர் கிழார் பசுமரத்தாணிபோற் பதியும்படி உரைத்தார். புலவர் பொருளுரை கேட்ட புரவலர்கள் பகைமை நீங்கினர். இம்மட்டோ, இப்பெரும்

புலவர் செய்த அருஞ் செயல்? மற்றென்றும் இங்கு உணரத்தக்கது.

கோவூர் கிழார் காலத்தில் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்னும் சோழன் ஒருவன் இருந்தான். அவன் காலத்தில் மலையமான் திருமுடிக்காரி என்ற குறு நில மன்னன் ஒருவன் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டு வந்தான். காரி கடையெழு வள்ளல் களுள் ஒருவன்; போர் வீரன்; புலவர்களைப் புரப்பவன்.

மலையமான் திருமுடிக்காரிக்கும் கிள்ளிவளவனுக்கும் எக்காரணத்தாலோ பகைமை ஏற்பட்டது. அதனல் கிள்ளிவளவன் காரியின் இளம் மக்களைப் பிடித்து விட்டான்; அவர்களை யானையின் காலிலிட்டுக் கொன்றுவிடக் கட்டளையிட்டான். அதனைக் கேள்வியுற்ற கோவூர் கிழார் விரைந்தோடி வந்தார். கிள்ளிவளவனைக் கண்டு, "அரசே! ஒரு புறவிற்காகத் துலையில் புகுந்த சிபியின் மரபில் வந்த மன்னன் நீ. அதனல் பிற உயிர்களிடம் இரக்கமுடைய னுதல் வேண்டுமன்றோ? உன்னல் கொல்லப்பட விருக்கும் இளஞ் சிறுர்களோ, புலவர்களுக்கு நிழல்போல் அமைந்து புரக்கும் வள்ளலாகிய மலையமான் திருமுடிக்காரியின் மக்கள். அச்சிறுவர்கள் முதலில் யானையைக் கண்டு அஞ்சி அழுதனர்; பின்னர் இங்குத் திரண்டிருக்கும் மக்கள் கூட்டத்தைக் கண்டு மருள்கின்றனர். எவ்வளவு இளம் பருவத்தினர்! இவரிடமோ நின் வீரம் செல்வது? இவற்றை உணர்ந்தாயாயின் உன் விருப்பம்போற் செய்க" என்று கனிவு தோன்றக் கூறினர். அரசன் அவரது தெருட்டுரை கேட்டு மக்களைக் கொல்லாது விடுத்தான்; பழி பாவங்களினின்றும் நீங்கினன்.

கோவூர் கிழார் கல்வி கேள்விகளில் சிறந்த பெரும் புலவர். சிறந்த செய்யுட்கள் இயற்றும் திறமை வாய்ந்தவர்; பிறர்படும் துன்பங் கண்டால் சகியாதவர்; அரசர்களால் நன்கு மதிக்கப்பட்டவர். அரசர்களாயினும் தவறி நடக்கும் காலத்தில் இடித்துக் கூறி நல்வழிப்படுத்தும் இயல்பு வாய்ந்தவர் அப்பெருந்தகையார். பிறர் துன்பம்

போக்குதலில் முதலில் நிற்பவர். மன்னர்களும் ஏற்று நடக்கும்படி இனிமையாகவும், சாதுரியமாகவும், நயம்படவும் பேசும் திறம் வாய்ந்தவர்; சொல்வன்மை மிக்கவர்; உண்மையை உரைப்பவர்; மன்னர்க்கும் அஞ்சாதவர். இத்தகைய நல்லியல்பு வாய்ந்த கோவூர் கிழார் போன்ற நற்புலவர் பல்லோர் வாழ்ந்த நாடு நம் செந்தமிழ் நாடு என்றால் அது நமக்குப் பெருமையே அன்றோ!

### பொருள் காண்க

பண்டைக் காலம், நெறி, வேளாண்குடி, தியாகம், அரண், முற்றுகை, செய்தி, பரிசில், ஒற்றர், வரையாது, தெருட்டுரை, மரபு, வெட்குதல்.

### சிறுவிடை வினாக்கள்

1. பண்டைப் புலவர் பெருமக்களின் இயல்புகளில் மூன்றினை வரைக.
2. கோவூர் கிழாரின் குண நலன்களுள் இரண்டினைக் குறிப்பிடுக.
3. கோட்டைக்குள்ளிருந்த மன்னனைப் புலவர் எவ்வாறு நல்வழிப் படுத்தினர்?
4. இளந்தத்தர் யார்? அவருக்கு நேர்ந்த இன்னல் யாது? அஃது எவ்வாறு நீக்கப்பட்டது?
5. உறையூர் முற்றுகையின்போது புலவர் என்ன கூறி இருவர் பகையையும் போக்கினர்?
6. நலங்கிள்ளி எத்தகைய பாவச் செயலைச் செய்யத் துணிந்தான்? புலவர் எவ்வாறு அவனுக்குப் பழியுண்டாகாதபடி காத்தார்?
7. சிபி என்பவன் யாவன்? அவன் செய்த அருஞ்செயல் யாது?
8. கடையெழு வள்ளல்கள் யாவர்?

### கட்டுரையாக்கம்

1. கோவூர் கிழார் கோட்டைக்குள்ளிருந்த மன்னனுக்குக் கூறிய மொழிகளைப் பத்து வரிகளுக்குள் வரைக.

2. 'பண்டைப் புலவர் இயல்பு' என்ற தலைப்பு அமைத்து, பதினைந்து வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

3. 'புலவர் வீரம்' என்பது பற்றி ஒரு ஐந்து நிமிஷப் பேச்சிற்கு வேண்டிய குறிப்புக்கள் எழுதுக.

4. 'கோவூர் கிழாரின் அருட்குணம்' என்பதுபற்றி இருபது வரிகளில் மூன்று பத்திகள் கொண்ட ஒரு கட்டுரை எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. "அவர் காலத்தில் சோழ நாட்டை அரசாண்ட மன்னன் பல நற்குணங்கள் பொருந்தியவன்; புலவர் பாடும் புகழுடையவன்; சோழன் நலங்கிள்ளி என்னும் பெயரினன்."

(அ) இஃது எவ்வகை வாக்கியத்தைச் சேர்ந்தது?

(ஆ) இதனை எவ்வாறு மாற்றி எழுதலாம்?

2. ஆவூரை நலங்கிள்ளி கைப்பற்றிக்கொண்டான்—'ஆவூர்' என்று ஆரம்பித்து வாக்கியத்தை முடித்து எழுதுக.

3. 'இவரிடமோ நின் வீரம் செல்வது'—இவ் வாக்கியம் எவ்வித உணர்ச்சியைத் தருகிறது? அதற்கேற்ற குறியை இடுக. அத்தகைய வாக்கியங்கள் நான்கினை எழுதுக.

4. கீழ் வரும் சொற்களை அமைத்துச் சொந்த வாக்கியங்கள் எழுதுக:—

பண்டைக் காலம், தியாகம், முற்றுகை, பரிசில், வரையாது, விருப்பம் போல், பழி பாவம், நன்றன்று.

5. பிரித்துக் காட்டுக:

தெருட்டுரை, நன்றன்று, இயற்கையன்று, பசுமரத்தாணி, இந்நிலை, கடுஞ்சொல்.

## 8. ஒன்று பட்டால் உண்டு வாழ்வு

கோதாவரி நதிக் கரையில் ஒரு பெரிய வன்னி மரத்தில் இலகுபதனன் என்ற காகம் ஒன்று வசித்து வந்தது. ஒரு நாள் விடியற்காலையில் அங்கு இயமனைப் போல அச்சம் தரும் வேடன் ஒருவன் வந்தான். "இக்கொடியவன் என்ன செய்வானோ? சோதித்து அறிய வேண்டும்" என்று எண்ணிய காகம் இரை தேடச் செல்லாமல் அம் மரத்திலேயே தங்கிப் பார்த்துக் கொண்டிருந்தது. வேடன் தன் வலையை அங்கே விரித்தான்; பலவகைத் தானியங்களைத் தெளித்தான்; மரத்தின் பின்புறமாகச் செடி மறைவில் போய்ப் பதுங்கிக் கொண்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சித்திரக்கிரீவன் என்ற புறா வரசு ஒன்று தன் பரிவாரப் புறாக்களுடன் அம்மரத்தில் வந்து தங்கிற்று. அப்புறாவரசு கீழே தானியங்கள் சிதறுண்டிருப்பதைக் கண்டது. சற்று ஆலோசித்த புறா அரசு, ஏனையோரிடம், "நண்பர்களே, இந்தக் காட்டில் மக்கள் நடமாட்டம் இல்லை. இங்குத் தானியங்கள் எப்படி வரும்? யாரேனும் கொண்டுவந்து போட்டிருக்க வேண்டும். இதன் உண்மை நமக்குத் தெரிந்தால் அன்றி இத்தானியங்களை உண்ணலாகாது. மிகவும் ஆலோசனை செய்தே செய்யத்தக்க காரியத்தைச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் யாதொரு தீங்கும் நேரிடாது" என்று கூறிற்று. புறாவரசு கூறியவற்றைக் கேட்ட கர்வங் கொண்ட புறா ஒன்று, "இவ்வாறு காரணகாரியம் கருதி ஒவ்வொன்றையும் ஆலோசித்துப் பார்த்துக் கொண்டே போனால் நமக்கு ஓர் இரையும் அகப்படாது. மற்றும் வெட்கப்படுகிறவன், பொறாமையுள்ளவன், சந்தோஷப்படாதவன், குரோதம் உள்ளவன், தீராச் சந்தேகமுள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன் இந்த ஆறு பேர்களும் துக்கத்தையே அனுபவிப்பவர் ஆவர். ஆதலால், நாம் இமைப்பொழுதும் இதனை உண்ணத் தாமதிக்கலாகாது" என்றது. அம் மொழிகளைக் கேட்ட மற்றப் புறாக்கள் எல்லாம் தானியத்

தைத் தின்னும்பொருட்டு நிலத்தில் இறங்கவே, வலையில் அகப்பட்டுக் கொண்டன.

அதனைப் பார்த்துப் புறாவரசு, "எல்லோரும் என் சொல்லைக் கேளாமற் போனார்கள்; வலையில் அகப்பட்டுக் கொண்டார்கள். இனி நான் ஒன்றியாயிருந்து பயனில்லை" என்று சொல்லிக்கொண்டே தானும் வலையில் வந்து அகப்பட்டுக் கொண்டது. மறைவிலிருந்த வேடனுக்கு



அளவிலாத ஆனந்தம் உண்டாயிற்று. பறவைகள் வலையில் சிக்குண்டதைக் கண்ட வேடன் மலர்ந்த முகத்தோடு

அருகில் வரத்தொடங்கினன். அதைப் பார்த்த புறாக்கள் சித்திரக்கிரீவனை நோக்கி வருந்தி, "நாங்கள் அற்பன் வார்த்தையைக் கேட்டு உன்னை அவமதித்தோம். ஆபத்து வந்துவிட்டது" என்றன. அப்பொழுது சித்திரக்கிரீவன் அவைகளைப் பார்த்து, "இப்பொழுது இவற்றைச் சொல்லிப் பயன் என்ன? இவ்வாபத்தினின்று தப்பவும் ஓர் உபாயம் இருக்கிறது. எல்லோரும் வலையோடுகூட ஒன்ருகப் பறந்து வேறிடத்திற்குச் செல்ல வேண்டும். அப்படிச் செய்தால்தான் நாம் நம் உயிரைக் காப்பாற்றலாம்" என்றது. புறாக்கள் அதற்கு இசைந்து வலையோடுகூட விரைவிற் பறந்து சென்றன. அதனைக் கண்டான் வேடன். அவனுக்கு வியப்பும் திகைப்பும் உண்டாயின. "இவைகளின் செயல்தான் என்னே! புறாக்கள் எல்லாம் வலையோடு பறந்து செல்கின்றனவே! என்ன ஒற்றுமை! நாம் ஒன்று நினைத்தோம்; செயல் ஒன்ருக மாறிற்றே. ஆயினும் இவைகளுள் ஒன்றுக்கொன்று சண்டை நேரிடும். அப்போது இவை என் கையில் அகப்படும்" என்று எண்ணி மனப்பால் குடித்துக்கொண்டு அவைகளின் பின்னே தொடர்ந்து ஓடினன். ஆனல் புறாக்கள் கண்ணுக்கு எட்டாமல் மறைந்து போயின. பிறகு வேடன் வருத்தத்தோடு திரும்பி வந்தான்.

இவற்றையெல்லாம் இலகுபதனன் என்ற காகம் மரத்தின் மேலிருந்து பார்த்துக்கொண்டிருந்தது. பின்பு என்ன நிகழப்போகிறதென்பதைக் காணக் காகம் ஆவல் கொண்டது. அதனல், அக்காகமும் அந்தப் புறாக்களின் பின்னே பறந்து போயிற்று.

புறாவரசு தன் கூட்டத்தைப் பார்த்து, "கண்டகி நதிக் கரையில் சித்திர வனம் என்ற ஒரு காடு உண்டு. அங்கு என் நண்பனை இரணியகன் என்னும் எலியரசன் ஒருவன் இருக்கிருன். அவன் கூரிய பற்களை உடையவன். அவனிடம் சென்ருல் அவன் நம் வலையை அறுப்பான். ஆகையால் அங்கே செல்லுங்கள்" என்றது. அவ்வாறே

புறாக்களெல்லாம் பறந்து சென்று இரணியகன் என்னும் எலியரசன் வளையண்டை இறங்கின.

ஏதாவது ஆபத்து நேரிடும் என்று எலியரசு தன் வளைக்கு நூறு வழிகள் செய்து கொண்டு வாழ்ந்திருந்தது. புறாக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டுப் பயந்த எலியரசு வலைக்குள்ளேயே அடங்கிக்கொண்டது. சித்திரக்கிரீவன், "நண்பா, இரணியகனே, எங்களோடு ஏன் பேசவில்லை?" என்று கேட்டது. அது தன் நண்பன் குரல் என்று அறிந்த இரணியகன் மகிழ்ச்சியோடு வெளியே வந்து, "நான் சிறந்தவன்; புண்ணியன்; ஆதலால், எனது உயிர் போன்ற நண்பன் என் வீட்டுக்கு வந்தான். இவ்வுலகத்தில் மனமொத்த மித்திரனோடு உரையாடிக்கொண்டிருத்தலைக் காட்டிலும் இன்பம் தரவல்லது வேறு யாது இருக்கிறது?" என்று முகமன் கூறிற்று. பின்னர் அப் புறாக்கள் படும் துன்பத்தைக்கண்டு வருந்தி, "நண்பா, நீ யாவரினும் சமர்த்தனுயிற்றே. மிகுந்த புத்திசாலியான உனக்கு இந்தத் துன்பம் எப்படி வந்தது?" என்று கேட்டது. அதற்குச் சித்திரக்கிரீவன், "நண்ப, எந்தக் காலத்தில் எது நடக்குமோ அது நடந்தே தீரும். விதி வலிது. அதன் முன் யாருடைய தந்திரம் நடக்கும்? கடல் பெருகி மேலிட்டால் கரை ஏது?" என்று கூறிற்று. இரணியகன், "அன்ப, உன் உரை மெய்யே. நூறு நாழிகை தூரத்திலிருந்தே பொருள்களைத் தெரிந்து கொண்டு போகிற ஆற்றலுடைய உனக்கு இத்துன்பம் வந்தது! நீ இன்றைக்கு வேடன் வலையைப் பாராமல் அகப்பட்டுக் கொண்டாயே! சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களால் துன்பம் வருதலும், யானையும், பறவையும், பாம்பும் கட்டுப்படுதலும், புத்திசாலிகளுக்கு வறுமை வருதலும் கடவுளின் அற்புதச் செயல்களே அன்றி வேறு அன்று" என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண்டிருந்த வலைக் கயிற்றை அறுக்கத் தொடங்கிற்று.

அப்பொழுது சித்திரக்கிரீவன், "நண்பா, இதைக் கேள். முதலில் என் பரிவாரங்களுடைய கட்டுக்களை அறு.

பின்னர் என் கட்டைத் துணி'' என்றது. அதைக் கேட்ட எலியரசு, "நண்ப, என் பற்கள் மிகவும் மென்மை யானவை. அவற்றிற்குப் பலமும் கொஞ்சம். ஆதலால் உங்கள் எல்லோருடைய கட்டுக்களையும் நான் எவ்வாறு துணிப்பேன்? உன் தளையை அறுத்துப் பின் என் வலி மைக்கு ஏற்றவாறு அவர்களுடைய தளைகளையும் துணிப் பேன்" என்று கூறிற்று. அதனைக் கேட்ட சித்திரக் கிரீவன், "அன்ப, நீ கூறுவது சரியே. எனினும், நீ அவர் களுடைய கட்டுக்களை முதலில் அறுப்பதே முறை" என்றது.

அம்மொழிகளைக் கேட்ட இரணியகன், "அன்ப, முதலில் தன்னைக் காப்பாற்றிக் கொண்டு தன் பரிவாரங் களைக் காப்பாற்ற வேண்டும். ஏனெனில், அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இவைகளை அடைவதற்கு உயிர் முக்கிய மாக வேண்டும். ஆதலால் உன் உயிரைக் காப்பாற்றினல் எல்லாவற்றையும் காப்பாற்றினற் போலாகிறது" என்று கூறிற்று. அதற்குச் சித்திரக்கிரீவன், "நண்பா, நீ சொல் வது உண்மையே. ஆயினும், இப்படிப்பட்ட துன்பங்களி னின்றும் விடுவிக்க அல்லவோ என்னை இவர்கள் அரசனுக நினைத்து ஏற்படுத்திக் கொண்டார்கள்? ஆதலால், என் உயிரினிடத்தில் இச்சையை விட்டு முதலில் இவர்களைத் தப்புவி'' என்றது. அம்மொழி கேட்ட எலியரசு, "நண்ப, நீ பரம சாது. அடுத்தவர்களை ஆதரிப்பவனுக இருக்கிறுய். எசமானனிடத்தில் விசுவாசமாக இருக்கின்ற சேவகனும், சேவகனிடத்தில் அன்பாயிருக்கின்ற எசமானனும் சுகம் அடைவார்கள்'' என்று சொல்லி எல்லாவற்றினுடைய கட்டுக்களையும் அறுத்து அவைகளை விடுவித்தது. பின்னர் ஒன்றுக்கொன்று தழுவிக்கொண்டு இன்பவுரைகள் பேசின. பின் சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடு தன்னி டத்திற்குப் போயிற்று.

**பொருள் காண்க**

சோதித்து, இரை, குரோதம், சந்தேகம், தானியம், மனப்பால், மித் திரன், சமர்த்தன், அற்புதம், துணி, பரிவாரம், உபாயம்.

### சிறுவிடை வினுக்கள்

1. வேடன் செய்த செயல் யாது?
2. புருவரசு ஏனைய புருக்களுக்குக் கூறிய நல்லுரை யாது?
3. துக்கத்தையே அனுபவிக்கும் அறுவர் யாவர்?
4. புருக்கள் எங்குப் பறந்து சென்றன?
5. இலகுபதனன் என்று எதற்குப் பெயர்?
6. இவ்வுலகில் எதனைக் காட்டிலும் இன்பம் தருவது இல்லை?
7. புருவின் சிறப்பியல்புகளுள் இரண்டினைக் குறிப்பிடுக.
8. எவர் சுகமடைவர்?
9. புருவரசு தன்னலம் கருதவில்லை என்பதை எப்படி அறியலாம்?
10. எவை கடவுளின் அற்புதச் செயல்கள்?

### கட்டுரையாக்கம்

1. வேடன் தன் நிலையைக் கூறுவது போல் இக் கதையில் அவன் சம்பந்தப்பட்ட வரையிலுள்ள கதையை எழுதுக.
2. காகம் பார்த்துக் கொண்டிருந்ததல்லவா? அது யாது நினைத்திருக்கும் என எழுதுக.
3. எலியரசு தன் நண்பன் புருவரசிற்கு எவ்வாறு உபசாரம் செய்தது என்பதை, 'நண்பன் உதவி' என்ற தலைப்பில் எழுதுக (பத்து வரிக்குள்).
4. இக் கதையால் நீ அறியும் நீதிகளையெல்லாம் திரட்டி எழுதுக.

### மொழிப் பயிற்சி

1. **பிரித்து எழுதுக :**—ஒன்றுக்கொன்று, சுகமடைவர், ஏனெனில், இவ்வுலகம், எலியரசு, புருவரசு, மறைவிலிருந்த.

2. கீழ் வரும் சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுதுக :—சற்று, காரண காரியம், அற்புதம், உபாயம், இன்பதுன்பம், ஆதரிப்பவன்.

3. இரை, இறை—வித்தியாசம் என்ன? வாக்கியங்களில் அமைத்துக் காட்டி விளக்குக.

4. 'இவைகளின் செயல்தான் என்னே!'—இஃது எவ்வகை வாக்கியம்? இத்தகைய வாக்கியங்கள் இரண்டு எழுதுக.

5. "ஆகையால் நீங்கள் அங்கே செல்லுங்கள்"—எவ்வகை வாக்கியம்? ஏன்?

## 9. கிராமக் கைத்தொழில்கள்

நமது இந்தியா ஒரு பெரிய தேசம். இதில் கணக்கில்லாத கிராமங்கள் இருக்கின்றன. இந்திய மக்களில் பெரும்பாலோர் கிராமங்களிலேயே வசிப்பவர் ஆவர். அவர்களுள் பலர் விவசாயிகளே. கிராமங்களே இந்தியாவின் உயிர் நிலை என்னலாம். கிராமங்களில் வயல்கள், தோட்டங்கள், ஆடுகள், மாடுகள், ஏரிகள், குளங்கள், நெற்களங்கள் முதலியவற்றைக் காணலாம்.

கிராமங்களில் வசிக்கும் மக்களில் பலர் பயிர்த்தொழில் செய்கின்றனர். விவசாயிகளின் பொருளாதார நிலை குறைவுற்றுள்ளது. கிராமங்களில் தச்சர், கொல்லர், கருமார், குயவர் முதலான தொழிலாளிகளும் உள்ளனர். அங்குக் கைத்தொழில்களுக்குரிய மூதற் பொருள்கள் கிடைக்கின்றன. ஆதலால், அவற்றைக் கொண்டு கைத்தொழில்களைப் பெருக்கி விருத்தி செய்தால் வேளாண் மக்களின் பொருளாதார நிலை உயரும். பஞ்சு, பட்டு முதலியவைகளைக் கையால் நூற்று ஆடைகள் நெய்வதும், கல், மரம், வெண்கலம், பொன், வெள்ளி முதலிய பலவகைப் பொருள்களை உண்டாக்குவதும் நகரங்களில் நடைபெறும் கைத்தொழில்களாகும்.

கிராமங்களில் பயிர்த்தொழில் முக்கியமான தொழில். அங்கு நெல், கரும்பு, சோளம், புகையிலை, மிளகாய், நிலக்கடலை, பருத்தி முதலியன பயிர்செய்யப்படுகின்றன. துவரை, அவரை, மொச்சை, உழுந்து, பயறு, எள்ளு, கொள்ளு, கொண்டைக் கடலை, காய்கறி முதலியனவும் கிராமங்களில் பயிரிடப்பட்டுக் கொண்டுவரப்படுவனவே. ஆயினும் இவைகளைப் பயிரிடும் குடியானவர்களுக்குப் போதிய வருவாய் இல்லை. ஆறு மாதம் இவர்களுக்கு வேலை; ஆறு மாதம் வேலையில்லை. ஒரு வருடத்திற்குரிய செலவினை, விவசாயத்தினல் வரும் ஊதியத்தைக் கொண்டு அவர்கள் எவ்வாறு செய்ய இயலும்? ஆயினும், கிராமங்களில் கையால் நூல் நூற்றல், துப்பட்டி, கம்பளி, துணி

முதலியன நெய்தல், விவசாயத்திற்குரிய கருவிகளைச் செய்தல், சட்டி, பானை முதலான பாண்டங்களைச் செய்தல், சர்க்கரை, எண்ணெய் போன்ற உணவுப் பொருள்களை ஆக்கல் முதலான கைத்தொழில்கள் நடைபெறுகின்றன.

நாட்டு மக்களின் உடல் வலிமையே நாட்டின் வலிமை ஆகும். ஆதலின், நாட்டு மக்கள் உடல் உரம் பெற்றிருத்தற்குப் பாலுணவு மிகவும் தேவை. தயிர், நெய் முதலியனவும் இன்றியமையாதனவே. ஆதலால், நல்ல பசுக்களை வளர்த்து விருத்தி செய்தல் நாட்டு மக்களுக்கு நலத்தையும், வருவாயையும் அளிக்குமன்றோ? மற்றும், உழவுத் தொழிலுக்கும் வண்டி இழுத்தற்கும் எருதுகள் தேவை. எருதுகள் செய்யும் தொண்டு போற்றத்தக்கது. காங்கேயம், ஓங்கோல், டெல்ஹி முதலான இடங்களிலிருந்து நல்ல மாடுகளைத் தருவித்து வளர்த்து நலம் பெறல் வேண்டும். மாடுகளை ஒரே இடத்தில் கட்டி வைத்தல் கூடாது. அவற்றை அவிழ்த்து விட்டுக் காலார மேய விடுதல் வேண்டும். அவ்வாறு செய்வதற்குப் புல்லடர்ந்த நிலம் வேண்டும். நாட்டுப்புறங்களில் அதற்கு வசதி உண்டல்லவா?

கைத்தொழில்களைப் பெருக்குதலிலோ, தங்கள் வருவாயை மிகுதிப்படுத்தலிலோ கிராம மக்கள் பலர் தங்கள் கவனத்தையும், காலத்தையும் பயன்படுத்தவில்லை. அதனல், அவர்கள் பயிர்த்தொழில் இல்லாத காலத்தை வீணே கழிக்கிறார்கள். அதனல், வறுமையில் ஆழ்ந்து துன்பப்படுகிறார்கள். பயிர்த்தொழிலோ மழை, நீர் வசதி முதலியவற்றைப் பொறுத்தே அமைவதாகும். கிராம மக்கள் பயிர்த்தொழில் இல்லாத காலத்தில் பயனுடைய கைத்தொழில்களைச் செய்து தங்கள் பொருள் வருவாயைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். அதனல் கிராமத்தின் செல்வநிலை உயரும்; கிராம மக்களும் வயிறார உண்டு இனிது வாழலாம். மேனாட்டவர்களான பிரெஞ்சுக்காரர், ஜெர்மானியர், இதாலியர் முதலானவர்கள் தத்தம் கிராமங்களில் ஆடுமாடுகளை வளர்த்தல், பன்றி வளர்த்தல்,

கோழி வாத்துக்களை வளர்த்துப் பெருக்கல் முதலான தொழில்களைச் செய்கிறார்கள். நம் நாட்டுக் கிராம மக்கள் எவ்வெவ்விதக் கைத்தொழில்களைச் செய்யலாம் என்பதை ஆராய்வோம்.

நம் நாட்டுக் கிராம மக்கள் நூல் நூற்றலை மேற்கொள்ளலாம். 'நம் நாட்டுக் கிராமப் பெண்டிர் முற்காலத்தில் வீட்டில் நூல் நூற்று வந்தனர்' என்று நம் பண்டைத் தமிழ் நூல்கள் பகர்கின்றன. வீட்டில் பெண்கள் நூல் நூற்றனர். ஆதலால் அதற்குக் காருகவினை என்ற பெயரும் உண்டு. அந்நிலை இப்பொழுது குன்றிவிட்டது. நூல் நூற்று ஆடை நெய்தல் மக்களுக்கு வேலையும், ஊதியமும் அளிக்கும் கைத்தொழிலாகும். அதனை மேற்கொண்டால்



முதியவர்களுக்கும், இளைஞர்க்கும் வேலை அளித்தல் இயலும். அவர்கள் பருத்திக் காய்களைச் சேகரித்தல்,

கொட்டை நீக்குதல் முதலிய பல சிறு வேலைகளைச் செய்யலாம்.

பாற் பண்ணை வைத்தலும் நலம் தரும் கைத்தொழிலாகும். சிறந்த நல்ல பசுக்களையும், எருமைகளையும் வைத்து வளர்த்து, அவை தரும் பாலை அருகிலுள்ள நகரங்களுக்கு அனுப்பலாம். எஞ்சிய பாலிலிருந்து நெய், தயிர் செய்து விற்று ஊதியம் பெறலாம். மற்றும், பசு, எருமைகளால் கிடைக்கும் சாணம் முதலியன வயல்களுக்கு நல்ல எருவாகும். காளை, எருமை முதலியவற்றின் தோல்களும் கொம்புகளும் பல்வேறு கைத்தொழில்களுக்கு உதவும். பாற்பெட்டி செய்து அனுப்புவதில் டென்மார்க் நாட்டு மக்கள் மிகுந்த இலாபம் அடைகின்றனர். பாற்பண்ணை அமைத்துப் பெருக்குதலால் கால்நடைகள் விருத்தியாகும்.

கிராமங்களில் வீட்டின் புறக்கடையிலும், தோட்டங்களின் ஓரங்களிலும், ஆற்றின் கரையோரங்களிலும்,



பிறவிடங்களிலும் மூங்கிற் புதர்களைக் காணலாம். மூங்கில்களைப் பயன்படுத்தி வருவாய்க்குரிய வழியைச் செய்து கொள்ளலாம். மூங்கில்களை வீட்டுக் கூரை வேய உபயோகிக்கலாம். மூங்கில் தட்டிகள், மூங்கிற் பாய்கள், முறங்கள், கூடைகள், விசிறிகள் முதலியன செய்யலாம். அவ்வாறு செய்யுங்கால் தம் அறிவு கொண்டு, பல பொருள்களைப் பார்த்து வெவ்வேறு வகைப்பொருள்களைச் செய்வதையும்,

அவற்றிற்குப் பல்வேறு நிறங்கள் அளித்துச் செய்வதையும் கிராம மக்கள் மேற்கொள்வாராயின் பேரூதியம் பெறலாம்; கைத்தொழிலும் விருத்தியாகும். கிராமங்களில் வயலோரங்களிலும், ஏரிக்கரைகளிலும், ஆற்றோரங்களிலும் கோரை புதர் புதராக மண்டிக் கிடக்கும். அவற்றைக் கொண்டு கோரைப்பாய் பின்னி விற்கலாம். கற்றாழையிலிருந்து நாரெடுத்துக் கயிறு திரிக்கலாம். கிராம மக்கள் சிறிது முயற்சியோடு ஊன்றிக் கவனிப்பாராயின் அவர்களால் செய்யக்கூடியனவும், பொருள் தருவனவுமான கைத்தொழில்களைச் செய்து மேன்மை எய்தலாம்.

கோழி, வாத்து முதலியவற்றை வளர்த்தலும் கிராமவாசிகளுக்கு நன்மை தருவதாகும். நல்ல சாதிக் கோழிகளையும் வாத்துக்களையும் வாங்கி நல்ல உணவுப் பொருள்களைக் கொடுத்து வளர்க்க வேண்டும். அவைகளுக்கு ஏற்றவாறு கூண்டுகள் தயாரித்து வைக்க வேண்டும். நல்ல இடங்களில் அவைகளை மேயவிட்டுப் பாதுகாக்க வேண்டும். அவையிடும் முட்டைகளை அருகிலுள்ள நகரங்களுக்கு அனுப்பி விற்று ஊதியம் பெறலாம். கோழிகளையும் பெருக்கி விற்கலாம்.



தேனீ வளர்த்தல்

தேனீ வளர்த்தல் மிக்க இலாபந்தரும் தொழிலாகும். கிராமங்களில் வீடுகள் தனித்தனியாகவும், தோட்டங்

களுக்கு இடையிலும் இருக்கும். தோப்பும் துரவும் கிராமங்களில் இருக்கும். மலர்ச் செடிகளைப் பயிரிட்டு வளர்க்கப் பரந்த இடமும் இருக்கும். ஆதலால் தேனீ வளர்த்தல் கிராமங்களில் எளிது. தேனீ வளர்த்தற்கு நல்ல கூண்டுகளைத் தயாரித்தல் வேண்டும். அவற்றில் தேனீக்களை வைத்து வளர்க்க வேண்டும். பல தேனீக் கூண்டுகளை அமைத்து, தேனைச் சேகரித்து விற்றால் நல்ல ஊதியம் பெறலாம்.

கிராமங்களில் காய் கறித் தோட்டம், பழத் தோட்டம், பூந்தோட்டம் என்பவற்றை மிகுதிப்படுத்திப் பாடுபட்டால் நல்ல வருவாய்க்கு வழியுண்டு. காய்கறி, பழம், பூ என்பவைகளில் எக்காலத்திலும் பயிரிடக்கூடியவை உள்ளன. அவை குடியானவனுக்கு நாள்தோறும் வேண்டும் செலவிற்குரிய தொகையை அளிக்கவல்லது. காய்கறி, பழவகைகள், பூக்கள் என்பவற்றை அன்றாடம் அருகிலுள்ள நகர்களுக்கு அனுப்பி விற்கலாம்.

பனை மரங்கள் மிகுந்துள்ள கிராமங்கள் உண்டல்லவா? அத்தகைய கிராமங்களில் உள்ளவர்கள் அப்பனைமரங்களைத் தங்கள் வருவாய்க்குப் பயன்படுத்திக்கொள்ளலாம். ஓலைகளால் விசிறி செய்தல், கூடை முடைதல், பனைவெல்லம் எடுத்தல், பனங்கற்கண்டு தயாரித்தல் முதலியன செய்து ஊதியம் பெறலாம்.

தென்னை மரங்கள் மிக்குள்ள கிராமங்களில் உள்ளவர்கள் தென்னை ஓலை முடைதல், பூக்குடலை பின்னுதல், துடைப்பம் தயாரித்தல், கயிறு திரித்தல், தேங்காய்களைக் காய வைத்துக் கொப்பரைகள் தயாரித்தல், தேங்காய் எண்ணெய் தயாரித்தல், தேங்காய் ஓடுகளைக் கொண்டு அகப்பை, பொத்தான்கள் அமைத்தல் முதலியன செய்து மிகுந்த பொருள் பெறலாம். மலையாள நாட்டு மக்கள் தென்னையால் பலவகையில் கைத்தொழில்களைப் பெருக்கி மேன்மை அடைகின்றனர்.

கிராமத்தில் உள்ளவர்கள் தம் கிராமங்களில் எப் பொருள்கள் மிகுதியாகக் கிடைக்கின்றனவோ அவற்றைக் கொண்டு செய்யக்கூடிய கைத்தொழில்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். சில கைத்தொழில்களைக் கிராமத் தார் கூட்டுறவு முறையில் செய்து ஊதியம் பெறலாம். கூட்டுறவு முறையில் கிராமத்தார்கள் அரிய பெரிய கைத் தொழில்களை எளிதில் செய்யலாம்; இலாபத்தைப் பங்கிட்டுக் கொள்ளலாம். பெருந்தொகை வேண்டுமே என்று கவலைப்பட வேண்டுவதில்லை. மற்றும், அதனல் கிராமத்தாருள் ஒற்றுமை மிகும். இவைகளே அன்றிக் கிராமத்தார்கள் விளையாட்டுப் பொருள்களைச் செய்யலாம். கயிறு திரித்து விற்கலாம். தோல் சாமான்கள் செய்யலாம். பல்வேறு வகை மட்பாண்டங்கள் செய்யலாம். பசு, எருமை, எருது என்பவற்றின் கொம்புகளைக் கொண்டு பொத்தான், கத்திப்பிடி, சீப்பு முதலியன செய்யலாம். ஆட்டுமயிரினல் கம்பளி நெய்யலாம். கோரை, மூங்கில் இவற்றைக் கொண்டு பாய்கள், கூடைகள் முதலியன செய்ய லாம். பலவகை மரச்சாமான்கள் செய்யலாம். இவைகளைக் கூட்டுறவு முறையிலோ, தனித் தன்மையிலோ கிராமத் தார் செய்வதென உறுதியும் ஊக்கமும் கொள்வாராயின் பின்னர் அவர்களுக்கு நிகராக வாழ்பவர் எவருமில்லை என்றே கூறலாம். எல்லாவற்றிற்கும், ஊக்கம், உறுதி, உழைப்பு, ஒரு நிமிடத்தையும் வீணுக்காமை என்னும் உணர்ச்சி என்பனவே வேண்டப்படுவன. உழைத்து வேலை செய்து பெரும் பொருளீட்டி இன்ப வாழ்க்கை நடத்துவதெனக் கிராமத்திலுள்ள ஒவ்வொருவரும் மனத் தில் உறுதி கொள்ள வேண்டும். மனமுண்டானல் இடம் உண்டு அல்லவா? "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?" எனவே கிராமத்தாரிடம் ஊக்கம், உழைப்பு, உறுதி, உணர்ச்சி என்பன வேண்டும். ஒற்றுமை வேண்டும். 'ஒன்றுபட்டால் உயர்ந்த வாழ்வுண்டு' என்பது தேற்றம்.

### பொருள் காண்க

விவசாயி, உயிர்நிலை, இயலாது, பொருளாதார நிலை, வசதி, கவனம், காருகவினை, ஈட்டி, சேகரித்து, ஊதியம், கூட்டுறவு, தேற்றம்.

### சிறுவிடை வினுக்கள்

1. இந்தியா எத்தகைய தேசம்?
2. கிராமங்களில் நாம் எவற்றைக் காணலாம்?
3. விவசாயிக்குரிய துன்பங்களில் மூன்றினை எழுதுக.
4. பண்டைக் கிராம மக்கள் கைக்கொண்ட தொழில்கள் எவை?
5. கிராம மக்கள் துன்பமின்றி வயிறார உண்டுவாழச் செய்வதற்கு ஏற்றவற்றுள் இரண்டினைக் குறிப்பிடுக.
6. கிராமக் கைத்தொழில்கள் யாவை?
7. கிராமத்தார்கள் செய்யத்தக்க குடிசைக் கைத்தொழில்கள் யாவை?

### கட்டுரையாக்கம்

1. நவீனமாகக் கிடைத்துள்ள மின்சாரம், ரேடியோ, உழவுத் தொழிற்குரிய பொறிகள், எருவிற்குரிய பொருள்கள் என்பவற்றை எவ்வெவ்வாறு கிராம மக்களிடையே பரவச் செய்யலாம்?
2. கிராமங்களில் கூட்டுறவு இயக்கம் வேண்டும் என்பதை விளக்குக.
3. கல்வி, சுகாதாரம்பற்றி நீ கிராம மக்களுக்குச் செய்யக்கூடியவை யாவை?
4. கீழ்வருவனவற்றைப்பற்றிக் கைத்தொழிற் கட்டுரைகள் எழுதுக. (ஒவ்வொன்றும் பத்து வரிகளுக்குள் இருத்தல் வேண்டும்.)
    1. சோப்புச் செய்தல்.
    2. பாற்பண்ணை.
    3. காய்கறி, பழம், பூந்தோட்டம்.
    4. தென்னை, பனை என்பவற்றிலிருந்து கிடைக்கும் பொருள்களால் செய்யக்கூடிய கைத்தொழில்கள்.
    5. மண், மரம், கொம்பு என்பன கொண்டு செய்யக்கூடிய கைத்தொழில்கள்.

### மொழிப் பயிற்சி

1. எதிர்சொல் கூறுக:—

| | |
|---|---|
| பெரும்பாலோர் | × |
| இயலாது | × |
| இயற்கைப்பொருள் | × |
| மேனாட்டார் | × |

2. பிரித்துக் காட்டுக :—
முப்பத்திரண்டு, பொருளாதாரம், எண்ணெய், வருடத்திற்குரிய, பாற்பண்ணை, பயிரிட்டு, தேனீ, வீணாக்காமை.

3. (அ) கிராமங்களில் மின்சார வண்டிகள், விமானங்கள், தொழிற்சாலைகள் முதலானவற்றைக் காணவியலாது.

(ஆ) வயல்கள், தோட்டங்கள், ஆடுகள், மாடுகள், ஏரிகள், குளங்கள், நெற்களங்கள் முதலியனவே காணலாம்.

—இவ்விரண்டும் எவ்வகை வாக்கியங்கள்? விளக்குக.

4. கையால் நூற்று, பொருள்களை உண்டாக்குவது, நகரங்களில் நடைபெறும், ஒரு வருடத்திற்கு, வயலின் கண், கிராமத்தாரது செல்வம். — இவற்றில் உள்ள வேற்றுமை உருபுகளைக் குறிப்பிட்டுக் காட்டுக.

## 10. புலவர் திறன்

தமிழ் நாட்டில் பேரரசர்களும், குறுநில மன்னர்களும் விளங்கியிருந்தனர். அத்தகைய குறுநில மன்னர்களுள் சிலருடைய வழிவழியாக வந்தோர் இன்றும் சிலருளர். அவர்களுள் சேதுபதிகள் என்பார் சிறந்து விளங்கினர். இராமபிரானல் கட்டப்பட்டதாகிய அணைக்கு 'சேது' என்று பெயர். அதனைக் காவல் புரிதற்கென நியமிக்கப் பட்டவர் ஆதலின் சேதுபதிகள் அப்பெயரைப் பெற்றனர் என்பர் ஆன்ரேர். இவ்வரசர்கள் அறச்செயலிலும் மறப் பண்பிலும் மிகச் சிறந்தவர்கள்; மற்றும் தாய்மொழிப் பற்றிலும் தலைசிறந்தோராய் விளங்கி வந்தனர். வீரமும் தமிழறிவும் இவர்கள் குலச் செல்வங்கள் என்பது பொய்யாகாது. இவர்கள் தமிழகத்தில் தமிழ் வள்ளல்க ளாகவும் விளங்கினர். தமிழ்ப் புலவர்களை ஆதரித்து, அவர்களோடு உரையாடி மகிழ்வதே இவர்களுடைய பொழுது போக்கு.

தளவாய் சேதுபதி என்பார் அக்குடியினருள் ஒருவர். அவருக்குக் கங்கை நாச்சியார் என்ற ஒரு சகோதரி உண்டு. அவர் கி. பி. 1635 முதல் 1645 வரை அரசாண்டார். அவர் தம் சகோதரியின் புதல்வரைத் தாமே பேணி வளர்த்து அவர்க்கு அரசை அளித்தார். அப்புதல்வரே தளவாய் இரகுநாத சேதுபதி எனப்படுவார். அவர் கி. பி. 1645 முதல் 1670 வரை அரசாண்டார். அத்தளவாய் இரகுநாத சேதுபதி தமிழில் அகத்தியர் போன்று விளங்கி ஞர்; போரிலோ முருகனை ஒத்தவர் என்னலாம். புலவர்கள் யாவரும் அவருக்குப் பாமாலை சூட்டினர். அவர் ஈகையில் மேகத்தையும், காமதேனுவையும், கற்பகதருவையும், சிந்தாமணியையும் ஒத்தவர் என்று புலவர்கள் போற்றிக் கூறுவர். முத்தமிழ்ப் புலவர்கட்குப் புயலினும் எழுமடங் காக வேண்டுவனவற்றை வரையாது அளிக்கும் வள்ளல் தளவாய் இரகுநாத சேதுபதி.

மதுரை ஜில்லாவிலே, சிவகங்கை தாலுக்காவில் பொன்னுங்கால் என்று ஒரு கிராமம் உள்ளது. அக்கிரா

5

மத்தில் தமிழ்ப் புலவர் பரம்பரையில் உதித்தவர் அமிர்த கவிராயர் என்பவராவர். அமிர்த கவிராயர் இரகுநாத சேது பதியின் அவைக்களப் புலவர்களுள் தலைமை பெற்று விளங்கினர். இக்கவிராயரின் செய்யுட்கள் மிகச் சுவை உடையனவாயும் இன்பம் பயப்பனவாயும் இருக்கும். சேது பதியின் உள்ளம் குளிர்ந்து மகிழும் வண்ணம் அவ்வப் பொழுது தம் இனிய செய்யுட்களால் இப்புலவர் மகிழ்விப் பார். அச்செய்யுட்களின் சுவையுணர்ந்து இரகுநாத சேது பதியும் புலவர் உள்ளம் குளிரவும், மிடி தீரவும் வேண்டுவன அளித்து வந்தார்.

ஒரு சமயம் அரசரும், அமிர்த கவிராயரும், பிற புலவர் களும் மாலைப்பொழுதில் பூம்பொழில் ஒன்றிலிருந்து உரையாடிக் கொண்டிருந்தனர். புலவர்கள் அரசர் கேட் பனவற்றிற்கெல்லாம் தக்கவாறு உரைநடையிலும் செய்யுட்களிலும் விடையளித்து உவப்பித்து வந்தனர். அந்நிலையில் அரசர் புலவர்களைப் பார்த்து, "ஒரே விஷ யத்தைப் பொருளாகக் கொண்டு ஒரேவகைப் பாவில் ஒவ்வொருவரும் எவ்வளவு பாடல்களைப் பாடுவீர்கள்?" என்று கேட்டார். ஒரே பொருளைப்பற்றி ஒருவகைப் பாட்டில் எத்துணை வகையாகக் கூறினும் ஒரு சில செய் யுட்கள் தாமே கூற முடியும்? ஆதலால் புலவர்கள் தத்தம் திறமைக்கேற்றவாறு பத்து, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது பாடல்கள் இயற்றுவோம் என்றனர். அப் பொழுது அமிர்தகவிராயர், "நான் நூறு பாடல்கள் இயற்றுவேன்" என்றார். அம்மொழிகளைக் கேட்ட அங்கி ருந்த புலவர்கள் வேறுவிதமாக அவர் கூறியதை அமைத்து, 'நானூறு பாடல் செய்வேன்,' என்று கூறிய தாகத் தர்க்கித்தனர். அந்நிலையில் இரகுநாத சேதுபதி, 'நான் நூறு பொன் அளிப்பேன்' என்றார். இந்நிலையில் அமிர்தகவிராயர், "இதற்கோ இவ்வளவு போராட்டம்? நானூறும் பாடுவேன்" என்றார். 'குறித்த தவணைக்குள் ஒரு வகைப்பாவில், ஒரே விஷயத்தை அமைத்து நானூறு பாடல்களை எவ்வாறு பாடுவது? கற்பனையும் கவி பாடும்

ஆற்றலும் எவ்வளவு படைத்தவராதல் வேண்டும்?' என்று யாவரும் வியப்புற்றிருந்தனர்.

அமிர்த கவிராயர் மனம் அரசர் விரும்பிய கருத்தைப் பற்றி நானூறு கவிகள் பாடுதலில் ஆழ்ந்திருந்தது. குறித்த தவணைக்குள் கவிராயர் நானூறு பாடல்களையும் பாடி முடித்தார். முதலிரண்டடிகளில் அரசருடைய பெருமைகளையும், பின் இரண்டடிகளில் அரசர் அளித்த பொருளையும் பல் வேறு வகையாகத் தம் மதி வன்மையால் அமைத்துப் பாடினார். குறித்த நாளில் அரண்மனையில் புலவர்கள் கூடினர். தளவாய் இரகுநாத சேதுபதியும் வந்தமர்ந்தார். அமிர்த கவிராயர் தாம் பாடிய நானூறு பாடல்களை எடுத்துக் கூறி, பொருளையும் தெளிவாகச் சொல்லி யாவரையும் மகிழ்வித்தார். அரசரும் ஏனை யோரும் புலவரது வாக்கின் நயத்தையும், பாடல்களின் பொருள் ஆழத்தையும், வார்த்தைகளையும் சுவைத்து அள விலா ஆனந்தங் கொண்டனர். அரசர் தாம் கூறியபடி நூறு பொற்காசுகளை அளிக்க வந்தார். அப்பொழுது புலவர் அமிர்த கவிராயர், "நானூறு தருகிறேன் என்றீர் களே, மறந்தீரோ?" என்றார். அரசர், "நான் அப்படிச் சொன்ன நினைவில்லையே" என்றார். "அதற்குக் கவிரா யர் மூந்நூறு தருகிறேன் என்றீர்" என்றார். (மூன்றூறு என்று சொல்லளவில் பிரிக்கலாம்) "அவ்வாறு சொன் னதாகவும் நினைவிலில்லை" என்றார் அரசர். அதற்குக் கவிரர்யர், "நினைத்துப் பாருங்கள், "இரு நூறு தருகி றேன்" என்றது பொய்யாமோ?" என்றார். "அதுவும் நான் சொன்னதாகத் தோன்றவில்லையே" என்றார் அரசர். "ஆனால் 'நானூறு தருகிறேன்' என்றது பொய்யோ? இல்லையே" என்றார் கவிராயர். உடனே அரசர் கவிராயரின் சமத்காரத்தை உணர்ந்து மகிழ்ந் தார். இரு, நூறு என்றும், மூன் நூறு என்றும், நான்கு நூறு என்றும் பொருள் கொண்டு கூறிய வித்தகம் அறிந்து மகிழ்ந்த அரசர், அப்புலவர் பெருமானுக்கு நானூறு பொற் காசுகளை அளித்தார். அன்றியும் அவர்

தம் அன்பிற்கு அறிகுறியாகப் பொன்னுங்கால் என்னும் ஊரையும், அப்புலவரும் புலவரின் சந்ததியாரும் அனுப விக்கும்படி முற்றூட்டாக அளித்தார். கிராமத்தை மானிய மாகப் பெற்ற புலவர் மன்னரின் வண்மையையும், தமிழறி வையும் கண்டு வியந்து மகிழ்ந்து வாயார வாழ்த்தினர். இதுவன்றோ புகழ்! இதுவன்றோ புலமை!!

### பொருள் காண்க

குறுநிலமன்னர், வழிவழியாக, நியமிக்கப்பட்ட, தொன்றுதொட்டு, அறச்செயல், மறப்பண்பு, வள்ளல், முத்தமிழ், புயல், வரையாது, உதித் தவர், பூம்பொழில், உவப்பித்து, போராட்டம், முற்றூட்டு, மானியம், தர்க் கித்தனர், மிடி.

### சிறுவிடை வினாக்கள்

1. சேதுபதி—பெயர்க்குக் காரணம் கூறுக.
2. சேதுபதிகளின் இயல்புகளை விளக்குக.
3. தளவாய் இரகுநாத சேதுபதி எத்தகையவர்?
4. பொன்னுங்கால் எங்குள்ளது?
5. நானூறு பாடல்—இத்தொடரை எவ்வெவ்வாறு பிரித்துப் பொருள் கொள்ளலாம்?
6. அமிர்த கவிராயர் புலமை எதனால் விளங்குகிறது?
7. நானூறு, முந்நூறு, இருநூறு—இவற்றைப் பிரித்து எவ்வெவ் வாறு பொருள் கொண்டார் புலவர்?

### கட்டுரையாக்கம்

1. சேதுபதிகளைப்பற்றி ஐந்து வரிகள் எழுதுக.
2. சேதுபதிகளின் தமிழ்ப்பற்றினை விளக்கி எட்டு வரிகள் எழுதுக.
3. இரகுநாத சேதுபதியின் இயல்புகளைப் பத்து வரிகளில் எழுதுக.
4. அமிர்த கவிராயரின் கவித்திறமையைப் பத்து வரிகளில் எழுதுக.
5. "பிற்காலத்து வள்ளல்களும் தமிழ் வளர்ச்சியும்" என்பது பற்றி ஒரு ஐந்து நிமிஷப் பேச்சிற்கு வேண்டிய குறிப்புகள் எழுதுக.

### மொழிப் பயிற்சி

1. சேர்த்து எழுதுக:—

நான் + நூறு
நான்கு + நூறு
முன் + நூறு
மூன்று + நூறு
இரு + நூறு
இரண்டு + நூறு

} வேறுபாடு விளங்குமாறு பொருளெழுதி விளக்குக.

2. **பிரித்துக் காட்டுக :—**

**விளங்கியிருந்தனர், தமிழகம், அறச்செயல், இரண்டடிகள், பொற்காசு.**

3. இராமரால் கட்டப்பட்ட அணைக்கு 'சேது' என்று பெயர் :
—இவ்வாக்கியத்தில் சேது என்ற சொல்லிற்கு இருபுறத்திலும் இடப்பட்ட குறியின் பெயர் யாது? அஃது எப்பொழுது வரும்? ஓர் உதாரணம் தருக.

4. அப்பொழுது அமிர்த கவிராயர் நான் நூறு பாடல்கள் இயற்றுவேன் என்றார் அம் மொழிகளைக் கேட்ட அங்கிருந்த புலவர்கள் வேறு விதமாய்க் கூறியதாக அமைத்து நானூறு பாடல்கள் செய்வேன் என்று கூறியதாகத் தர்க்கித்தனர் அந்நிலையில் இரகுநாத சேதுபதி நான் நூறு பொன் அளிப்பேன் என்றார் இந்நிலையில் அமிர்த கவிராயர் இதற்கோ இவ்வளவு போராட்டம் நானூறும் பாடுவேன் என்றார்—இதனைத் தெளிவாக விளங்குமாறு சொற்களைப் பிரித்து எழுதி, ஏற்ற நிறுத்தக் குறிகளையும் இடுக.

## 11. பேசும் படக்காட்சி

காலம் செல்லச் செல்ல, விஞ்ஞானம் வளர வளர, மக்கள் அறிவும் வளர்ந்து கொண்டே வருகிறது. அதனல் மக்களில் கூரிய அறிவுடையோர் பற்பல அதிசயங்களேக் கண்டுபிடிக்கின்றனர்; பஞ்சபூதங்களேயும் தம் அறிவின் வலியால் தமக்கு ஏவல் செய்யுமாறு ஆக்கிக் கொள்கின்றனர். சிற்பம், ஓவியம் என்ற கலேகளால் ஒரு மனிதன் உருவைச் சிலேயில் செதுக்கலும், திரைச் சீலேயில் தீட்டலும் கூடும். அவை எவ்வளவு திறம்படச் செய்யப்படினும் உண்மையுருவின் இயல்பு யாவும் அவற்றில் அமைந்துள்ளன எனக் கூறவியலாது. ஆனல், இக்காலத்தில் விஞ்ஞான வளர்ச்சியின் பயனுகத் தோன்றிய புகைப்படம் எடுத்தலால் உண்மை உருவின் காட்சியை உள்ளவாறே காணலாம்.

மின்சார சக்தியால் பல புதுமைகளேக் கண்டுபிடித்தவர் உலகப் புகழ் பெற்ற தாமஸ் ஆல்வா எடிஸன் என்பவர் ஆவர். அவர் புகைப்படம் பிடித்தலேப்பற்றி நெடுநாட்கள் ஆராய்ந்து வெற்றி பெற்ருர். அப்பெரியார், பொருள்களின் அசைவுகளே மிக விரைவில் பல படங்களாகப் பிடித்தால் அச்செயல் எவ்வளவு நற்பயனேத் தரும் என்றும் ஆராய்வாராயினர். அவ்வாறு பிடிக்கப்பட்ட அசைவுகளேக் காட்டும் படங்களே ஒரு வெண்ணிறத் திரைச் சீலேயில் தோற்றுவிக்கக் கூடுமானல், உண்மையான பொருள் இயல்பாக அசைவதுபோலத் தோன்றக் கூடும் என்று அவர் ஆழ்ந்து சிந்தித்து அறிந்தார். அதன் பயனுக ஒரு பொருளின் ஓர் அசைவைக் கணநேரத்தில் நாற்பத்தாறு படங்களாகப் பிடிக்கும் ஒரு கருவியை அமைத்தார். அப்பொறியே சினிமோடோகிராப் என்பது. அப்பொறியின் உதவியால் இயங்கு படக் காட்சியான சினிமா தோன்றியது.

புகைப்படம் பிடிப்பதற்கு உபயோகிக்கும் ஒரு கருவியையே சினிமாப் படம் பிடிக்கிறவர்கள் உபயோகிக்கின்றனர். ஆனல், அக்கருவியால் படம் பிடிக்குங்கால், அக்கருவிக்கு அருகிலுள்ள ஒரு கைப்பிடியைச் சுற்றிக்

கொண்டே இருப்பார்கள். அவ்வாறு சுற்றுவதால் படம் பிடிக்கும் கண்ணாடிக்குப் பின்புறத்தில் அமைந்துள்ள படத் தகடு, ஒரு கட்டையிலிருந்து மற்றொரு கட்டைக்குச் சுழன்றுகொண்டே செல்கிறது. அதனால் ஒரு பொருளின் ஓர் அசைவுக்குப் பல படங்கள் எடுக்கப்படுகின்றன. எனவே, அப்படங்கள் பொருளினுடைய அசைவின் பல பகுதிகளையும் விடாது தெளிவாகக் காட்டும். இவ்வாறு பல படங்கள் எடுத்தபின்,தகட்டிலுள்ள குற்றங்கள் நீங்குமாறு நன்கு கழுவிவிட்டு, புகைப்படமுறையில் படங்கள் பிடிப்பதுபோல் தனித்தனியாகப் படங்கள் எடுப்பார்கள். பின்னர் அத்தகடுகளைப் படக்காட்சிச்சாலையில் காட்டுவதற்கு ஏற்றவாறு அமைத்து இணைத்து, முன்புபோல் கட்டைகளில் சுற்றி வைப்பார்கள். அவற்றை **பிலிம்** என்பர்.

உருவங்களின் சலனங்களைப் படம் பிடிப்பது போல் அவ்வுருவங்களின் ஒலி, பேச்சு என்பவைகளையும் பதிவு செய்யக் கருவிகள் அமைந்துள்ளன. ஓசை, பேச்சு, பாட்டு என்பன ஒலிப்பதிவு செய்யப்பெறும். பின், அந்த ஒலிப்பதிவையும் படத்தகட்டின் ஓரங்களில் அமையப் பொருத்தி இணைப்பார்கள். உருவங்களின் அசைவும், அதற்குப் பொருத்தமான ஒலியும் ஒரே காலத்தில் உடன் நிகழுமாறு நுட்பமான இயந்திரங்களை அமைத்துள்ளனர். எனவே, இக்காலத்தில் சினிமாக் காட்சியில் உருவங்கள் அசைவதுடன், அவற்றின் உரையாடல், பாட்டு, ஓசை என்பனவும் பொருந்த அமைந்து, காண்பார் கண்களுக்கும் செவிகளுக்கும் இன்பம் விளைப்பனவாயுள்ளன. பின்னும் இக்காலத்தில் பன்னிறப் படங்களையும் எடுத்தற்கு ஆவன செய்துள்ளனர்.

சினிமாவில் நாம் படங்களைப் பார்க்கிறோம்; வெள்ளித் திரையில் படங்களைக் காண்கிறோம். படக்காட்சிச்சாலையில் **புரொஜெக்டர்** என்ற பெயருள்ள ஒரு பொறியுள்ளது. அதில் ஒரு பூதக்கண்ணாடி யுண்டு. அதன் பின்புறத்தே மிக்க ஒளியுள்ள ஒரு மின்சார விளக்கு உள்ளது. பூதக்கண்ணாடி படத்தகட்டிலுள்ள உருவங்களைப் பெரியனவாகக் காட்டும்.

அப்பூதக்கண்ணுடிக்கும் விளக்கிற்கும் இடையில் பல படங்கள் அமைந்த சுருள் விரிந்து கொண்டே செல்லும். அவ்வாறு அப்படச் சுருள் விரிந்து கொண்டே செல்ல, அதனுடன் இணைக்கப் பெற்றிருக்கும் ஒரு கைப்பிடியை




சினிமாப் படம் காட்டும் புரொஜெக்டர் இயந்திரம்

ஒருவர் சுழற்றிக் கொண்டே இருப்பார். மின்சார சக்தியாலும் அக் கைப்பிடியைச் சுழலும்படி செய்வதுண்டு. அதனுல் ஓர் உருவின் ஓர் அசைவிற்கமைந்த பல படங்கள் ஒன்றன் பின் ஒன்ருய் மிக வேகமாகச் சுழலுவதால்

வெள்ளித் திரையில் உருவங்கள் இயற்கையாக அசைவது போலக் காணப்படுகின்றன.

இருபதாண்டுகளுக்கு முன் சாதாரணமான இயங்கும் படக்காட்சியே இருந்தது. இக்காலத்தில் எங்கும் பேசும் படக்காட்சியே உள்ளது. மின்சார சக்தி அமைந்த நகரங்களிலேதான் முன்பு படக்காட்சிகள் உண்டு. இக்காலத்தில் மின்சாரம் கிராமங்களிலும் பரவியுள்ளதால் எங்கும் படக்காட்சியைக் காண்பிப்பது எளிதாகின்றது. மின்சாரம் இல்லாத இடத்தில் 'டைனமோ' என்னும் கருவியைக் கொண்டு மின்சாரத்தை உற்பத்தி செய்து, படக்காட்சியைக் காட்டுகின்றனர். எனவே, படக்காட்சி இல்லாத இடமும், படக்காட்சி பாராத மக்களும் இக்காலத்தில் இல்லை என்று துணிந்து கூறலாம். இப்படக்காட்சி பல வகையில் பெருஞ் செல்வத்தை அளிக்கும் தொழிலாக அமைந்து, பலர் பிழைத்தற்குரியதாகவும் விளங்குகிறது. படம் பிடிப்பவர்கள் வேறாகவும், படக்காட்சிச் சாலை அமைத்துப் படங்களைக் காட்டுபவர் வேறாகவும் இரு பிரிவினர்களாய் அமைந்து தொழிலை நடத்த இடமுண்டு.

படக்காட்சியால் விளையும் நன்மைகள் பல; சில தீமைகளும் உள்ளன. படக்காட்சியால் மக்கள் அறிவு விருத்தியாகின்றது. அது மக்களுக்குச் சிறந்த பொழுது போக்காகவும் உள்ளது. உலகில் ஓவியக் கலை விருத்தியடைகிறது. பல்வேறிடங்களில் உள்ளனவும், ஒவ்வொருவரும் சென்று காண இயலாதனவுமாகிய காட்சிகளை நேரில் காண்பது போல் நாம் படங்களில் காணலாம். புராணக் கதைகளைப் படங்களாகப் பிடித்துக் காட்டுதலால் மக்களுள்ளத்தில் தெய்வபக்தியைத் தோற்றுவிக்கலாம். சமூக நலன் கருதி நடிக்கும் நாடகங்களைப் படம் பிடித்தலால் மக்கள் சீர்திருத்தம் அடைவர். கற்றவர்கள் காணின் அறிவு பெருகும்; கல்லாதவர் காணின் அறிவு பெறுவர். அறிவுடையோர்கள் சமூக நலன் கருதிக் காலத்திற்கு ஏற்பக் கதைகள் எழுதவும், நடிகர்கள் நடித்துக் காட்டவும் இத்தொழில் வாய்ப்பு அளிக்கின்றது. படக்காட்சியில்

காண்பன இயற்கை நிகழ்ச்சிபோல் காணப்படுதலின் மக்கள் மனத்தில் நன்கு பதிகின்றது. சங்கீதமும் சேர்வதால் இசைவளர்ச்சியையும் காணலாம். யாவர்க்கும் இசையில் விருப்பமுண்டாவதும் காணலாம்.

தவிர்க்கக்கூடிய படங்களைக் கழிப்பதற்காக அரசாங்கத்தார் ஒரு குழுவினரை ஏற்படுத்தியுள்ளனர். படங்களைப் பிடிப்போர் முதலில் அக்கூட்டத்தினருக்கு அப்படங்களைக் காட்டவேண்டும். அவர்களுடைய உடன்பாட்டைப் பெற்ற பின்புதான் பொதுமக்களுக்குப் படத்தைக் காட்டலாம். இதனால் தீமை விளைவிக்கும் படங்களைக் களைதற்கு வழி ஏற்படுகிறதன்றோ? அதனால் பல்லாயிரக் கணக்கான ரூபாய்கள் செலவில் படத்தைப் பிடிப்போரும், அச்சத்தோடு ஒழுங்கான படங்களையே பிடிப்பார்கள். படக்காட்சியைப் பற்றிய பல பத்திரிகைகள் தற்காலத்தில் தோன்றியுள்ளன. எனவே, இப்படக்காட்சி பலவகையாலும் மக்களுக்கு நன்மை தருவதோடு கண்ணிற்கும் செவிக்கும் விருந்தாக மிளிர்கின்றது. பலவகையாலும் உழன்று உழைத்துத் தளர்ச்சியும் சலிப்பும் கொண்ட ஒருவன், சிறிது நேரம் யாவற்றையும் மறக்கின்றான்; இன்பமான காட்சிகளையும் இனிய கீதங்களையும் கண்டும் கேட்டும் களிக்கின்றான்; புத்துயிரும் புத்துணர்ச்சியும் பெற்று விளங்குகின்றான். எனவே, படக்காட்சி தயாரிக்கப்படும் நுட்பத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். அக்கலை நன்றாக வளர உங்களுள் சிலராவது பாடுபட வேண்டும்.

### பொருள் காண்க

கூரிய, திரைச்சீலை, பஞ்சபூதம், ஏவல், செதுக்கல், நெடிது, இயங்கு, இணைத்து, சலனம், நுட்பம், தவிர்க்க, கீதம்.

### சிறுவிடை வினாக்கள்

1. மக்கள் அறிவு பற்றி அறிவதென்ன?
2. விஞ்ஞான வளர்ச்சியின் பயனாக விளைந்த நன்மைகளுள் இரண்டு கூறுக.
3. தாமஸ் ஆல்வா எடிஸனைப்பற்றி அறிவதென்ன?
4. புகைப்படத்தால் விளையும் நன்மைகளைப்பற்றி மூன்று வாக்கியங்கள் எழுதுக.

5. எடிஸன் எதனைப்பற்றி ஆராய்ந்தார் ?

6. கணத்தில் எத்தனை அசைவுப் படங்கள் எடுக்கலாம் ?

7. நாடகத்தினும் படக்காட்சி சிறந்தது : ஏன் ?

8. புரொஜெக்டரைப் பற்றி அறிவதென்ன ?

9. வெள்ளித்திரையில் உருவங்கள் இயற்கையாக அசைவது போலக் காணப்படுதற்குக் காரணம் என்ன ?

10. செல்வர் நல்ல படங்களையே தயாரிக்குமாறு செய்வதற்கு அரசாங்கத்தார் கையாண்டுள்ள முறை யாது ?

### கட்டுரையாக்கம்

1. மின்சார சக்தி பலவிதக் கைத்தொழில்களுக்கும் பயன்படுகிறது என்பதை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக. (ஒரு பக்கத்திற்குள்)

2. நீ ஒரு படக்காட்சிக்குச் சென்று கண்டதைப்பற்றிச் சுருக்கி எழுதுக.

3. 'தாமஸ் ஆல்வா எடிஸன்' என்பாரைப்பற்றி அறிவதென்ன ?

4. சலனப் படங்கள் எடுக்கும் முறையை விளக்கி எழுதுக.

5. படக்காட்சியினல் விளையக்கூடிய நன்மைகளை விளக்குக.

### மொழிப் பயிற்சி

1. **பிரித்துக் காட்டுக:**—வெண்ணிறத்திரை, பன்னிறம், உடனிகழுமாறு, அசைவிற்கமைந்த, பரவியுள்ளதால், புத்துணர்ச்சி.

2. சேர்த்து எழுதுக :—உழைத்து + தளர்ச்சியுற்று, படத்தை + காட்டலாம், நடித்து + காட்டும், ஓவியம் + கலை, புராணம் + கதை, படம் + காட்சி.

3. ஒலி, ஒளி, ஒழி—இம் மூன்று சொற்களையும் உபயோகித்துத் தனித்தனி வாக்கியங்கள் எழுதுக.

4. கலைகளால், பூதங்களை, அசைவுக்கு, படத்தகட்டில், ஒருவனது, நாட்டினின்று—இவைகளிலுள்ள வேற்றுமை உருபுகளை எடுத்து எழுதி இன்ன வேற்றுமை என்று குறிப்பிடுக.

5. செல்லச் செல்ல, வளரவளர, ஒன்றன்பின் ஒன்ருய் — இவைகளை அமைத்துத் தனித்தனி வாக்கியங்கள் எழுதுக.

6. படம் + எடுத்தல் = படமெடுத்தல்
திரையில் + உள்ள = திரையிலுள்ள
பேர் + அரசு = பேரரசு
மக்கள் + உள்ளம் = மக்களுள்ளம்
எங்கும் + உள்ள = எங்குமுள்ள
படங்கள் + இல்லாத = படங்களில்லாத

} இவ்வெடுத்துக் காட்டுகளிலுள்ள நிலைமொழிகளின் ஈற்றில் மெய்யெழுத்துகள் உள்ளன. வருமொழிகளின் முதலில் உயிர்கள் உள்ளன. அவை புணருங்கால் மெய்யின்மேல் உயிர் ஏறி நின்றது. இதிலிருந்து நீங்கள் அறிந்து கொள்ளும் புணர்ச்சி விதி யாது?

## 12. நாடுகள் கண்ட நல்லோன்

தேசப் படங்கள் நமக்கு எத்தகைய பயனை அளிக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியும். அவை எவ்வாறு கிடைத்தன? உலக முழுதுமுள்ள கடல்கள், கண்டங்கள், மலைகள், ஆறுகள், ஏரிகள், நகரங்கள், அங்கங்கு உள்ள இயற்கையமைப்பு, மண்ணின் தன்மை, தட்பவெப்ப நிலை, தாவரங்கள், மிருகங்கள், பறவைகள், மக்கள் என்பன யாவற்றையும் விளக்குவன தரைநூல் அல்லவா? அவையெல்லாம் உள்ள இடங்களைத் தெளிவாகவும், சரியாகவும் காட்டும் தரைப்படங்கள் எவ்வாறு கண்டுபிடிக்கப்பட்டன என்பது அறியத்தக்கதே. அவை பல்லோரின் பெருமுயற்சியாலும், நெடுவழிச் செலவாலும் கண்டறியப்பட்டன. மக்களில் சிறந்தோர் தம் உயிரையும் பொருட்படுத்ாது, பல இன்னல்களையும் தாங்கிக் கொண்டு, உலகோர் நன்மைக்கு உழைத்த உழைப்பின் பயனாலேயே இன்று நாம் தரைப்படங்களில் யாவற்றையும் எளிதில் அறிய இயல்கின்றது.

நமது நாட்டிற்குத் தென்கிழக்கில் ஏறக்குறைய 3000 மைல் தூரத்தில் ஆஸ்திரேலியா என்னும் கண்டம் உள்ளது. அதற்குக் கிழக்கில் நியூஸிலாந்து தீவுகள் உள்ளன. பஸிபிக் சமுத்திரத்தில் ஸாண்ட்விச், ஹாவாய், கிறிஸ்துமஸ், ஸொஸைடி, பிரெண்ட்லி முதலான பல தீவுகள் உள்ளன. ஆஸ்திரேலியா கண்டம் மற்றக் கண்டங்களினும் சிறியது. ஆயினும் தமிழ் நாட்டவர்களுக்கு அக்கண்டம் பலநூற்றாண்டுகளுக்கு முன்னரே தெரிந்திருந்தது என்பது சரித்திரத்தால் உணரப்படும் செய்தி ஆகும். ஆஸ்திரேலியாவும் நியூஸிலாந்தும் ஆங்கிலேய சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த குடியரசு நாடுகளாக இக்காலத்தில் விளங்குகின்றன. அவற்றை முதலில் கண்டறிந்தவர் ஜேம்ஸ் குக் என்பவராவார்.

ஜேம்ஸ் குக், இங்கிலாந்தில், யார்க்ஷயரில் கி. பி. 1728-ல் பிறந்தார். அவரது தந்தையார் ஓர் எளிய குடி

யானவர். அவர் வறுமையால் வாடினர். அத்தகைய தந்தைக்கு ஒரு சுமையாக இருக்க ஜேம்ஸ் விரும்பவில்லை. எனவே, அவர் தமது பன்னிரண்டாவது வயதிலேயே வீட்டை விடுத்து வெளியேறி, வேலைதேடிச் சென்றார். அவர் பல ஊர்களுக்கும் சென்றுவிட்டு, முடிவில் ஒரு சிற்றூரை அடைந்தார். அவ்வூர் கடற்கரையில் இருந்தது. அவ்வூரிலிருந்த ஒரு கடையில் ஜேம்ஸிற்கு வேலை கிடைத்தது. ஜேம்ஸ் தம் வேலையை ஒழுங்காகச் செய்து வந்தார். அக்காலத்தில் அவர் அடிக்கடி கடற்கரைக்குச் சென்று கடலின் காட்சிகளைக்கண்டு களிப்பதுண்டு. மீன் பிடிப்போர் படகுகளில் செல்லும் காட்சி, திரும்பும் காட்சி, கப்பல்கள் கரையை நோக்கி வருங்காட்சி முதலியன அவருடைய மனத்தைக் கவர்ந்தன ; கப்பலில் வேலை செய்யவேண்டும் என்ற விருப்பத்தையும் அவருக்கு உண்டாக்கின. அவ்விருப்பத்தைக் குக் தமது கடை முதலாளியினிடமும் வெளியிட்டார். இளைஞரது விருப்பம் கடை முதலாளிக்கு மகிழ்ச்சியையே உண்டாக்கிற்று. சில நாட்களில் அவரது உதவியால் குக்கிற்கு நியூகாஸில் என்னும் துறைமுகத்தில் வேலை கிடைத்தது. அதுமுதல் குக் கப்பலோட்டும் கலையின் நுட்பங்களை அறிவதில் தம் கருத்தைச் செலுத்தினர். நாளடைவில் அதில் தேர்ச்சியும் பெற்றார். அவரது உழைப்பு அவரை உயர்நிலைக்குக் கொண்டுவந்தது. அவர் எச். எம். எஸ். ஈகிள் என்னும் போர்க் கப்பலில் வேலைக்கு அமர்ந்தார். பிறகு அவர் 'மெர்க்குரி' என்னும் கப்பலுக்குத் தலைவராக நியமிக்கப்பட்டார்.



ஜேம்ஸ் குக்

குக், தாம் மேற்கொண்ட வேலைகளைத் திறமையோடும் ஊக்கத்தோடும் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். அவர் பஸிபிக் சமுத்திரத்திலுள்ள டாஹிடி என்னும் தீவுக்கு அனுப்பப்பட்டார். சுக்கிரப் பெயர்ச்சி அப்பொழுது நிகழ்ந்தது. அப்பொழுது வானத்திலும்,சிறப்பாய்ச் சுக்கிர னிலும் காணப்படும் நிகழ்ச்சிகளை ஆராயவே, குக் அனுப் பப்பட்டார். அவருடன் ஸர் ஜோஸப் பாங்ஸ் என்ற விஞ் ஞானியும், டாக்டர் ஸொலாண்டர் என்னும் தாவர நூல் வல்லுநரும் துணையாகச் சென்றனர். குக், அவ் விருவரோடும் பல பணியாளர்களோடும் 'எண்டவர்' என்னும் கப்பலில் பிரயாணமானார். பிரயாணம் தொடங்கிய பின் அவர்கள் முதலில் 'ரியோடிஜினிரோ' என்னும் துறைமுகத்தில் தங்கினார்கள்; பின் புறப்பட்டு டாஹிடித் தீவை அடைந்தார்கள்.

டாஹிடித் தீவில் மக்கள் உயர்ந்த உருவமும், அழகிய தோற்றமும், பழுப்பு நிறமும் வாய்ந்தவர்களாய், தேக சுத்தமுடையவர்களாய் விளங்கினர். அவர்கள் தினந் தோறும் மும்முறை குளிப்பது வழக்கம். பச்சை குத்திக் கொள்ளும் வழக்கமும் அவர்களிடம் உண்டு. ஓலையால் பாய் பின்னுதலும், நாரினால் ஆடை நெய்தலும் அவர்கள் தொழில்களாகும். ஆயினும் அவர்கள் தம் தீவிற்கு வரும் பிற மக்களின் பொருள்களைக் கவரும் வழக்கமுண்டு. குக் அவ்வருடம் நிகழ்ந்த சுக்கிரப் பெயர்ச்சியை அத்தீவில் இருந்து நன்கு ஆராய்ந்து குறித்துக் கொண்டார்.

குக் பின்பு பல தீவுகளையும் கண்டு ஆராய்ந்து நியூஸி லாந்தை அடைந்தார். அத்தீவு முன்னரே டாஸ்மன் என் பவரால் கண்டு பிடிக்கப்பட்டது. அங்கு நிகழ்ந்த நிகழ்ச் சிகள் பல. நியூஸிலாந்து இரு தீவுகளாலானது என்று குக் அறிந்தார். வடக்குத் தீவில் வாழ்ந்த மக்கள், மக்களைத் தின்னும் மனிதர் என்பதையும் குக் உணர்ந்தார். அங்கு வாழ்ந்த மக்கள் வீரம் மிக்கவர்கள். பின்னர், குக் தென் தீவை வலப்புறமாகச் சுற்றிக் கொண்டு ஆஸ்திரேலியாவை அடைந்தார்; அங்குப் பல அற்புதங்களைக் கண்டார்.

ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையோரமாய் வரும் பொழுது பவழப் பாறைகளைப் பார்த்தார். மேலும் அவர் பல இடங்களைப் பார்த்துவிட்டுப் பிறகு இங்கிலாந்துக்குத் திரும்பினர். இப்பிரயாணத்தின் பொழுது அவர் பல குறிப்புகள் எழுதி வைத்துக் கொண்டார்.

கி. பி. 1772-ல் குக் இரண்டாம் முறை சில மாலுமிகளுடன் புறப்பட்டார். இப்பிரயாணத்தில் அவர் நியூ கெலடோனியா, நார்போக் தீவு என்பவற்றைக் கண்டு பிடித்து விட்டு, ஹார்வின் முனை வழியாக இங்கிலாந்துக்குத் திரும்பினர்.

ஒரு வருஷத்திற்குப் பின், குக் மூன்ரும் முறை புறப்பட்டு டாஸ்மேனியாவுக்குச் சென்றார். பின் அமெரிக்காவின் மேற்குக் கரையின் வடகோடியை அடைந்தார். இப்பிரயாணத்தில் ஸாண்ட்விச் தீவுகளையும், மற்றும் பல தீவுகளையும் அவர் கண்டார். குக் இறுதியாக ஹாவாய் தீவுக்கு வந்தார். மூடநம்பிக்கையுடைய அத்தீவின் மக்கள் முதன் முறை அவரைத் தெய்வமாக எண்ணிப் பல உபசாரங்களைச் செய்தனர். மறுக்க முடியாத நிலையில் அவர்கள் செய்த உபசாரங்களைக் குக் ஏற்றுக் கொண்டார்.

அத்தீவில் முன்பு ஒருகால் ஒரு தெய்வம் வசித்ததாம். அஃது அத்தீவை விடுத்துப் பிறகு சென்றுவிட்டதாம். அவ்வாறு சென்றபொழுது, அது, தான் மீண்டும் அத்தீவிற்கு வரப்போவதாகவும், வருங்கால் தென்னை மரங்கள் அமைந்துள்ள தீவு ஒன்றில் தங்கப்போவதாகவும் கூறிச் சென்றதாம். இச்செய்தியில் நம்பிக்கை கொண்ட அத்தீவு மக்கள் குக் தான் தெய்வம் என்றும், அவரது கப்பல் தான் தீவு என்றும் நம்பினர். குக் மெல்ல அவர்களை விடுத்துப் பயணப்பட்டார். ஆனல் அவர் மேற் செல்லாதவாறு பெரும் புயல் வீசியது. அதனல் குக் ஹாவாய்த் தீவிற்கே திரும்பி வந்தார். அத்தீவின் மக்கள் இம்முறை, 'குக் நம்மைப்போன்ற மனிதரே; தெய்வமாயின் காற்ருலும், மழையினுலும், புயலாலும் எவ்வாறு அவருக்குத் தீங்கு உண்டாகும்?' என்று எண்ணினர். தாங்கள்

செய்த மரியாதைகளை அவர் ஏற்றுக் கொண்டது தவறு என்று சினங்கொண்டு அவர்கள் குக்கிற்குத் துன்பம் இழைத்தனர். குக் எவ்வளவோ அவர்கள் செய்த தீமைகளைப் பொறுத்துக் கொண்டும், அவர்களை மன்னித்தும், நல்லுரை கூறியும் பார்த்தார். ஆனால் அவை யாவும் வீணாயின. இறுதியில் குக் தப்பித்துக் கொள்ளும்பொருட்டு, தம்முடன் வந்தவர்களைக் கொண்டு அத்தீவு மக்களைச் சுடும் படி செய்தார். அத்தீவின் மக்கள் ஈட்டியாலும், பிற ஆயுதங்களாலும் தாக்கினர். பின் ஏற்பட்டது குழப்பமான போர். குக் கப்பலுக்கு மீளுங்கால் அத்தீவு மக்களில் ஒருவன் அவரை ஈட்டியால் முதுகில் குத்தினான். அதனால் குக் மணலில் சாய்ந்து உயிர் துறந்தார்.

குக் சிறந்த அறிவாளி. அவரிடம் உண்மையும், உழைப்பும், உற்சாகமும் குடிகொண்டிருந்தன. எங்கேயிலும் தாம் காணச் செல்லும் தீவிலுள்ள மக்களுக்கு இன்னல் இழைக்க அவர் மனம் இசைந்திலது. குக் தாம் கண்ட நாடுகளிலெல்லாம் பயிர்த்தொழில், கைத்தொழில், நாகரிகம், நல்வாழ்க்கை என்பன வளர்ந்தோங்க வழி கோலினர். அவருடைய முயற்சியின் பயனாகவே அக் காலத்து மக்கள் பல புதிய தீவுகளை அறியவும், அங்குச் சென்று குடியேறவும் இயன்றது. அவர் புகழை நாடவில்லை; புகழ் அவரைத் தேடிவந்தது. புத்தம் புது நாடுகளைக் கண்டறிந்த பெரியோர்களுள் குக் முன்னணியில் நிற்பவர் என்று கூறுவதில் தவறில்லை.

### பொருள் காண்க

தட்பம், வெப்பம், தாவரம், தரைநூல், பணச்செலவு, வழிச்செலவு, இன்னல், நூற்றாண்டு, குடியரசு, தேர்ச்சி, மாலுமி, ஆற்றல், நிகழ்ச்சி, வல்லுநர், துறைமுகம், முனை, இறுதி, பயணம், ஐயுற்றனர், குழப்பம், குடியேறல், சேதம்.

### சிறுவிடை வினாக்கள்

1. தரைப்படங்கள் காட்டுவன யாவை?
2. எவ்வாறு தரைப்படங்கள் தயாரிக்கப்படுகின்றன?
3. ஆஸ்திரேலியா எங்குள்ளது?

4. ஆஸ்திரேலியாவைப்பற்றிச் சரித்திரத்தால் அறியப்படும் செய்தி யாது?

5. குக் எங்குப் பிறந்தார்?

6. கப்பலில் செல்ல வேண்டும் என்னும் அவா குக்கிற்கு எவ்வாறு உண்டாயிற்று?

7. குக் முதன் முறை எக் கப்பலில் பிரயாணம் செய்தார்?

8. நியூஸிலாந்து யாரால் கண்டு பிடிக்கப்பட்டது?

9. குக் கண்டுபிடித்த சில தீவுகளைக் கூறுக.

10. குக் மூன்றும் முறை எத்தீவிற்குச் சென்றார்?

## கட்டுரையாக்கம்

1. குக் என்பவரின் முதற் பிரயாணத்தைப்பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

2. குக் என்பவரின் மூன்றும் பிரயாணத்தை விளக்கி எழுதுக.

3. டாஹிடித் தீவு மக்களைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் வரைக.

4. 'ஹாவாய்த் தீவு மக்களின் மூட நம்பிக்கையும் முரட்டுத்தனமும்' என்பதுபற்றிச் சுருக்கி வரைக.

5. கொலம்பஸ், வாஸ்கோ ட காமா, மங்கோபார்க், ஸ்காட், செங் குட்டுவனது வடநாட்டு யாத்திரை, இராஜேந்திர சோழன் கடாரத்தைக் கைப் பற்றியது—இவைகளைப்பற்றி உன் பள்ளிக்கூட நூல் நிலையத்தி லிருக்கும் புத்தகங்களை எடுத்துப் படித்துப் பார்த்துக் குறிப்புகள் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. பிரித்துக் காட்டுக :—தரைப்படம், உலகமுழுதுமுள்ள, தென் கிழக்கு, நூற்றாண்டு, ஓரளவு, கண்டறிய, பிரயாணமானர், அவ்விருவர், சுக்கிரப்பெயர்ச்சி, மிக்கிருந்தமை, மும்முறை.

2. சேர்த்து எழுதுக :—இயற்கை + அமைப்பு, பணம் + செலவு, கண்டு + அறிந்தவர், அவர்களிடம் + உண்டு, அ + வருடம், சுக்கிரன் + பெயர்ச்சி.

3. அத்தீவு முன்னரே டாஸ்மன் என்பவரால் கண்டு பிடிக்கப்பட் டது.—இது செயப்பாட்டு வினை வாக்கியம் அல்லவா? இதனைச் செய் வினை வாக்கியமாக மாற்றுக.

4. அவற்றை முதலில் கண்டறிந்தவர் ஜேம்ஸ் குக் என்பவராவார்: ஜேம்ஸ் குக் என்று தொடங்கி இவ் வாக்கியத்தை முடித்துக் காட்டுக.

# 13. வாதாபி வெற்றி

தமிழகத்தின் பிரிவுகளுள் தொண்டை மண்டலம் என்பதும் ஒன்று. அதனைத் தொண்டை நாடு என்றும் கூறுவர். தொண்டை மண்டலத்தை ஆண்ட மன்னர்கள் பலர். அவர்களுள் ஒரு மரபினர் பல்லவர் ஆவர். பல்லவர் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை ஆண்டனர். அவர்கள் காலத்தில் தொண்டை மண்டலம் பெருஞ் சிறப்புடன் விளங்கியது. அப் பல்லவ மன்னர்களால் தமிழகத்தில் கலைகள் வளர்ந்தன. பல்லவ மன்னர்களுள் மிகச் சிறந்தவர்கள் மகேந்திர வர்மனும், அவன் மகன் நரசிம்மவர்மனும் ஆவர். இவ்விரு பெருமன்னர்களின் காலங்களில் கலையும், கல்வியும் வளர்ந்தன; கற்கோயில்கள் பல கட்டப்பட்டன.

தென்னாட்டில் பல்லவர்கள் ஆண்டு வரும்பொழுது வடக்கே மகதநாட்டை ஹர்ஷவர்த்தனன் என்பான் ஆண்டுவந்தனன். அவன் பேரரசன்; படைவலி மிக்கவன். அவன் வடநாடுகளைக் கைப்பற்றிக் கொண்டு தக்காணத்தின் மீது படையெடுத்து வந்தான். ஆனால் அக்காலத்தில் தக்காணத்தின் ஒரு பகுதியை ஆண்ட சாளுக்கிய மன்னனான இரண்டாம் புலிகேசி என்பவன் ஹர்ஷனைத் தடுத்தான்; போர் செய்தான்; வெற்றியும் கொண்டான். இவ் வெற்றியினால் புலிகேசி மிகச் செருக்குற்றான். பிற நாடுகளைக் கைப்பற்ற வேண்டுமென்னும் ஆசையும் அவன் உள்ளத்தில் எழலாயிற்று. தென்னாட்டை வென்று தன் குடைக்கீழ்க் கொண்டுவர வேண்டுமென்று அவனுக்கு விருப்பம் உண்டாயிற்று. எனவே, புலிகேசி பல்லவ நாட்டின்மீது படை எடுத்தான்.

சாளுக்கியனது படை கடல்போல் பொங்கி எழுந்து பல்லவ நாட்டில் புகுந்தது. அப்பொழுது தொண்டை நாட்டை ஆண்டு கொண்டிருந்த பல்லவ மன்னன் மகேந்திரவர்மன். அவன் போர் நுட்பங்களை நன்குணர்ந்தவன். அவனது மைந்தன் நரசிம்மவர்மன் ஆண்டில் இளையனா

யினும் அஞ்சா நெஞ்சமும் போர்ப் பயிற்சியும் பெற்றவன். மகேந்திரவர்மன் போரின் பல நுட்பங்களை உணர்ந்தவன். படையெடுத்து வந்த பகைவரை அவன் தடை செய்யாது, அகநாட்டில் புகவிட்டு வாளா இருந்தான். அவனது தந்திரத்தையுணராத சாளுக்கிய மன்னனது படைகள் பல்லவனது நாட்டிற்குள் முன்னேறிச் சென்றன. பகைவர்க்கு எளிதில் உணவுப் பொருள் கிடைக்காதபடி மகேந்திரவர்மன் தடை செய்தான். ஊக்கத்துடன் முன்னேறிச் சென்ற பகைவர் படைகளுக்கு ஊக்கம் குன்றலாயிற்று. உணவுப் பொருளுக்கும் முட்டுப்பாடு உண்டாயிற்று. உணவில்லையேல் படையிலுள்ளார் என் செய்வர்? உண்ண உணவும் பருக நீரும் இன்றிப் பகைவர் தவித்தனர்.

இந்நிலையில் மகேந்திரன் சாளுக்கியர்களை வளைத்துக் கொண்டு போர் செய்யத் தொடங்கினன். எதிர்த்துப் போர் புரியமாட்டாது பகைவர் படைகள் பறந்தன. பல்லவர் வெற்றி பெற்றனர். தோல்வியடைந்த புலிகேசி தனது தலைநகரான வாதாபிக்குத் திரும்பினன். அப்போரில் இளவரசனன நரசிம்மவர்மன் தனது போர்த் திறத்தை நன்கு வெளிப்படுத்தினன்.

நரசிம்மவர்மன் கி. பி. 630-ல் மகேந்திரனுக்குப் பின் பல்லவ நாட்டிற்கு மன்னவனானன். அவனிடம் ஒரு சேனைத் தலைவர் இருந்தார். அவர் மாமாத்திரர் என்னும் மரபில் தோன்றியவர். மாமாத்திரர் என்பார் அரசனது ஆலோசனைக்குரிய அவையில் இருப்போர். அவர்களோடு கலந்தே மன்னன் எக்காரியத்தையும் செய்தல் மரபு. நரசிம்மனிடம் இருந்த மாமாத்திரர் பரஞ்சோதியார் என்பாராவர். அவர் வடமொழியிலும் தென்மொழியிலும் நல்ல பயிற்சி பெற்றவர்; படைத்தலைமை தாங்கிப் போர் புரிதலில் வல்லவர். அவர்க்கு மருத்துவத்திலும் சிறந்த பயிற்சி உண்டு. அவர் சிறந்த அரசியல் அறிவும் அனுபவமும் பெற்றிருந்ததோடு, கணிதத்திலும் தேர்ச்சிபெற்றிருந்தார். உண்மை, ஒழுக்கம், சிவபக்தி என்பவற்றிலும் அவர்

சிறந்து விளங்கினர். அவரை நரசிம்மவர்மன் சேனைத் தலைவராக வைத்துக் கொண்டான்.

'தோல்வியுற்றுச் சென்ற சாளுக்கிய மன்னனான புலிகேசி வாளாவிரான்; படைகளைத் திரட்டிக் கொண்டு போர்புரிய வருவான்' என்று பரஞ்சோதியார் கருதினர். நரசிம்மவர்மனும் அவ்வாறே கருதினன். எனவே அரசனும் படைத்தலைவரும், எந்தப் படையெடுப்பையும் தடுப்பதற்கு வேண்டிய படைகளைத் திரட்டித் தயாராக இருந்தனர்.

தோல்வியுற்ற சாளுக்கியனான புலிகேசிக்கோ எவ்வாறாயினும் பல்லவரை வெல்லவேண்டும் என்ற எண்ணம் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. 'வலிமை வாய்ந்த ஹர்ஷனைத் தக்காணத்தில் புகவொட்டாது தடுத்த புலிகேசி பல்லவனால் முறியடிக்கப்பட்டான்' என்ற அவச்சொல்லை அவன் அகற்றக் கருதினன். பகைவர்களை வெற்றி கொண்டாலன்றி அவன் மனம் சாந்தம் எய்தாது அன்றோ? அதனால் அவன் படைகளைத் திரட்டலானான். பெரும் போர்க்கு ஆவனவற்றைத் தேடிக்கொண்டான். பல்லவர்களைத் தாக்கி ஒடுக்காது விடுவதில்லை என்று அவன் மனத்தில் உறுதிகொண்டான். அதனால் காலத்தைச் சிறிதும் வீணாக்காது, செய்வன செய்து, சமயம் பார்த்திருந்தான். ஆண்டில் இளையனான நரசிம்ம வர்மனைப் போரில் வென்றுவிடலாம் என்று புலிகேசி மனப்பால் குடித்தான்.

புலிகேசி சமயம் பார்த்துப் பெரும் படையுடன் பல்லவனுடன் போர் செய்ய எழுந்தனன். சாளுக்கியனது படைகள் பல்லவ நாட்டில் கடல் அலைகள்போல் ஒன்றின் பின் ஒன்றாய்ப் புக்கன. நரசிம்மவர்மன் அந்நிலையை எதிர்பார்த்தான் அல்லனோ? அவ்வாறு சாளுக்கியன் படையெடுத்து வந்தது நரசிம்மனுக்கு அச்சத்தையோ வியப்பையோ தரவில்லை; சேனைத் தலைவரான பரஞ்சோதியாருடன் தன் படைகளைப் பல்வேறு இடங்களில் நிறுத்தினன். சாளுக்கியப் படைகள் பல்லவ நாட்டின்

எல்லைப்புறப் படைகளைத் தாக்கின; ஆங்காங்கிருந்த காவற் படைகளைக் கலக்கின; காஞ்சிமாநகரத்தை நெருங்கின. நரசிம்மவர்மனும் பரஞ்சோதியாரும் எல்லாவற்றையும் நன்கு கவனித்து வந்தனர். தந்தையின் தந்திரத்தை மைந்தன் உணராதிருப்பானே? சாளுக்கியரை அகநாட்டில் புகவிட்டான் பல்லவன். உள்நாட்டிற் புக்க சாளுக்கியனுக்கு, உதவியும் உணவுப் பொருளும் கிட்டாதவாறு, ஆங்காங்குத் தடைகளைச் செய்தான். பின்னர், அவன் தன்னுடைய பெரும் படையுடனும், பரஞ்சோதியாருடனும் சாளுக்கியரை வளைத்துக் கொண்டான்.

பல்லவ நாட்டினுள் புக்க சாளுக்கியப் படைகளுக்கு உதவியும் உணவுப் பொருளும் குன்றலாயின. முன்பு நேர்ந்த துன்பமே இப்பொழுதும் நேர்ந்தது. பல்லவப் படையினர் பகைவரை எப்புறத்திலும் வளைத்துக் கொண்டனர். கடும் போர் தொடங்கிவிட்டது. பல்லவர் படை உற்சாகத்தோடு போரிடுங்கால் சாளுக்கியர் படை சலிப்படைந்து திகைப்புற்றது. சாளுக்கியப் படை எத்தகைய உதவியும் பெற இயலாமையால் பின்நோக்கி ஓட நினைத்தது. பல்லவர் படை பகைவரை மடக்கி, பரியலம், மணிமங்கலம், சூரமாரம் என்னும் மூன்று இடங்களில் கடும்போர் விளைத்தது. சாளுக்கியர் பின் வாங்கினர்; பல்லவர் பகைவரைத் தாக்கி வெருட்டிக் கொண்டு முன்னேறினர். புலிகேசியின் படை சிதறியது. பல்லவர் அத்தகைய கடும் போர் விளைப்பர் என்று புலிகேசி எதிர்பார்க்கவில்லை. பரஞ்சோதியார் அரசனது ஆணைப்படி சாளுக்கியனைத் துரத்திச் சென்றார். பெரும் படையும் அவருடன் சென்றது. புலிகேசி புறங்காட்டி ஓடலானான். பரஞ்சோதியார் விடாது துரத்திச் சென்றார். தோற்று ஓடிய புலிகேசி தனது தலைநகரை அடைந்தான். பரஞ்சோதியார் அந்நகரை முற்றுகையிட்டுப் பெரும் போர் செய்து வெற்றி கொண்டார்.

வாதாபி நகரம் பரஞ்சோதியார் கைப்பட்டது. அரண்மனைச் செல்வமும், யானைகளும், குதிரைகளும் அவர்

வசமாயின. பரஞ்சோதியார் வாதாபி நகரின் நடுவில் வெற்றித்தூண் ஒன்றை நாட்டினர். அத்தூண் இன்றும் உள்ளது. அதில் 'வாதாபி' 'நரசிம்மவர்மன்' என்ற சொற்கள் இன்றும் காணப்படுகின்றன.

பரஞ்சோதியார் பெரு வெற்றியோடும், பெரும் பொருளோடும் காஞ்சிபுரத்திற்கு மீண்டார்; கொண்டு வந்த நிதிக்குவையை மன்னன் முன் வைத்துப் பணிந்தார். நரசிம்ம வர்மன் அளவிலா மகிழ்ச்சி கொண்டான். பரஞ்சோதியார் அழியாப் புகழ் எய்தினர். அவரது உருவச் சிலை ஒன்று காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயிலின் உட்பிராகாரத்தில் அமைக்கப்பட்டது. நரசிம்ம வர்மன் அவரது சிவபக்தியை அறிந்து, திரண்ட பொருள் அளித்து, அவரை ஓய்வு கொள்ளுமாறு வேண்டிக் கொண்டான்.

பரஞ்சோதியார் தமது படைத்தலைமைப் பதவியை விடுத்து, திருச்செங்காட்டங்குடி என்னும் ஊரை அடைந்தார். அவர் தம் பிற்கால வாழ்க்கையைச் சிவபூஜை செய்வதில் கழித்தார்; திருச்செங்காட்டங்குடியில் **கணபதீச்சரம்** என்ற கோயிலைக் கட்டுவித்தார். பரஞ்சோதியாரால் வாதாபியினின்றும் கொண்டுவரப்பட்ட விநாயகருக்கு **'வாதாபி விநாயகர்'** என்று பெயர். அப்பெயருடைய விநாயகர் திருச்செங்காட்டங்குடியிலும், திருவாரூரிலும் பிரதிஷ்டிக்கப்பட்டிருத்தலை இன்றும் காணலாம். பரஞ்சோதியாரின் மனைவியார் திருவெண்காட்டு நங்கை என்பவராவார்; மகன் சீராளன் என்னும் பெயரினன். பரஞ்சோதியார்க்கு **'சிறுத்தொண்டர்'** என்ற பெயரும் உண்டு. அவரது சிவபக்தி, அடியார் பக்தி என்பவற்றை விரிவாகப் பெரிய புராணத்தில் காணலாம். பரஞ்சோதியார் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர் ஆவார். பரஞ்சோதியாரின் வாதாபி வெற்றியைச் சேக்கிழார்,

> **"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாபித்**
> **தொன்னகரம் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்தும்**
> **பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்**
> **இன்னனஎண் ணிலகவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்"**

என்று புகழ்கின்றார்.

### பொருள் காண்க

மண்டலம், கலை, திறன், மரபு, உசாவு, மருத்துவம், ஆருச்சினம், முறியடித்தல், அகநாடு, உட்பிராகாரம், திருவாக்கு, ஈச்சரம், வாளா விருத்தல், அரியணை, ஆங்காங்கு, புறங்காட்டி, தலையெடுத்தல், வடபுலம், தண்டு, பகடு, பரி, இகல்.

### சிறுவிடை வினாக்கள்

1. பல்லவ மன்னர்களால் தமிழகம் பெற்ற நன்மைகளுள் மூன்றினைக் குறிப்பிடுக.
2. இரு பெரும் பல்லவர்கள் யாவர்?
3. புலிகேசி என்பவன் யாவன்? அவன் யாரைத் தக்காணத்தில் வரவொட்டாது தடுத்தான்?
4. மகேந்திரவர்மன் எவ்வாறு புலிகேசியைத் தோற்கடித்தான்?
5. பரஞ்சோதியார் யார்? அவருக்கு மறுபெயர் யாது?
6. பரஞ்சோதியார் வரலாற்றை யார் எந்த நூலில் கூறியுள்ளார்?
7. பல்லவனுக்கும் புலிகேசிக்கும் எவ்வெவ்விடங்களில் போர் நிகழ்ந்தது?
8. நரசிம்மவர்மன் புலிகேசியை வெல்வதற்குச் செய்த தந்திரம் யாது?
9. பரஞ்சோதியார் வாதாபியில் யாது செய்தார்?
10. கணபதீச்சரம் என்று எதற்குப் பெயர்?
11. வாதாபி கணபதி—இப்பெயர்க்குக் காரணம் கூறுக.
12. பரஞ்சோதியாருடைய மனைவி, மகன் ஆகிய இருவரின் பெயர்களை வரைக.

### கட்டுரையாக்கம்

1. 'புலிகேசி' என்பானைப் பற்றி எட்டு வரிகள் எழுதுக.
2. மகேந்திரவர்மனும் நரசிம்மவர்மனும் போர்ச் சூழ்ச்சிகளை நன்கறிந்தவர்கள் என்பதை எவ்வாறு விளக்குவாய்?
3. பரஞ்சோதியாரது வரலாற்றினை ஒரு கட்டுரையாக வரைக.
4. "பல்லவர்களும் கலைகளும்" என்ற பொருள் பற்றிப் பேசுவதற்குரிய குறிப்புகள் எழுதுக. (நூல் நிலையத்திலுள்ள பல்லவர்களைப் பற்றிய நூல்களைப் படித்துப் பார்க்கவும்)

### மொழிப் பயிற்சி

1. **பிரித்துக் காட்டுக:—** அரசனைன், பெயருடையவராவர், முறியடிக்கப்பட்டு, எழலாயிற்று, வீணாக்கவில்லை, நாற்புறமும், தோல்வியுற, உட்பிராகாரம், தலையெடுத்தல், பல்லவராட்சி,

2. **சேர்த்து எழுதுக:—**

வளைத்து+கொண்டான், செய்ததும்+அன்றி, சேனைக்கு+தலைமை, கொடிய+போர், அழியா+புகழ், கோயிலை+கட்டுவித்து.

3. கடல் அலைபோல்—இவ்வுவமையை விளக்குக.
4. 'அவன் வீரம் விளங்காதோ'—இஃது எவ்வகை வாக்கியம்? 'விளங்காதோ'—என்பது என்ன பொருள் தருகிறது?
5. பரஞ்சோதியாரைச் சேனைத் தலைவராகப் பெற்ற நரசிம்ம வர்மன் உயர்ந்து விளங்குதற்கு அரிய சந்தர்ப்பங்களும் கிடைத்தன—இவ்வாக்கியத்திலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களை வரைக.

## பொது வினாக்கள்

1. இக்காலப் போர் முறை யாது?
2. இக்காலப் போர் முறைக்கும் பழங்காலப் போர் முறைக்கும் வேற்றுமை என்ன?
3. தற்காலத்தில் போர்க்குரிய ஆயுதங்கள் யாவை? பழங்காலத்திய ஆயுதங்கள் யாவை?
4. இப்பொழுது இந்தியாவின் சேனைத்தலைவர் யார்?
5. 'போரினால் விளையும் தீமைகளும், போரைத் தடுக்கும் முறையும்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## 14. பணம்

பணம் என்பது யாது? அஃது இக்காலத்தில் ரூபாயைக் குறிக்கும். நிலம், மாடு, நகை முதலியனவும் செல்வமே. பண்டைக்காலத்தில் பணம் என்பது எவ்வாறு இருந்தது என்பது அறியத்தக்கதே. இன்று நம்நாட்டில் பொன், வெள்ளி, நிக்கல், செம்பு என்பவற்றால் நாணயங்கள் வழங்கப்படுதலைக் காண்கின்றோம். ஒரு ரூபாய், இரண்டு ரூபாய், ஐந்து ரூபாய், பத்து ரூபாய், நூறு ரூபாய் முதலாகப் பல தாள் நாணயங்கள் தற்காலத்தில் உள்ளன. இவைபோல் முன் இருக்கவில்லை. மிகப் பழைய காலத்தில் மக்கள் ஒருவகைப் பொருளைக் கொடுத்து வேறுவகைப் பொருளைப் பெற்றுக் கொண்டனர். இதற்குப் பண்டமாற்று என்று பெயர். இக்காலத்திலும் கிராமங்களில் நெல், அரிசி முதலியன கொடுத்துச் சாமான்கள் பெறுவதும், நகரங்களில் அரிசி போட்டுக் கருவேப்பிலை, கொத்துமல்லி வாங்குதலும், பழம் புடவைகளையும் சட்டைகளையும் கொடுத்துப் பித்தளைப் பாத்திரங்கள் முதலியவற்றை வாங்குதலும் உண்டல்லவா?

இவ்வாறு செய்வதில் பல இடையூறுகள் உண்டு. கொடுக்கல் வாங்கல் செய்பவர்களான இருதிறத்தார்க்கும் அப்பொருள் தேவையாயிருந்தாலன்றிப் பண்ட மாற்று நிகழாது. பண்டைக்காலத்தில் அவரவர்களுக்கு வேண்டியவைகளை அவரவர்களே செய்து கொண்டனர். அயலாரிடமிருந்து பெறவேண்டியவை சிலவாகவே இருந்தன. ஆதலால், அக்காலத்தில் பண்டமாற்றில் அதிகக் கஷ்டம் ஏற்படவில்லை. பிற்காலத்தில் தொழிற் பிரிவினை ஏற்பட்டது. அதனால் அவரவர் தாம் செய்யும் பொருள்களை விற்றே தமக்கு வேண்டிய பலவகைப் பொருள்களையும் பெற வேண்டியவராயினர். இதனால் வியாபாரம் வளர்வதாயிற்று. எனவே, பண்டமாற்றால் துன்பம் அதிகமே ஆயிற்று. ஒருவன் ஆடு வைத்திருக்கிறான்; சந்தைக்குச் செல்கிறான். அவனுக்கு அரிசி வேண்டும். இப்பொழுது அரிசி விற்பவன் ஆட்டைப் பெறச் சம்மதிக்க வேண்டும். அது அவ

னுக்குத் தேவையாயினன்றோ சம்மதிப்பான்? தேவை இல்லை என்றால் என்னும்? ஆடு ஒன்றுக்கு இவ்வளவு அரிசி கொடுக்கவேண்டும் என்ற ஏற்பாடும் இருக்க



வேண்டும். ஆட்டின் மதிப்பிற்குரிய அரிசியின் அளவினை நிர்ணயிப்பது எப்படி? எனவே, எவரும் ஏற்றுக் கொள்ளத்தக்கதும், எளிதில் கைமாறக் கூடியதுமான ஒரு பொதுப் பொருள் வேண்டும் என்பது புலனாகும். ஒவ்வொரு நாட்டவரும் ஒவ்வொரு வகைப் பொருளைப் பொதுப் பொருளாக உபயோகித்து வந்தனர். கிரேக்கர் எருதுகளையும், அபிசீனியர் உப்பையும், நியூபவுண்ட்லாந்து மக்கள் காய வைத்த மீனையும், வர்ஜீனியா நாட்டினர் புகையிலையையும், நம் நாட்டில் தானியம், ஆடுமாடு என்பனவற்றையும் பொதுப் பொருளாக வழங்கி

வந்தனர் என அறிகிறோம். இவ்வாறான பொதுப் பொருள் வர்த்தகத்திற்கு இடையூறையே விளைக்கும்.

உலோகங்கள் அழியமாட்டா. வேண்டிய அளவிற்கு அவற்றைத் துண்டங்களாகச் செய்யலாம். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எடுத்துச் செல்வதும் எளிதானது. ஆதலால் மக்கள் உலோகங்களைக் கண்டறிந்தவுடன், விலையை அளக்கும் பொதுக் கருவிகளாக அவற்றை அமைத்துக் கொண்டனர். பொன், வெள்ளி என்பன முன்பு கட்டிகளாகவே உபயோகப்படுத்தப்பட்டன. சில இடங்களில் ஆற்றுமணலிலிருந்து வடித்தெடுக்கப்பட்ட தங்கப் பொடிகளை முடிப்பாகக் கட்டி, நாணயங்களாக வழங்கியதுமுண்டு. இவ்வாறான செயல்களிலும் இடர்ப்பாடு உண்டாயிற்று. எனவே சில அரசாங்கத்தினர், தங்கம் வெள்ளி என்னும் உலோகங்களை ஓரெடையுள்ள சிறு சிறு துண்டங்களாக வெட்டி, அவற்றின் மேல் முத்திரையிட்டு வழங்கலாயினர். பின்னர் செப்பு நாணயங்களும் வெளி வரலாயின. வெள்ளி நாணயங்களில் வெள்ளியைக் குறைத்து, வேறு உலோகங்களைச் சேர்த்து நாணயங்களை வெளியிட்டு, அரசாங்கத்தார், அவற்றிற்கு மதிப்பும் ஏற் படுத்தினர். அவ்வாறு அமைக்கப்பட்ட நாணயங்கள் ரூபாய், அரை ரூபாய், கால் ரூபாய் என்பன. இரண்டணா, ஓரணா என்பன நிக்கல் நாணயங்கள். அரைஅணா, காலணா, தம்பிடி (ஒரு காசு) என்பன செப்பு நாணயங்கள். இவை யாவும் பிறரால் ஏமாற்றிச் செய்யப்படாதவாறு ஒரு பக்கம் கொடிகளும், மதிப்பும், மற்றொரு பக்கம் அரசர் தலையும், ஓரங்களில் வரம்புகளும் அமைத்து வெளியிடப் பட்டுள்ளன. எடையினால் மதிப்பைப் பெறாது, அவற்றின் மேல் குறிப்பிட்டுள்ள தொகையினுடைய மதிப்பைப் பெறுதலால் இவை குறிப்பு நாணயங்கள் எனப்படும்.

நாளடைவில் வர்த்தகம் பெருகியது. பெருந்தொகை களைச் சுமந்து செல்லுதல் சுமையோடு அன்றி அச்சமும் தருவதாக இருந்தது. எனவே வர்த்தகம் எளிதில் நடக்க நிதிகளாலும், அரசாங்கத்தார்களாலும் வெளியிடப்படும்

ரூபாய் நோட்டுகள் நாணயங்களாக வழங்குகின்றன. அவை அரசாங்கத்தாரின் வாக்குறுதி பெற்றவை. ரூபாய் நோட்டினால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. இவைகளை வழங்குவதால் உலோக நாணயங்கள் மிச்சப்படுகின்றன. மிஞ்சும் உலோகங்களைத் தொழில்களுக்குப் பயன்படுத்தலாமன்றோ? ரூபாய் நோட்டுகள் எவ்வளவு பெருந்தொகைக்கும் கொடுக்கலாம்; பெருஞ்சுமையாகவும் இரா; ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்குப் பிறர் அறியாவாறு எளிதிற் கொண்டு போகலாம். ரூபாய் நோட்டில் குறிக்கப்படும் எண்களைக் கவனித்துக் கொண்டால், திருட்டுப் போனாலும் கண்டுபிடித்து விடலாம். எனவே, பலவகையாலும் ரூபாய் நோட்டுகள் நன்மை பயக்கின்றன.

ஒரு நாட்டின் மேனிலையை நன்கு விளக்கிக் காட்டுபவை அந்நாட்டின்கண் காணப்படும் நிதிச்சாலைகளே. இவற்றை 'பாங்கிகள்' என்பர். 'பாங்க்' என்பதைப் பாங்கி என,திரிசொல்லாக வழங்குவது பெருவழக்காக உள்ளது. பாங்கிகள் இருத்தலால் வர்த்தகம் ஓங்குகிறது. செல்வர்கள் தங்களிடமுள்ள அதிகமான பணத்தைப் பாங்கிகளில் போட்டு வைக்கிறார்கள். வர்த்தகர்களும் தங்கள் முதல் தொகையைப் பாங்கிகளில் போடுகிறார்கள். பணத்தைச் சேமிக்க விரும்பும் யாவரும் பாங்கிகளில் எவ்வளவு குறைந்த தொகையாயினும் போட்டுவைக்கலாம். பாங்கிகளில் பாதுகாப்புச் சேமிப்பு, நிலைவைப்பு, அன்றாடக் கணக்கு எனப் பலவகைப் பிரிவுகள் உள்ளன. நம் விருப்பப்படி எந்தப் பிரிவில் வேண்டுமாயினும் நாம் பொருளைப் போட்டு வைக்கலாம். பாங்கி அதிகாரிகள் நமக்கு 'செக்' புத்தகம் ஒன்று தருவர். அதில் நாம் கொடுக்க வேண்டியவர்களுக்குத் தொகையையும் பெயரையும் எழுதிக் கொடுத்தால், அவர்கள் அதனைப் பாங்கியில் கொடுத்துத் தமக்குரிய பொருளைப் பெற்றுக்கொள்வர். இதனால் அவர்களிடமிருந்து ரசீது பெறாவிடினும் குற்றம் இல்லை. பாங்கிக்காரர் நம்பெயரில் வரவு செலவு வைத்துக் கொள்வர். நாம் எங்குச் சென்றாலும் பணத்தைச் சுமந்து

செல்ல வேண்டுவதில்லை. 'செக்' என்பதை 'உண்டியல்' என்றும் வழங்குவர்.




பாங்கியில் பணத்தைப் போடும் பழக்கம் ஏற்பட்டு விட்டால், ஒருவர் விரைவில் அப்பழக்கத்தால் பணத்தைச் சேமிக்கும் இயல்புடையவர் ஆவார். மற்றும், நிதிகளில் வர்த்தகர்களின் பொருள்கள் மீதும், நிலத்தின் மீதும், வீட்டின் மீதும், பொன் நகைகளின் மீதும் பணம் கொடுக்கிறார்கள். இவ்வித நலன்கள் பாங்கிகளால் உண்டாகின்றன. சிலர் தம் சம்பளத்தைப் பாங்கிகளில் போட்டு வைத்துக் குடும்பச் செலவிற்கு அவ்வப்போது வேண்டுமளவு பெற்றுக் கொள்கின்றனர். இதனால் சிக்கனமாக வாழும் இயல்பும் ஏற்படுகின்றது. நாம் எவ்வளவு வாழ்க்கையில் சேமித்து வைத்துள்ளோம் என்றும் அறிகிறோம். நாம் எவ்வெவ்வாறு வகைப்படுத்திச் செலவு செய்தால் பணத்தைச் சேமிக்கலாம் என்றும் உணர்கிறோம். பணம் பாங்கியில் இருக்கிறது என்று நம்மைச் சார்ந்தார்க்குத் தெரியுங்கால் நமக்கு மதிப்பும் ஏற்படுகிறது. ஆங்கிலேயர் பாங்கி

யில் பணத்தைப் போட்டுச் செலவழிக்கும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். பாங்கியிலுள்ள பணத்திற்குச் சிறுவட்டியும் நமக்குக் கிடைக்கிறது.

### பொருள் காண்க

பண்டைக் காலம், தாள் நாணயம், இடையூறு, இருதிறத்தார், அயலார், புலனுகும், வர்த்தகம், உலோகம், வாக்குறுதி, நிதிச்சாலை, சேமிப்பு, சிக்கனம்.

### சிறுவிடை வினுக்கள்

1. பணத்தைப் பற்றிய பழமொழிகள் நான்கு கூறுக.
2. பணம் என்பது யாது?
3. பண்டமாற்று என்பது யாது? ஓர் உதாரணம் தருக.
4. கொடுக்கல் வாங்கல்—ஒரு சொல் கூறுக.
5. எந்த எந்த நாட்டார் எந்த எந்தப் பொருளைப் பொதுப் பொருளாகக் கொண்டனர்?
6. உலோக நாணயங்கள் எவை?
7. குறிப்பு நாணயம் எது?
8. தாள் நாணயத்தால் விளையும் நன்மைகள் யாவை?
9. உங்களூரிலுள்ள பாங்கிகளின் பெயர்களை எழுதுக.
10. 'செக்' என்பது யாது?

### கட்டுரையாக்கம்

1. பண்டமாற்ருல் விளையும் இடையூறுகளை விளக்குக.
2. பொதுப் பொருள் வர்த்தகத்திற்கு வேண்டும் என்பது ஏன்?
3. தாள் நாணயங்களால் விளையும் நன்மைகளை எழுதுக.
4. 'பாங்கிகளும் அவற்ருல் விளையும் நன்மைகளும்' என்பதுபற்றி ஒரு ஐந்து நிமிஷப் பேச்சு நிகழ்த்துவதற்குக் குறிப்புகள் எழுதுக.

### மொழிப் பயிற்சி

1. சேர்த்து எழுதுக:—கூற+கேட்டிருக்கிறோம்; வாக்கு+உறுதி; கொடுத்து+சாமான்கள்; இருந்தாலன்றி+பண்டமாற்று; தொழில்+பிரிவினை; ஆட்டை+பெற; இடத்திற்கு+சுமந்து; பண்டை+காலம்; அ+காலம்.

2. பிரித்து எழுதுக:— வேண்டியவராயினர், ஓரெடையுள்ள, நாணயச் சீட்டு, இயல்புடையவர், ஓரிடத்திலிருந்து, பெருவழக்காயிற்று, பேனிலே.

3. சேமிப்பு, நிலைவைப்பு, அன்ருடம், தமக்குரிய, சிக்கனம், பெருந்தொகை: இவற்றை அமைத்துத் தனித்தனி வாக்கியங்கள் எழுதுக.

4. உலகம் பணம் பணம் என்று கதறுகிறது.
   (i) இதன் பொருள் என்ன ?
   (ii) உலகம் என்னும் சொல்லிற்கு என்ன இலக்கணம் கூறுவாய்?
   (iii) இவ்வாக்கியத்திற்கு எழுவாய் பயனிலை கூறுக.

5. நாம் எங்குச் சென்றாலும் பணத்தைச் சுமந்து செல்ல வேண்டிய தில்லை — இஃது எவ்வகை வாக்கியம்? இதனை உடன்பாட்டு வாக்கியமாக மாற்றுக.

6. ஒரு நாட்டின் மேனிலையை நன்கு விளக்கிக் காட்டுபவை அந்நாட் டின்கண் காணப்படும் நிதிச் சாலைகளே — இவ்வாக்கியத்தை 'நிதிச் சாலைகள்' என்று ஆரம்பித்து மாற்றி எழுதுக.

# 15. என் இன்பப் பிரயாணம்

நாங்கள் இருநூறு சிறுவர்களும், இருபது ஆசிரியர்களும் இன்பப் பிரயாணம் செய்வதாகத் தீர்மானித்தோம். திருச்சிராப்பள்ளிக்குச் சென்று திரும்புவது என்று முடிவு செய்யப்பட்டது. நாங்கள் சென்னைத் திருவல்லிக்கேணியிலுள்ள இந்து உயர்நிலைப்பள்ளி மாணவர்களும் ஆசிரியர்களும் ஆவோம். நாங்கள் 1946-ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 22-ம் தேதி புறப்படுவதாகத் தீர்மானித்தோம். எங்கள் பள்ளிக்கூடத் தலைமையாசிரியர், தென்னிந்திய ரயில்வே கம்பெனியாருக்கு, எங்கள் பிரயாணத்தைப் பற்றி முன்னதாகவே எழுதினர். அந்தக் கம்பெனியார் எங்களுக்கென்று தனித் தொடர்வண்டி ஒன்று அமைத்துத் தந்தனர். நாங்கள் 22-ம் தேதி காலை 7-30 மணிக்குச் சென்னை எழும்பூரை விட்டுப் பிரயாணம் ஆனேம். காலை உணவை நாங்கள் வீட்டிலேயே அருந்தி விட்டோம். வழிநெடுகக் காணப்படும் காட்சிகளைக் காணவே, நாங்கள் பகலில் பிரயாணத்தை மேற்கொண்டோம். போகுங்கால் மாயவரம் வழியாகச் செல்வதென்றும், திரும்புங்கால் விருத்தாசலம் வழியாக வருவதென்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

எங்களுக்கு உண்டான உற்சாகத்தை அளவிட்டுக் கூற இயலாது. பிரயாணம் என்ருலே சிறுவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகுமன்ரே? வண்டியில் எல்லோரும் களித்த முகத்தோடு இன்பமாக உரையாடிக் கொண்டும், பாடிக்கொண்டும், காட்சிகளைப் பார்த்துக்கொண்டும் வந்தனர். ஆசிரியர்கள் வகுப்பில் எங்களைக் கடிந்து கொண்டதுபோல் கடிந்து கொள்ளாமல், இன்பமாக நாங்கள் இருக்குமாறு விடுத்தனர். அஃது எங்களுக்கென ஓட்டப்பட்ட தனி வண்டியாதலின் வேறு யாரும் அவ்வண்டியில் ஏறவில்லை. நாங்கள் எல்லோரும் ஜன்னலின் ஓரமாகவே அமர விரும்பினேம். ஆனல் எல்லோருக்கும் எவ்வாறு அத்தகைய இடங்கள் கிடைக்கும்? ஜன்னலின் அருகே அமர்ந்து கொள்ளும் பேறு எனக்குக் கிடைத்தது.

வழிநெடுக விளங்கும் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே நாங்கள் சென்றோம். ஒரு பக்கம் பார்த்துக் கொண்டு செல்லும் பொழுது மறுபுறம் பார்க்க இயலாதது குறித்து வருந்தினோம். சிறிது இப்புறமும், சிறிது அப் புறமுமாகப் பார்த்துக் கொண்டே போனோம். பதினென் றரை மணிக்கு வண்டி விழுப்புரம் சென்று நின்றது. அங்கு நாங்கள் பகலுணவை முடித்து விட்டுச் சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டோம்.

பின் ஒரு மணிக்கு வண்டி புறப்பட்டது. அவ்வண்டி கொள்ளிடம் என்னும் ஆற்றைக் கடக்கப் பாலத்தின்மீது செல்லுங்கால் எங்களுக்கு மிகவும் வியப்பாகவும் இன்ப மாகவும் இருந்தது. என்ன விந்தை! கொள்ளிடம் தாண் டியது முதல் தஞ்சை சென்றடையும் வரை இரு புறங்களி லும் பசுமை படர்ந்த பரந்த வயல் வெளிகளும், கோயில் கோபுரங்களும், சோலைகளும் நிறைந்து விளங்கின. சென்னையிலிருந்து புறப்பட்ட எங்களுக்குக் கொள்ளிடம் வரை வந்த பகுதி நிலத்திற்கும், கொள்ளிடம் முதல் தஞ்சை வரை சென்ற பகுதி நிலத்திற்கும் உள்ள வேற்றுமை நன்கு புலப்பட்டது. சோழவள நாட்டின் நீர் நில வளப் பெருமை எங்களுக்கு விளங்கியது. இடையில் சிதம்பரம், மாயவரம், கும்பகோணம் முதலான புகை வண்டி நிலையங் களை நாங்கள் கண்டோம்.

வண்டி தஞ்சாவூரை நெருங்கியதும், இராசராச சோழ னால் கட்டப்பட்ட பெரியகோயிலின் கோபுரம் எங்கள் கண்ணுக்குத் தெரிந்தது. தஞ்சாவூரில் நாங்கள் சிற்றுண்டி அருந்தினோம். தஞ்சை புகைவண்டி நிலையம் மிகவும் அழகாக இருந்தது. அங்குத் தஞ்சாவூர்ப் பொம்மையைக் கண்டு வியந்தோம். சிறப்பாக அங்கு முந்திரிப் பருப்பு விற்கப்பட்டது. நாங்கள் வாங்கி உண்டோம். வண்டி ஐந்தாறு மைல்கள் சென்ற பிறகும் எங்களுக்குக் கோயி லும் கோபுரமும் தெரிந்தன. தஞ்சாவூரை விட்டபின் திருவெறும்பூர் என்னும் இடம்வரை காணத்தக்க காட்சி ஒன்றுமில்லை. பிறகு எங்களுக்கு உச்சிப்

பிள்ளையார் கோவில் தெரிந்தது. நாங்கள் திருச்சி ஜங்ஷனில் இறங்கினோம். மணியும் ஏழடித்தது. பிறகு நாங்கள் மோட்டாரில் ஏறிச்சென்று, 'நேஷனல் காலேஜ்' கட்டிடத்தில் தங்கினோம். பிரயாணக் களைப்பினால் அன்று இரவு நாங்கள் தூங்கிவிட்டோம்.



மறுநாட் காலையில் சிற்றுண்டி முடித்துக்கொண்டு ஸெயின்ட் ஜோஸப் கல்லூரிக்குச் சென்று சுற்றிப் பார்த்தோம். பின், நாங்கள் காவிரி ஆற்றங்கரைக்குச் சென்றோம். காவிரியாறு மிக அகலமாயுள்ளது. அங்குக் காவிரியாற்றிற்கு மக்களும் வண்டிகளும் செல்லப் பாலமும், புகைவண்டி செல்லத் தனியாக ஒரு பாலமும் நீளமாக அமைந்துள்ளன.

காவிரியின் கரையில் சோலைகள் செறிந்திருந்தன. எங்கும் மாவும், தென்னையும், வாழையும், நெல்லும்

திகழ்ந்து பசும்பட்டு விரித்தாற் போன்று விளங்கிற்று. பின் அனைவரும் நாங்கள் தங்கியிருந்த இடத்திற்குத் திரும்பினோம். இவ்வாறு சென்றுவர இரண்டு பெரிய மோட்டார் பஸ்கள் அமைத்திருந்தனர். நாங்கள் அன்று சாப்பிடும்பொழுது மணி பன்னிரண்டு. பின் சிறிது ஓய்வு கொண்டோம். மூன்று மணிக்குச் சிற்றுண்டி கொண்டோம். அன்று மாலை திருச்சி நகரைச் சுற்றிப் பார்த்தோம். 'கிளைவ்ஸ் ஹவுஸ்' என்பதைப் பார்த்தோம். மலைமேல் ஏறிச் சென்றோம். மலையின் நடுவே தெருக்கள் இருந்தன. அவற்றைத் தாண்டி மேலே சென்றபொழுது ஸ்ரீ மாதுர்பூதேசுவரர் என்னும் தாயுமானவர் கோயிலைக் கண்டோம். அங்கு அழகிய மண்டபங்களும் சிலைகளும் இருந்தன. அவற்றையெல்லாம் பற்றி எங்கள் சரித்திர ஆசிரியர் விளக்கிக் கூறினர். தமிழாசிரியர் அத்தெய்வத்திற்கு அப்பெயர் வந்த காரணத்தைக் கூறினர். பின், மலைமேலேறிச் சென்று உச்சிப் பிள்ளையார் கோவிலை அடைந்தோம். அங்கிருந்து பார்த்தோம். வளைந்தோடும் பரந்த காவிரியாறும், ஸ்ரீரங்கம், திருவானைக்காவல் என்னும் தலங்களிலுள்ள கோயில்களின் கோபுரங்களும், திருச்சி நகரும், பொன்மலையும், திருவெறும்பூர் மலையும் கண்களுக்கு விருந்தென விளங்கின. இரவில் மின்சார விளக்குகள் மலைமேல் வரிசையாக எரிவது மிக அழகிய காட்சியாகும். அன்று அம்மட்டோடு நிறுத்திக்கொண்டு எங்கள் இடத்தை அடைந்து உண்டு உறங்கினோம்.

மறுநாள் காலையில் நாங்கள் எல்லோரும் ஸ்ரீரங்கம் சென்றோம். ஸ்ரீரங்கம் பெரிய வைணவத்தலம் என்றும், 'பெரிய கோயில்' என அஃது அழைக்கப் பெறும் என்றும் எங்கள் தமிழாசிரியர் கூறினர். நாங்கள் ஸ்ரீரங்கம் கோயிலைச் சுற்றிப் பார்த்தோம். அங்குக் கோயில் மதில்களுக்குள் நகரம் அமைந்துள்ளது கண்டு வியந்தோம். அது மிகப் பெருங் கோயில் என்றுணர்ந்தோம். ஏழு மதில்களைக் கொண்டது அப்பெருங் கோயில்.

திருவரங்கத்தையும், கோயிலையும், அருகில் ஓடும் காவிரித் துறையையும் கண்டு களித்து மீண்டோம். பின் உணவுண்டு சிறிது ஓய்வு கொண்டோம்.

மாலை மூன்று மணிக்குத் திருவானைக்காவலைக் காணப் புறப்பட்டோம். திருவானைக்காவல் ஒரு பெரிய சிவத் தலம். அதற்கு அப்பெயர் வந்த காரணத்தை எங்கள் தமிழாசிரியர் விளக்கினர். அங்கும் பெரிய கோயிலே காண்பார் கண்களுக்கு விருந்தாய் மிளிர்ந்தது. அக்கோயில் கோச்செங்கணன் என்னும் சோழனல் கட்டப்பட்டதாகக் கூறுவர் என எங்கள் தமிழாசிரியர் கூறினர்; அத்தலத்தில் இறைவன் திருவுருவான இலிங்கம் இருக்குமிடத்தில் நீர் ஊறிக் கொண்டிருத்தலால், அதனை 'அப்பு லிங்கத் தலம்' என்று கூறுவர் எனவும் கூறினர். பெரிய மதில்களையும், கோபுரங்களையும், சித்திர வேலைப்பாடுகள் அமைந்த மண்டபங்களையும் கண்ட நாங்கள் எங்கள் பிரயாணம் பெரும் பயன் அளித்தது என்றே உணர்ந்து மகிழ்ந்தோம். பின் எங்கள் இடத்திற்கு வந்து உணவு உண்டு உறங்கினேம்.

மறுநாள் காலை சிற்றுண்டியின் பின்னர் நாங்கள் பொன்மலைக்குச் சென்றோம். அங்கு ரயில்வே கம்பெனியார் அமைத்துள்ள பெருந்தொழிற்சாலையைக் கண்டோம். பெரிய, வலிமை வாய்ந்த மதிலால் சூழ்ந்தது அப்பொன்மலைத் தொழிற்சாலை. அங்கு எங்களுக்குக் காணத் தகுந்த இடங்களும் பிறவும் இருந்தமையால், எங்கள் ஆசிரியர் பகல் உணவை அங்குக் கொணர்ந்து அளிக்குமாறு ஏற்பாடு செய்திருந்தார். தென்னிந்தியாவிற் காணப்படும் பெருந் தொழிற்சாலை அது. அங்கு நாங்கள், வண்டித் தொடர்கள், பொறிகள், முதலானவை அமைக்கும் இடங்களைக் கண்டோம். அங்கு வேலை செய்வோர்க்கு அவரவர் தகுதிக்கேற்ப வீடுகள் கட்டி அளித்துள்ளனர். அங்கு வேலை செய்வோரின் பிள்ளைகள் கல்வி கற்பதற்காக ஓர் உயர் நிலைப்பள்ளியும் உள்ளது. அப்பொன்மலை திருச்சியைச் சார்ந்த தனிப்பட்டதோர் நகரமாக விளங்குகிறது.

031(C) N45

அன்று பகல் முழுவதும் பொன்மலையிலுள்ள தொழிற்சாலையின் பல பகுதிகளைக் காணவே பொழுது சரியாக இருந்தது. மாலை ஆறு மணிக்கு நாங்கள் எங்களுடைய தங்குமிடத்திற்கு மீண்டோம்.

இவ்வாறு நாங்கள் மூன்று நாட்களை இன்பமாகக் கழித்தோம். நான்காம் நாட் காலைச்சிற்றுண்டி முடிந்ததும் எங்கள் ஆசிரியர் பத்தரை மணிக்கு வண்டி புறப்படுவதாகவும், ஒன்பதேகால் மணிக்கு உணவுகொண்டு, புறப்படுதற்குத் தயாராக இருக்க வேண்டுமென்றும் கூறினர். எங்களுக்கு ஒன்பது மணிக்கு உணவு அளிக்கப்பட்டது. சாப்பிட்டபின் பத்து மணிக்கு நாங்கள் எங்கள் சாமான்களுடன் புறப்படுவதற்குத் தயாராக இருந்தோம். பத்தேகால் மணிக்குத் திருச்சி ஜங்ஷன் நிலையத்தை அடைந்தோம். பத்தரை மணிக்கு வண்டி கிளம்பியது. ஒரு மணிக்கு விருத்தாசலம் சந்திப்பு நிலையத்தை அடைந்தோம். அங்கிருந்து புறப்பட்ட பொழுது அப் பெருந் தலத்தின் கோயிலையும் மணிமுத்தா நதியையும் எங்கள் ஆசிரியர்கள் காட்ட, ரயில் வண்டியிலிருந்து கொண்டே பார்த்தோம். மூன்று மணிக்குள் விழுப்புரம் வந்தோம். அங்கு எங்களுக்குச் சிற்றுண்டியும் காப்பியும் அளிக்கப்பட்டன. பின் அங்கிருந்து புறப்பட்டு இரவு எட்டு மணிக்கு எழும்பூர் வந்து சேர்ந்தோம். இவ்வழியில் நாங்கள் செழுமையை அவ்வளவாகக் காணவில்லை. பெரும் பகுதி வறண்ட பாகமாகவே விளங்கியது. பின்னர் நாங்கள் பிரிந்து அவரவர் வீடு போய்ச் சேர்ந்தோம். இவ்வாறு எங்கள் இன்பப்பிரயாணம் இன்பமாகவேமுடிந்தது. நாங்கள் செம்மையான முறையில் நடந்து கொண்டதற்காக எங்கள் ஆசிரியர்கள் எங்களுக்கு மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். இப்பிரயாணத்தால் நாங்கள்பலவற்றை உணரும்வாய்ப்புக் கிடைக்கப் பெற்றோம். அடுத்த ஆண்டு மதுரை சென்று காண்பதாக முடிவு செய்தோம்.

எங்கள் இன்பப் பிரயாணத்தைப்பற்றி எங்கள் பள்ளிக்கூடப் பத்திரிகைக்கு எழுதுமாறு என் ஆசிரியர்

86501

எனக்குக் கட்டளை யிட்டார். ஆதலால் இக்கட்டுரையை எழுதலானேன். இக்கட்டுரை பிரயாணத்திற்கு வராத பிள்ளைகளுக்குப் பெரும் பயனளிக்கும் என்று நினைக்கிறேன்.

இந்து உயர்நிலைப் பள்ளி
திருவல்லிக்கேணி, சென்னை.

வி. வே. கணேசன்
ஆறும் அமைப்பு—அ. பிரிவு.

### பொருள் காண்க

உல்லாசம், உற்சாகம், உரையாடல், கடிந்து, அமர, முந்தி, வியப்பு, வியந்தோம், மிளிர்ந்தது, பொறிகள், மீண்டோம், சந்திப்பு.

### சிறுவிடை வினாக்கள்

1. சென்னையில் உள்ள புகை வண்டி நிலையங்களுள் மூன்றின் பெயர்களை எழுதுக.
2. எழும்பூரிலிருந்து புறப்படும் வண்டியில் ஏறுவோன் எந்த எந்த வழியாக எங்கெங்குச் செல்லலாம்?
3. மாணவர்களுக்கு உற்சாகமும் மகிழ்ச்சியும் தருவது எது?
4. சோழ நாடு எங்கிருந்து தொடங்குகிறது?
5. திருச்சிக்கு அருகிலுள்ள இரு மலைகளைக் கூறுக.
6. திருச்சி மலைமீது உள்ள கோயிலின் பெயர் யாது?
7. ஸ்ரீரங்கம் கோயிலைப் பற்றி மூன்று வாக்கியங்கள் எழுதுக.
8. 'அப்புலிங்கம்' : இப்பெயர் வரக் காரணம் என்ன?
9. திருவானைக்காவிலுள்ள கோயில் யாரால் கட்டப்பட்டது என்று சொல்லப்படுகின்றது?
10. பொன்மலையில் காணத் தகுந்த இடம் எது?
11. விருத்தாசலம், மாயவரம், தஞ்சாவூர் என்பன எந்தெந்த வழிகளிலுள்ளன?

### கட்டுரையாக்கம்

1. திருச்சிக்குச் சென்று கண்டவற்றை ஒரு கட்டுரையாக எழுதுக.
2. 'ஸ்ரீரங்கம்', 'திருவானைக்காவல்', 'பொன்மலை', என்பன பற்றி எட்டு எட்டு வரிகள் தனித்தனியாக எழுதுக.
3. 'ரயில் பிரயாணம்'பற்றி உன்கருத்தை ஐந்து வரிகளில் எழுதுக.
4. சென்னைக்கருகிலுள்ளதான, காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம், மகாபலிபுரம் என்பவற்றிற்குச் சென்றதாக நீ படித்தவற்றைத் துணையாகக் கொண்டு தனித்தனி கட்டுரைகள் எழுதுக.

5. உன் வகுப்புப் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு செஞ்சியைக் காணச் செல்கிறாய் என்று வைத்துக் கொள். நீ செய்யும் முன் ஏற்பாடுகளைக் குறித்து எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. பிரித்தெழுதுக :— இருநூறு, இன்பப் பிரயாணம், எங்களுக்கென, அமர்ந்ததுமுண்டு, பதினொன்றரை, உணவுண்டு, காவிரியாற்றிற்கு, தமிழாசிரியர், சிற்றுண்டி, தொழிற்சாலை, அங்கிருந்து.

2. புணர்த்திக் காட்டுக :—கட்டளை + இட்டார், பயன் + அளிக்கும், அ + அளவு, எங்களுக்கு + சிற்றுண்டி, தகுதிக்கு + ஏற்ப, தொழில் + சாலை, விஞ்ஞானம் + ஆசிரியர், மூன்று மணிக்கு + புறப்பட்டோம், பெரிய + கோயில்

3. என்ன விந்தை—இஃது எவ்வகை வாக்கியம்?

4. அக்கோயில் கோச்செங்கணான் என்னும் அரசனால் கட்டப்பட்டதாகக் கூறுவர் என எங்கள் தமிழாசிரியர் கூறினார். அத்தலத்தில் இறைவன் திருவுருவான இலிங்கம் இருக்குமிடத்தில் நீர் ஊறிக் கொண்டிருத்தலால் அதனை 'அப்புலிங்கத் தலம்' என்று கூறுவர் எனவும் கூறினார்:— இப்பகுதியில் வாக்கியங்களைத் தமிழாசிரியர் மாணவர்களுக்கு நேரே கூறுவது போல் அமைத்து எழுதுக.

5. வண்டித் தொடர்கள், பொறிகள் முதலானவை அமைக்கும் இடங்களை நாங்கள் கண்டோம்.—இது செய்வினை வாக்கியம் அல்லவா? இதனைச் செயப்பாட்டு வினை வாக்கியமாக மாற்றுக.

## 16. கருமிப் பிரபுவும் சங்கித வித்துவானும்

முன்காலத்தில், சென்னையில் ஒரு பிரபு இருந்தார். அவரிடம் ஏராளமான செல்வம் இருந்தது. கடல் போன்ற செல்வம் அவரிடம் இருந்தது என்று கூறுதல் தகும். கடலில் தண்ணீர் மிகுதியாக இருந்து என்ன பயன்? ஆழமான கடலின் நடுவில் மரக்கலமோட்டிச் சென்ற ஒருவன், தாகத்தினல் வருந்தி வாடி, 'தண்ணீர்! தண்ணீர்! என்னைச் சுற்றிலும் தண்ணீர் இருக்கிறது! ஆனல், யான் குடிப்பதற்கு ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லையே' என்று கதறியதாக ஒரு வரலாறு உண்டு. அதுபோலவே பிரபுவினிடம் அளவற்ற செல்வம் இருந்தும் அஃது எவருக்கும் பயன்படவில்லை. ஏனெனில், அவர் பெரிய கருமியாக இருந்தார். எச்சிற் கையினல்கூடக் காகத்தை ஓட்டமாட்டார்; அறுந்த விரலுக்குச் சிறிது சுண்ணும்புகூடக் கொடுக்கமாட்டார். பிரபுவோ, மேலும் மேலும் தம் செல்வத்தை வளர்ப்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தார்.

இத்தகைய பிரபுவின் இருப்பிடத்திற்கு ஒரு சங்கீத வித்துவான் வந்து சேர்ந்தார். அவர் சங்கீதத்தில் மிக வல்லவர். அவர் சங்கராபரண ராகத்தைப் பாடினல், ஒரு நாள் முழுவதும் சலிப்பில்லாமல் கேட்டுக்கொண்டிருக்கலாம். பல்லவி பாடி, நான்கு ஆவர்த்தனம் சுரம் பாடாமல், அவர் கச்சேரியை முடிப்பதேயில்லை. ஆனல் பாவம், அவரை வறுமை வாட்டியது. அவரது சங்கீதத்தைக் கேட்டு எல்லோரும் மகிழ்ந்தார்களேயொழிய, அவருக்குப் பணங்கொடுப்பார் எவருமிலர். அவ்வித்துவான், 'பெருஞ் செல்வராயிற்றே, ஏதேனும் இவர் கொடுப்பார்' என்று கருதியே பிரபுவினிடம் வந்தார்.

வித்துவானைக் கண்ட பிரபு,

பிரபு :—நீர் யார்? எங்கு வந்தீர்?

சங்கீத வித்துவான் :—நான் கருநாடக சங்கீத வித்துவான். இராகம், தானம், பல்லவி முதலிய எல்லாம் பாடு

வேன். எந்தராகம் வேண்டுமானலும் பாடுவேன். பல்லவியில் அந்நிய ராக சஞ்சாரம்கூடச் செய்வேன். எனக்கு ஹிந்துஸ்தானி சங்கீதம்கூட......

பிரபு:—சரிசரி, போதும். நிறுத்துங்கள். நான் கேட்கும் பாடல்களைப் பாடுவீர்களா ?

சங்கீத:—ஆஹா! பிரபுவே, தங்களுக்கு எது விருப்பமோ அதைச் சொல்லுங்கள்.

பிறகு, பிரபு கேட்டவற்றைச் சங்கீத வித்துவான் ஒவ்வொன்ருகப் பாடத் தொடங்கினர். பிரபு பாடகரது சங்கீதத்தை நன்ருய்ச் சுவைத்தார்; தலையை ஆட்டினர்; தாளம் போட்டார்; 'ஆஹா, ஆஹா' என்ருர்; 'அடாடா, அடாடா' என்ருர். இத்தகைய சொற்கள் பிரபுவினது வாயிலிருந்து வரவர, சங்கீத வித்துவான், தம்மையே மறந்துவிட்டார். அவர் சங்கராபரணம், தோடி, காம்போதி, கல்யாணி முதலிய இராகங்களை ஆலாபனம் செய்து, கீர்த்தனங்கள் பாடி, சுரம் பாடி முடித்தார்.

அப்பொழுது பிரபு, விரைந்து உள்ளே சென்று, சிற்றுண்டி அருந்திவிட்டு, வெற்றிலை போட்டு மென்று கொண்டு, சமையற்காரனைப் பார்த்து, 'விரைவில் பாதாம் ஹல்வாவைச் செய்துவிட்டு, எனக்கு வந்து சொல்' என்று உரத்த குரலில் சொல்லிக் கொண்டே வந்தார். அவரது சொற்கள் வித்துவானின் காதிலும் விழுந்தது. வித்துவான், 'ஏது! இன்று நமக்கு நல்ல யோகம்தான். நமக்காகப் பாதாம் ஹல்வாகூடத் தயார் செய்யச் சொல்லியிருக்கிருர் பிரபு. இவரல்லவோ ரஸிகர்!' என்று நினைத்துக்கொண்டே பின்னும், சிந்துபைரவி, ஹரிகாம்போஜி, பியாகடை, தர்பார் முதலிய இராகங்களில் உருப்படிகளைப் பாடித் தீர்த்தார். பிரபுவின் வாயிலிருந்து அடிக்கடி, 'சபாஷ் சபாஷ்; பேஷ் பேஷ்' என்ற சொற்கள் வந்து கொண்டேயிருந்தன.

நெடுநேரமாயிற்று. பாடகருக்குத் தொண்டை வறண்டு போய்விட்டது. பருக நீர்கூட இல்லை. 'என்ன ?

இந்தப் பிரபுவுக்கு இங்கிதம் தெரியவில்லையே! தொண்டைத் தண்ணீர் வற்ற நாம் கத்துகிறோம். சுடச்சுடப் பாலாவது கொடுக்கக் கூடாதா' என்று அவர் கருதினர். பிரபுவோ, 'ஏன் நிறுத்திவிட்டீர்? உங்கள் இசை மிக இனிமையாக இருக்கிறது. இத்தகைய சங்கீதத்தை நான் கேட்டதே இல்லை. பாடுங்கள் பாடுங்கள்' என்றார். வித்துவான் மேலும் அடாணு இராகத்தைப் பாடி முடித்தார். பிரபு, சங்கீத இன்பத்தைப் பருகிக் கொண்டிருந்தாரே யொழிய, வித்துவானை நிறுத்தச் சொல்லவே இல்லை. ஆனல், புகழ்ந்து கூறுவதை மட்டும் நிறுத்தவில்லை.

இந்நிலையில் பாடகருக்கு மூச்சுத் திணறியது. அப்படியும் அவர் மூச்சை அடக்கிக் கொண்டே முகாரி ராகத்தைப் பாடினர். அப்பொழுது பிரபு, தம் வேலைக்காரனை அழைத்து, 'அடே, உள்ளேபோய், ஒரு வெள்ளித் தட்டில் ஆயிரம் ரூபாயையும், ஒரு ஜோடி சால்வையையும் எடுத்து வை' என்றார். இச்சொற்கள் காதில் விழுந்தவுடனே சங்கீத வித்துவானுக்கு மகிழ்ச்சி பொங்கியது. தாம் அன்று நரியின் முகத்தில் விழித்ததாக நினைத்துக் கொண்டார். அவருக்கு உடம்பில் ஒரு புத்துணர்ச்சி உண்டாயிற்று. அவர் உடனே பல்லவி பாடி, அந்நிய ராக சஞ்சாரம் செய்யத் தொடங்கினர். தொண்டை வற்றி விட்டதாதலால், அவரால் பாட முடியவில்லை. அவரது வாய் அசைந்ததே ஒழிய, ஒலி வெளியே கேட்கவில்லை. அப்பொழுது பிரபு, தம் வேலைக்காரனை மீண்டும் அழைத்து, 'அடே, ஒரு தங்கத் தட்டில் இரண்டு ஜோடிப் பீதாம்பரங்கள், இரண்டாயிரம் ரூபாய், இவற்றை எடுத்து வை' என்று சொல்லிப் பாடகரைப் பார்த்துப் புன்முறுவலுடன், மேலும் பாடும்படி ஜாடை காட்டினர்.

பாடகர், மீண்டும் மூச்சை அடக்கிப் பாடத்தொடங்கி, பல்லவியை முடித்து, ஒரு ஜாவளி பாடினர். அவரது உடல் மிகவும் சோர்ந்துவிட்டது. அவர் மூச்சுத்திணற, மெல்லிய குரலில் பிரபுவைப் பார்த்து, 'மன்னிக்க வேண்டும். இதற்குமேல் என்னல் பாடமுடியவில்லை.

என்னை அனுப்பி வையுங்கள்' என்றார். பிரபு உடனே, 'சரி, உங்கள் சங்கீதம் மிக இனிமையாக இருந்தது. போய்விட்டு வாருங்கள்' என்று சொல்லிக் கும்பிடு போட்டார். பாடகருக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவர், 'சரி, வெட்கப்பட்டுப் பயனில்லை. பரிசைக் கேட்டே விடுவோம்' என்று எண்ணி, 'பிரபுவே, ஒன்றும் கொடாமல் அனுப்புகிறீர்களே! எனக்கென்று எடுத்து வைத்த பரிசுகள் எங்கே?' என்றார். அதுகேட்ட பிரபு, 'ஓய், நீர் எனக்குச் செய்தது என்ன? என் செவிக்கு இனிப்பாய் ஏதோ சிலவற்றைச் சொன்னீர்! அதுபோல நானும் உமது செவிக்கு இனிப்பாய் ஏதோ சிலவற்றைச் சொன்னேன். அவ்வளவுதானே. போய்வாரும்' என்றார். வித்துவானுக்கு ஒன்றும் புரியவில்லை. கோபத்தோடு ஏதோ சொல்ல வாயெடுத்தார். அப்பொழுது பிரபு, 'ஏன் நிற்கிறீர்? தாங்களாகப் போகிறீர்களா? இல்லையென்றால் எனது வேலைக்காரனை அழைத்து, உமக்கு மரியாதை செய்து அனுப்புமாறு செய்யவேண்டுமா?' என்றார். என்ன செய்வார் வித்துவான்! தலை குனிந்தவாறே, ஏதோ முணுமுணுத்துக் கொண்டு, தம் தலைவிதியை நொந்தவாறு, அவ்விடத்தை விட்டு அகன்றார்.

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று"

### பொருள் காண்க

கருமி, வறுமை, உண்டி, ரஸிகர், இங்கிதம், ஜோடி, மீண்டும், புன்முறுவல், நச்சுதல், நச்சப்படாதவன், நச்சுமரம், பழுத்தற்று.

### சிறுவிடை வினாக்கள்

1. கருமிகளைப் பற்றி வழங்கும் பழமொழிகளுள் இரண்டினை எழுதுக.
2. வித்துவான் பிரபுவினிடம் ஏன் வந்தார்?
3. முகாரி ராகத்தில் எத்தகைய சுவை அமைந்துள்ளது?
4. நரி முகத்தில் விழித்தல்: விளக்குக.
5. பிரபு, பாடகர் மனமகிழுமாறு கூறியவற்றுள் இரண்டினை எழுதுக.
6. பரிசு கொடாததற்குப் பிரபு கூறிய சமாதானம் என்ன?

### கட்டுரையாக்கம்

1. கருமிகளின் தன்மைகளைப் பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
2. 'நன்றியில் செல்வம்' என்னும் பொருள்பற்றிப் பதினைந்து வரிகளுள் ஒரு கட்டுரை எழுதுக.
3. இப்பாடத்திலுள்ள கதையை ஒரு பக்கத்திற்குள், சொந்தமாக எழுதுக.

### மொழிப் பயிற்சி

1. தண்ணீர்: இச்சொல்லை ஆராய்க.
2. பின் வரும் புணர்ச்சிகளுள் எவ்வெவ்விடங்களில் யகர உடம்படு மெய் வரும்; எவ்வெவ்விடங்களில் வகர உடம்படு மெய் வரும் எனக் குறிப்பிட்டு, அவற்றை வகைப்படுத்துக:—

   பாட + இல்லை; உள்ளே + ஓடி; மிக + இனிமை; முடிய + இல்லை; இசை + இன்பம்; நடு + ஊர்; விதியை + எண்ணி.
3. அவரிடம் ஏராளமான செல்வம் இருந்தது: இவ்வாக்கியத்தின் எழுவாய் எது? பயனிலை எது?
4. கீழ்க்கண்டவற்றிற்கு ஏற்ற இடங்களில் நிறுத்தக் குறிகளை அமைக்க:—வித்துவான் ஏது இன்று நமக்கு நல்ல யோகம்தான் நமக்காக பாதாம் ஹல்வாகூடத் தயார் செய்யச் சொல்லியிருக்கிறார் பிரபு இவரல்லவோ ரஸிகர் என்று நினைத்தார்

# 17. நாகரிகம்

**[ஓர் உரையாடல்]**

(சென்னைக் கடற்கரையில் மாலை 5-மணிக்கு உரையாடல் தொடங்குகிறது)

மணிவாசகம் :—சந்தானம், அதோ பார். முகுந்தனும் பரந்தாமனும் வருகின்றனர். நாம் சற்று முன்பே வந்துவிட்டோம்.

(முகுந்தனும் பரந்தாமனும் வந்து அமர்கிறார்கள்)



சந்தானம் :—எனக்கு ஒரு கருத்து தோன்றுகிறது; அதனைக் கூறுகிறேன். நாம் இந்த விடுமுறையில் தினந்தோறும் கடற்கரைக்கு வருவோம். அந்திப் பொழுதை வீணாக்காமல் பயன்படுத்தவேண்டும் என்பது என் கருத்து. ஒவ்வொரு நாளும் ஏதேனும் ஒரு விஷயத்தைப்பற்றிச் சொற்போர் நடத்துவோம். கூடுமானால் அன்றன்று நடந்ததைத் தேதிக்குறிப்புடன் எழுதிப் பள்ளிக்கூடம் திறந்தபின் ஆசிரியருக்குக் காட்டுவோம். இதனால் ஆசிரியரும் மகிழ்வார்; நமக்கும் அறிவு விருத்தியாகும்.

மணிவாசகம் :—நல்லதே சொன்னாய். எனக்கும் வீண் பேச்சில் விருப்பம் இல்லை. 'நற்செயலை உடனே தொடங்கு' என்பர் நல்லோர். இன்று எதனைப்பற்றிப் பேசலாம் ?

பரந்தாமன் :—இக்கடற்கரைக்கு வரும் மக்களை நான் பார்க்கும் பொழுது, என் கிராமத்தின் நினைவு வருகிறது. கிராம மக்களைக் காட்டிலும் நகரமக்கள் எவ்வளவு நாகரிகம் உடையவர்களாக இருக்கிறார்கள் என்று நான் எண்ணுவ துண்டு. ஆண்டுதோறும் நாகரிகம் நகரமக்களிடம் முதிர்ந்து வருவதாக எனக்குத் தோன்றுகிறது. "நாகரிகம் வளர்கிறதா ?" என்பதைப்பற்றி இன்று பேசலாம் என்று நான் நினைக்கிறேன்.

சந்தானம் :—சென்ற வாரம் நான், என் தந்தையுடன் பம்பாய், டெல்ஹி, கல்கத்தா முதலான இடங்களுக்குச் சென்றிருந்தேன் அல்லவா ? நான்கு நாட்களில் நான் அங்கெல்லாம் சென்று மீண்டேன். விமானத்தில் சென்று மீண்டதால் நான்கு நாட்களில் மூன்று ஊர்களை யும் கண்டு மீள முடிந்தது. நாகரிகம் வளர்ந்து வருகிறது என்பதை அங்குள்ள மக்களைக் கண்ட எனக்குத் தோன் றியது.

மணிவாசகம் :—இந்த விஷயம் சிந்திக்க வேண்டிய தொன்று. ஐரோப்பிய உடைகளை (காற்சட்டை, மேற் சட்டை, கழுத்துப்பட்டை, ஹாட், பூட்ஸ்) அணிந்தவர்கள் தோற்றம் மிக அழகாக உள்ளது. அவற்றை அணிந்தவர் கள் தம்மை நாகரிகமுடையவர்களாகக் கருதுகின்றனர். அவர்களது நடை, உடை, பாவனைகள் மற்றையோரினும் வேறாகவே உள்ளன என்பதையும் நாம் அறியலாம். நாகரிகம் உடையில் அமைந்துள்ளதோ என்ற ஐயப்பாடும் உண்டாகிறது.

முகுந்தன் :—நாகரிகம் என்றால் என்ன ?, அதனை முதலில் உணர வேண்டாமா ?

பரந்தாமன் :—நாகரிகம் என்பது மேம்பட்ட வாழ்க்கை நிலையைக் குறிப்பதாகும் என்பது என் கருத்து. மற்றையோரினும் நடை, உடை, பாவனை, உணவு, வாழ்க்கை என்னும் இவற்றில் திருந்திய செம்மையான நிலையே நாகரிகமாகும்.

பரந்தாமன் :—நாகரிகம் என்ற சொல் 'நகர்' என்ற சொல்லினிடமாகப் பிறந்ததென்றும், நகர்+அகம் என்ற இரு சொற்களும் சேர்ந்து நகரகம் என்றாகி, பின் நாகரிகம் என்று வந்தது என்றும் என் தந்தை கூறினார். ஆங்கிலத்தில் இப்பொருளைக் குறிக்கும் 'ஸிவிலிஸேஷன்' என்ற சொல் 'ஸிடி' என்ற சொல்லினிடமாகப் பிறந்ததே என்பர்.

சந்தானம் :—நூல்களில் நாகரிகம் மிக்காராகக் கூறப்படும் நாகர் என்ற சொல்லினடியாக நாகரிகம் என்ற சொல் பிறந்திருக்கலாமோ என்று நான் கருதுகிறேன். நாகர் என்பார் நாகரிகம் மிக்க சாதியார் என்று உணரலாம். பாரதத்தில் அருச்சுனன் நாககன்னியை மணந்து கொண்டான் என்றும், தொண்டை நாட்டு அரசன் ஒருவன் பீலிவளை என்னும் நாககன்னியை மணந்தான் என்றும் நாம் படிக்கவில்லையா ? எனவே, மன்னர்களும் மகள் கொள்ளும் உயர்ந்த நாகரிக நிலையில் நாகர்கள் வாழ்ந்தனர் என அறியலாம். ஆதலால், நாகரிடமாக நாகரிகம் என்ற சொல் தோன்றியிருக்கலாம். இதனை, "1800 ஆண்டுகளுக்கு முந்திய தமிழர்" என்ற நூலை எழுதிய, திருவாளர் கனகசுந்தரம் பிள்ளையும் தம் நூலில் குறிக்கின்றார் அல்லவா ?

மணிவாசகம் :—நாகர் அனைவரும் நாகரிகமுடையவர் என்று எவ்வாறு ஒப்புக்கொள்ளக் கூடும் ? மணிமேகலை என்ற நூலில் சாதுவன் என்ற வணிகன் கதை கூறப்படுகிறதை அறியாயோ ? சாதுவன் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்த வணிகன். அவன் ஒரு சமயம் வாணிகம் குறித்துக் கடலிற் சென்றான். இடையில் கப்பல் உடைந்து, கலம் நீரில் ஆழ்ந்தது. அந்நிலையில் பாய்மரக்

கோல் ஒன்றைப் பற்றிக்கொண்டு, அலைகளால் உந்தப் பட்டுச் சாதுவன் நாகர் தீவின் கரையை அடைந்தான். அங்கு அவன் களைப்புடன் கரையில் படுத்திருந்தான். அவனைக் கண்ட நாகர், நரமாமிசம் கிடைத்தது என்று எண்ணி மகிழ்ந்து, அவனை அழைத்துக்கொண்டு சென்று, தங்கள் தலைவன்முன் நிறுத்தினர். அத்தலைவன் ஆண் கரடி போன்றவன்; அவன் மனைவி பெண் கரடி போன்ற வள். அந்நிலையில், சாதுவன் நாகர் மொழியை உணர்ந்த வன் ஆதலால், அம்மொழியில் உரையாடினான். தங்கள் மொழியை அவன் பேசுதலைக் கேட்ட நாகர் தலைவன் மகிழ்ந்து, அவனுக்கு ஊனும், கள்ளும் கொடுக்க உத்தர விட்டான். அதுகேட்ட சாதுவன் ஊனுண்ணல், கட்குடித் தல் என்பவற்றால் உண்டாகும் தீங்குகளை விளக்கிக் கூறி, நாகர் தலைவனுக்கு நல்லறிவு புகட்டினான். பின் அத்தலை வனால் நற்பரிசுகள் அளிக்கப் பெற்றுக் காவிரிப்பூம்பட்டி னத்திற்கு மீண்டான். இச்செய்தியால் நாகர் நாகரிகம் உடையவரல்லர் என்பது விளங்குகிறதல்லவா?

சந்தானம்:—உண்மையே. ஆயினும் நாகர் அனைவ ரும் நாகரிகம் உடையவராகக் கருதுதற்கில்லை. நாகரில் நாகரிகம் உடையவர்களும், நாகரிகம் இல்லாதவர்களும் என இரு வகையினர் உண்டு என்று நாம் நூல்களால் அறியலாம்.

பரந்தாமன்:—கம்பரும், வள்ளுவரும் நாகரிகம் என்ற சொல்லை உபயோகித்துள்ளனர். அவர்கள் அச் சொல்லைக் கண்ணோட்டம் என்னும் பொருளில் ஆண்டுள் ளனர். கண்ணோட்டமாவது தாட்சணியம். அஃதாவது அறியப்பட்டார் ஏவியதை மறுக்காமல் செய்தல் என் பதாம். எனவே, நாகரிகம் என்பது குணமும் செயலும் பற்றி அமைவதாகும் என்பது விளங்குமன்றோ!

முகுந்தன்:—நண்பர்களே, நீங்கள் கூறிய யாவற்றை யும் இதுவரையிலும் கேட்டேன். நகரத்தில் இருப்பவர்களே நாகரிகம் உடையவர்கள் என்று கூறுவதை நான் மறுக் கின்றேன். எவ்வளவோ அரிய நூல்களை இயற்றியுள்ள

புலவர்களும், முனிவர்களும் நகரங்களிலோ வசித்தனர்? இல்லையே. அவர்கள் கிராமங்களிலும் காடுகளிலுமன்றே வசித்தனர்! ஒரு நாட்டின் நாகரிகம், மேம்பாடு முதலியன அந்நாட்டு மொழியிலுள்ள நூல்களால் புலனாகும். நாகரிகம் என்பதற்கு 'திருந்திய வாழ்க்கை' எனப் பொருள் செய்வாரும் உளர். அத்திருந்திய வாழ்க்கையில் அறிவும், அதன் வழிப்பட்ட ஒழுக்கமும் சேர்ந்துள்ளன அன்றே? அறிவு, ஒழுக்கத்திற்குக் காரணமாகும். அவ்வறிவு இயற்கையறிவு, செயற்கையறிவு என இருவகைப்படும். இயற்கையறிவு குடிப்பிறப்பாலும் தெய்வத்தாலும் அமைவதாகும். செயற்கை அறிவோ கல்வியாலும் நல்வினைத்தாலும் உண்டாவதாகும். ஒழுக்கம் என்பது அகத்தூய்மை, புறத்தூய்மை என்னும் இருவகையானும் உண்டாவது. புறத்தூய்மையை உடம்பு, உடை, உணவு, உறையுள் என்பவற்றால் உணரலாம். ஆனால், அகத்தூய்மையோ மனம், மொழி, மெய் என்பவற்றில் தூய்மையாக இருத்தலாகும். ஒருவன் எத்தகைய எளியவனாயினும், தன்னையும் தன்னைச் சார்ந்த பொருள்களையும் உள்ளும் புறம்பும் தூய்மையாக வைத்திருத்தலே நாகரிகமாகும். 'கந்தையானாலும் கசக்கிக் கட்டு', 'கூழானாலும் குளித்துக் குடி' என்பனவாய பழமொழிகள் நாகரிகம் பற்றி எழுந்தனவே. விலையும் சுவையும் மிக்க உண்டிகளை உண்ணலும், மாளிகையில் வசித்தலும், விசையுடைய ஊர்திகளில் செல்லுதலும், இயந்திரங்களையும் ஏவலாளரையும் கொண்டு பணியாற்றிக் கொள்ளுதலும்மட்டும் நாகரிகம் ஆகா. அவை ஆடம்பர வாழ்க்கையேயாகும். அறிவில்லாது செல்வம் மட்டும் பெற்றார் இவற்றைச் செய்து கொள்ளலாமல்லவோ? உடையும் உணவும் அவரவர் வசிக்கும் நாட்டுத் தட்ப வெப்ப நிலைக்கு ஏற்றாற்போல் அமைவனவாகும் என்பதை அறிதல் வேண்டும்.

பரந்தாமன் :—ஆம்; முகுந்தன் கூறுவதிலும் உண்மை இருக்கின்றது. நாம் நம் முன்னோரை விட நாகரிகம் உடையவர்களாய் வாழ்கின்றோம் என மனப்பால்

குடித்துக் கொண்டிருக்கின்றோம். சங்கத் தமிழ் நூல்களையும், சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்ப ராமாயணம் முதலியவைகளையும் படிக்கும்பொழுது, அக்காலத்தில் எத்துணை நாகரிகம் உடையவர்களாக மக்கள் வாழ்ந்தனர் என்பது நமக்குப் புலனாகின்றது. நாகரிகம் கால தேசங்களுக்கு ஏற்ப மாறுகிறதென்றும் அறியலாகும்.

சந்தானம் :—ஆனால் நாகரிகம் என்பது யாது? அதற்குரிய குறிகள் யாவை? முகுந்தா, நீ சொல்.

முகுந்தன் :—அன்பர்களே, நான் அறிந்தவரையில் கூறுகிறேன். நாகரிகத்திற்கு இன்றியமையாதன பிறரை உபசரித்தலாகிய வேளாண்மையும், விருந்தோம்பலும், தாழ்மையும் ஆகும். உழவு, கைத்தொழில், கடல் வாணிகம், போக்கு வரவுக்குரிய சாதனங்கள், ஓவியம், மொழி வளர்ச்சி, கலைப்பெருக்கம், திருந்திய அரசு முதலியன நாகரிகத்தை மேம்படுத்தற்கு உரியனவாகும். மற்ற உயிரினின்றும் மக்களை வேறுபடுத்திக் காட்டுவது நாகரிகமே. ஆதலால் உயர்திணை என்று தம்மைக் கூறிக்கொள்வோர் எல்லோரும் நாகரிகம் உடையராதல் வேண்டும்.

மணிவாசகம் :—நண்பா, உன் கருத்தை நான் முற்றிலும் ஆமோதிக்கிறேன். இன்று நேரம் கழிந்ததே தெரியவில்லை. அரிய கருத்துக்களை அறிந்தோம். நாகரிகம் என்பதைப்பற்றிச் சிறந்த கட்டுரை எழுத நாம் உணர்ந்தோம். காலத்தையும் வீணாக்கவில்லை. கடற்கரைக்குச் செல்வதன் பயனையும் பெற்றோம். அன்பர்களே, இதுபோல் தினமும் ஒவ்வொரு பொருள்பற்றிப் பேசுவோம். நேரமாயிற்று; புறப்படுவோம்.

(அனைவரும் செல்கின்றனர்)

**பொருள் காண்க**

சொற்போர், ஆண்டு, முதிர்ந்து, மீள, ஐயப்பாடு, பாவனை, ஆழ்ந்தது, ஊன், புகட்டினன், கண்ணோட்டம், இருவகையானும், அகத்தூய்மை, உள்ளும்புறம்பும், ஊர்தி, விசை, தட்பம், வெப்பம், ஆடம்பரம், எத்துணை, வேளாண்மை, சாதனம், ஆமோதிக்கிறேன்.

## சிறுவிடை வினுக்கள்

1. கடற்கரைக்குச் சென்ற நால்வர் யாவர்?
2. ஆசிரியர் மகிழவும், அறிவு விருத்தியாகவும் சந்தானம் கூறியது என்ன?
3. 'நற்செயலை உடனே தொடங்கு'—இப் பொன்மொழி அறிவிப்பது என்ன?
4. எதைப் பற்றிப் பேசலாம் எனப் பரந்தாமன் கூறினுன்? ஏன்?
5. சந்தானம் எங்குச் சென்ருன்? எவ்வளவு நாளில் மீண்டான்? எப்படி?
6. நாகரிகம் எதனைப் பொறுத்ததாகும் என்ற ஐயப்பாடு தோன்றுகிறது?
7. நாகரிகம் என்பது என்ன? இச் சொல் எவ்வாறு தோன்றியிருக்கலாம்?
8. நாக கன்னி யார்? அவள் யாரை மணந்தாள்?
9. கம்பரும் வள்ளுவரும் எப்பொருளில் நாகரிகம் என்ற சொல்லை ஆண்டுள்ளனர்?
10. எது நாகரிகம் ஆகும்? அஃது எத்தகையது?

## கட்டுரையாக்கம்

1. மேனுட்டு நாகரிகம் என்பது பற்றிப் பதினைந்து வரிகள் எழுதுக.
2. நம் முன்னோர் நாகரிகம் உடையவர்களாய் விளங்கினர் என்பதை விளக்கி எழுதுக.
3. படக் காட்சி பார்ப்பதன் நன்மை தீமைகளைப் பற்றி இருவர் உரையாடுவது போல எழுதுக.
4. நாகரில் நாகரிகம் உள்ளவரும், நாகரிகம் இல்லாதவரும் உண்டு என எவ்வாறு அறியலாம் என்பதை விளக்கி எழுதுக.
5. எவை நாகரிகமாகா என்பதை ஐந்து வரிகளில் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. **பிரித்து எழுதுக:—**

தினந்தோறும், நற்செயல், எண்ணுவதுண்டு, நிலைபெற்றிருப்பது, நகரம், இப்பொருளை, உடையவரல்லர், அகத்தூய்மை.

2.

| | |
|---|---|
| சொல் + போர் = சொற்போர் | இந்த எடுத்துக்காட்டுகளிலிருந்து லகர மெய் வல்லினத்திற்கு முன் எவ்வாறு திரியும் என்னும் விதியை வரைக. |
| மல் + போர் = மற்போர் | |
| கடல் + கரை = கடற்கரை | |
| உடல் + பயிற்சி = உடற்பயிற்சி | |
| கால் + சட்டை = காற்சட்டை | |
| மேல் + சட்டை = மேற்சட்டை | |

3. நெற்போர், சொற்போர், விற்போர், மற்போர், நடை உடை பாவனை, அகத்தூய்மை, புறத்தூய்மை: இவற்றை அமைத்துத் தனித்தனி வாக்கியங்கள் எழுதுக.

## 18. ஔவையார்

ஓரங்க நாடகம் : (இரண்டு காட்சிகள்)

### முதற் காட்சி

காலம்—காலை.

இடம்—அரண்மனை.

பாத்திரங்கள்—அதிகமான், ஔவை, மந்திரி, சேனபதி, சேவகர்.

[அரசன் கொலுமண்டபத்தில் வீற்றிருக்கிறான். சேவகன் ஓடோடியும் வந்து மன்னனை வணங்கி நின்று கூறுகிறான்]

சேவகன் :—மன்ன, நமது ஔவைப் பிராட்டியார் வாயிலில் வந்துள்ளார்.

அதிகமான் :—உடனே வரவிடுக. இதோ நானே வருகிறேன்.

[சேவகன் ஓடோடிச் சென்று ஔவையை நோக்கி]

சேவகன் :—விரைந்து செல்க, இல்லையேல் மன்னரே இங்கு வந்துவிடுவார்.

[ஔவையார் அவைக்கு வருதல்; அதிகன் எழுந்து, வரவேற்று ஆதனமளித்தல்]

அதிகமான் :—வேட்டை வினைமேற் சென்றநாள் முதல் இன்றுவரை உம் அமுத மொழிகளைக் கேட்க இயலவில்லை.........சேவகா! உள்ளே வைத்திருக்கும் அப்பழத்தைக் கொண்டுவா.

[சேவகன் கருநெல்லிக் கனியைக் கொண்டுவந்து கொடுக்க, அதிகமான் அதை வாங்கி]

அதிகமான் :—தாயே, இக்கனியை நீங்கள் உண்ண வேண்டும்.

[ஔவை பெற்று உண்கிருள்]

ஔவை :—என்னே, மிகச் சுவையுடையதாக உள்ளதே! இது போன்ற கனியை யான் இதுவரை உண்டதே

இல்லை; மிகச் சுவையுடையது. அமுதினும் இனியது இந் நெல்லிக்கனி. இதனை எவ்விதம் பெற்றாய்?

அதிகமான்:—அன்னாய், வேட்டைக்குச் சென்றேன் அன்றோ! வேட்டையாடிக் களைத்துப் போனேன்; அப்பொழுது நீருண்ணும் பொருட்டு ஒரு நீர் நிலைக்குச் சென்றேன்; அங்கு மலைப் பிளவுக்கிடையில் ஒரு கருநெல்லிமரம் நிற்பதைப் பார்த்தேன். அதில் நெல்லிக்கனி ஒன்று இருந்தது. அது பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை பழுக்குமாம். அதனை உண்பார் நீண்டகாலம் உயிர் வாழ்வராம். ஆனால் அத்தீவிய கனியைப் பறிப்பது அரிதாக இருந்தது. அதனைச் சுற்றியுள்ள முட்புதர்கள் கடத்தற்கு அரியனவாயிருந்தன. எனினும் நான் அதனை முயன்று பெற்றேன். ஆனால் யானே தின்ன மனம் வரவில்லை. உம்மைக் கண்டதும் என் மனம் உமக்கு அக்கனியை அளிக்க விழைந்தது. இதுவே இதன் வரலாறு.

ஔவை:—மன்ன, ஆராயாது எத்தகைய பெரும் பிழையை நீ செய்தாய்! நீண்ட ஆயுளைத் தருவதான அம்மென்மதுரக் கனியை நீயன்றோ உண்டிருக்க வேண்டும்? வள்ளலாகிய நீ உண்டிருந்தால் நீண்ட காலம் இப் பேருலகில் வாழ்ந்து, துறந்தார்க்கும், வறுமையுற்றார்க்கும், புலவர்கட்கும் மிடிதீர வரையாது அளித்து நலம் பல செய்பவனாவாய்; அழியாப் புகழை எய்துபவனுமாவாய். அஃதின்றி எனக்கீந்தனையே. யான் நெடுங்காலம் இருந்து என்ன பயன்? எளியவர் என்னால் எவ்வாறு உய்வர்?

அதிகமான்:—தாங்கள் கூறியது வியப்பிற்குரியதே. நான் அக்கனியையுண்டு நீண்ட காலம் வாழ்ந்தால் எளியவர் பலர்க்கும் உதவலாம் என்றீர். அஃது உண்மையாகலாம். ஆனால் நான் அவர்களுக்கு உதவக் கூடியது பொருளே. அப்பொருளோ அழியக்கூடியது; நெடுங்காலம் நிலைத்திராதது. மற்றும் அப்பொருள் பெறுவார் அதனைக் கொண்டு நற்காரியங்களையும் செய்யலாம்; தீய காரியங்களையும் செய்யலாம். ஆனால் நீங்கள் அளிக்கும் அறிவு

அமுதமோ யாவரையும் எக்காலத்தும் நல்வழிப்படுத்தும் தன்மை வாய்ந்தது; அழியாது விளங்குவது. ஆதலின் நீங்கள் உண்டதே சாலச்சிறந்தது.

ஔவை :—அரசே, உயர்ந்த குடியிற் பிறந்த உனக்கு உயர்ந்த கருத்துக்களே தோன்றுகின்றன. நீ ஆலமர் செல்வன் பேரருளினல் நீண்ட காலம் வாழ்வாயாக.

(சேவகன் ஒருவன் ஓடோடி வந்து, அதிகமானைப் பணிந்து)

சேவகன் :—அரசே, வாழ்க நின் கொற்றம். தொண்டை நாட்டு மன்னனின் தூதுவன் வந்துள்ளான்.

அதிகமான் :—உள்ளே வரவிடுக.

[தொண்டையர்கோனின் தூதுவன் வந்து பணிகின்றான்.]

அதிகமான்:—நின் வருகை எக்காரணம் பற்றியதோ?

தூதன் :—மன்ன! பண்டு நம் மன்னனுக்குக் கீழ்ப் படிந்து திறை செலுத்தி வாழ்ந்தனர் நும் குடிவழி வந்தோர். மற்றும் தொண்டையர்கோனுக்கு உரியநாடு உமது நாடு. அதனை எமது மன்னர் எந்நேரத்திலும் கைப்பற்றிக் கொள்ளும் ஆற்றல் உடையவர். ஆனல் நீர் செவ்விய நெறியில் குடிகளைத் துன்புறுத்தாது ஆட்சிபுரிவது கேட்டு, எமது அரசர் இந்நாட்டினை உம்மிடமிருந்து கவர நினைக்கவில்லை. அதனல், தமக்குரிய திறையைப் பெறுதலே கடன் என்று அவர் துணிந்தார். ஆதலால் நீர் எம் மன்னருக்கு உரிய திறைப்பணத்தைச் செலுத்தி நெடிது வாழ்க. இல்லையேல் போருக்கு எழுக. இவ்விரண்டில் ஒன்றைச் செய்யுமாறு உமக்கு என் மூலம் இன்று எம் மன்னர் அறிவித்துள்ளார்.

அதிகமான் :—நன்று நன்று! எம் குடியினர் நும் மன்னனுக்கு அடங்கியிருந்தனரோ! யானே திறை செலுத்தல் வேண்டும்? என்னே தொண்டைமானின் அறிவு இருந்தவாறு! நான் போருக்கு எழுகின்றேன். உங்கள் மன்னனையும் போருக்குத் தயாராக இருக்கச் சொல்.

தூதன் :—மன்ன, போரினல் விளையும் தீமைகளை நீர் அறிவீர். வீணே எமது மன்னரை எதிர்த்து நும் படைகள் மடியல் வேண்டா. ஆற்றல் மிக்கோனை எதிர்த்தால் அடைவது தோல்வியே என்பது சொல்லாமலே விளங்கும். ஆதலால் யாதும் ஆய்ந்து அறிந்து செய்யத்தக்கது ஆகும்.

அதிகமான் :—இங்ஙனம் எம் ஆற்றல் உணராது, புன்மொழி உரைத்த உன்னைத் தூதன் எனக் கருதி வாளா விடுத்தனன். செல்க; வேறென்றும் உரையற்க அதிகமானை எதிர்த்தால், நும் மன்னன் அமரர் உலகம் எய்துதல் திண்ணம் என்று உணர்த்துக.

[தூதன் செல்கிருன்]

ஔவையார் :—அன்ப, அவசரப்படாதே. தொண்டைமான் உன்மீது அழுக்காறு கொண்டு போர் தொடுக்க எண்ணினன். இதனைத் தூதுவன் வாய்ச்சொல் இனிது விளக்கும். அவன் தன் வலிமையை உணரவில்லை என்பதையும் அறியலாம். எதற்கும் நான் அவனிடம் சென்று வருகிறேன். விடை தருக.

அதிகமான் :—தாயே, நும் திருவுள்ளப்படியே செய்க

(திரை விழுகிறது)

## இரண்டாம் காட்சி

காலம் :—காலை

இடம் :—தொண்டை நாட்டுத் தலைநகரான காஞ்சிபுரத்து அரண்மனையில் படைக்கலக் கொட்டில்.

பாத்திரங்கள் :—தொண்டைமானும், ஔவையாரும்.

(தொண்டைமான் ஔவையாரை நோக்கி)

தொண்டைமான் :—அன்னாய், எனது ஆயுதக் கொட்டிலைப் பார்த்தீரா? படைக்கலங்கள் எவ்வளவு உள்ளன! இவ்வளவு படைக்கலங்கள் உமது அதிகமானிடம் உளவோ?

ஔவையார் :—அரசே, உம்முடைய ஆயுதக் கொட்டில் மிக அழகாக உள்ளது. அதனைக் காணும்பொழுது உள்ளத்தில் அச்சம் எழுகின்றது; உன் வீரமும் விளங்குகின்றது. ஆனல் என் மனத்தில் தோன்றுவதைக் கேள்.

உன் ஆயுதங்கள் எல்லாம் பளபளப்பாய் உள்ளன; நெய் தடவப் பெற்றுள்ளன; பீலி சூட்டப் பெற்றுள் ளன; உறைகள் நழுவாமல் போடப்பட்டுள்ளன; பிடிகள் கழலாமல் உள்ளன; துரு ஏருமல் கண்களைக் கூசச் செய்யும் ஒளியுடையனவாய் விளங்குகின்றன. ஆனல் அதிகமானின் படைக்கலங்களோ பிடி கழன்று, உறை இன்றி, முனை மழுங்கியும், வளைந்தும், ஒடிந்தும், கூர்மையின்றியும், கொல்லரது உலைக்களத்தில் காய்ச்சி அடிக்கக் கொடுக்கப்பட்டுள்ளன. அவன் படைக்கலக் கொட்டிலிலோ ஓர் ஆயுதமுமில்லை. இருவர் படைக்கலக் கொட்டில்களுக்கும் உள்ள வேற்றுமை இதுவே.

தொண்டைமான்:—தாயே, நும் உள்ளம் அறிந்தேன். எனது படைகள் பயன் படுத்தப்படாமல் இருப்பதால் ஒளி குன்ருமல் இருக்கின்றன. அதிகமான் படைக்கலங்கள் பகைவர்களைத் தாக்குதலால் முனை மழுங்கி, ஒளி குன்றிக் கொல்லர் உலைக்களத்தை உற்றன என்பதன்ருே நும் கருத்து? அதிகமான் போர்த்திறன் மிகப் படைத்தவன் என்று நீர் குறிப்பால் உணர்த்தியதை நான் உணர்ந் தேன். அன்னையே, அவனெடு போர் தொடுக்க நினைத் திருந்த என் மனம் மாறிவிட்டது. இனி ஒரு பொழுதும் போர்புரியேன். இன்றே அவனுடன் நட்புக்குரிய நெறி யில் பழகத் தொடங்குவேன் என்று நிருபம் அனுப்பு கிறேன். இன்று இங்கு வந்து, எனக்கு நல்லறிவூட்டிய உங்களுக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன். தாங் கள் என்னுடன் சில நாட்கள் அரண்மனையில் தங்கி யிருந்து செல்லுமாறு வேண்டிக் கொள்கிறேன். அம் மையே, வருக, செல்வோம்.

ஔவையார்:—அவ்வாறு செய்வதே என் மனத்தை மகிழ்விப்பதாகும். வருக, செல்வோம்.

(திரை விழுகிறது)

**பொருள் காண்க**

ஆதனம், நீர் நிலை, அருந்தி, புதர், மதுரக்கனி, துறந்தார்க்கும், எய்து பவன், ஈந்தனையே, ஆலமர் செல்வன், திறை, உரையற்க, புன்மொழி, பீலி, ஒளிகுன்றி, செருக்கு, விழைந்தது.

## சிறுவிடை வினாக்கள்

1. அதிகமான் பெற்ற கனி யாது?
2. கனியின் சிறப்பு யாது?
3. கனியை அதிகமான் யாருக்குக் கொடுத்தான்?
4. ஔவை அதிகமானை எவ்வாறு வாழ்த்தினர்?
5. தொண்டைமானிடம் தூதுவன் கூறியதென்ன?
6. ஔவையார் தொண்டைமானின் ஆயுதங்களைப் புகழ்ந்தும், அதிகமான் ஆயுதங்களை இகழ்ந்தும் கூறியதனால் தொண்டைமான் அறிந்ததென்ன?
7. தொண்டைமான் ஔவை மொழியைக் கேட்டு யாது செய்தான்?

## கட்டுரையாக்கம்

1. 'அதிகமான் நெல்லிக் கனி பெற்றதும், கனியின் தன்மையும்' என்பதுபற்றிப் பத்து வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.
2. 'ஔவைக்கு அதிகமான் கனி அளித்தல்' என்ற தலைப்பில் பதினைந்து வரிகள் எழுதுக.
3. 'ஔவையாரின் சொல் வன்மை' என்ற தலைப்பமைத்து, ஒரு கட்டுரை எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. **பிரித்து எழுதுக :**—சுவையுடையதாக, வேட்டையாடி, முட்புதர், உண்டிருந்தால், அப்பொருள், கோனுக்குரிய, வேறொன்றும், காய்ச்சியடிக்க, ஆயுதமுமில்லை, அருந்தமிழ்.

2. **சேர்த்து எழுதுக :**—ஓடோடி + சென்று ; மொழிகளை + கேட்க ; வேட்டைக்கு + சென்று ; முள் + புதர் ; உண்மை + கண்டதும் ; அழிய + கூடியது ; தீப + காரியம் ; திறை + பணம் ; நெருங்கி + பழகுபவர் ; படை + கருவி ; ஆயுதமும் + இல்லை ; குறிப்பிட்டதை + உணர்ந்தேன்.

3. திரை, திறை—வேற்றுமை என்ன? தனித்தனி வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

4. ஒருவரைப் பழிப்பது போலப் புகழலாம். (கெட்டிக்காரனைப் பார்த்து, 'இவனோ தேறுவான்') ஒருவரைப் புகழ்வது போலப் பழிக்கலாம். (முட்டாளைப் பார்த்து 'இவன் அதிபுத்திசாலி அல்லனோ')

இப்பாடத்தில் புகழ்வது போலப் பழிப்பதும், பழிப்பது போலப் புகழ்வதும் அமைந்துள்ளன. அவற்றைத் தலைப்புக் கொடுத்து எடுத்து எழுதுக.

# செய்யுட்பகுதி

## I. கடவுள் வாழ்த்து

### சகல கலாவல்லி மாலை

1. பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும்
பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல் காயுளங்
கொண்டுதொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பா லமுதந்
தெளிக்கும்வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப் பேடே! சகல
கலாவல்லியே!

—குமரகுருபர சுவாமிகள்

### தேவாரம்

2. கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி யைம்புலனு மகத்தடக்கி
எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே.

—திருநாவுக்கரசர்

### நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் — திருமாலை

3. கங்கையிற் புனித மாய காவிரி நடுவு பாட்டு
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழி லரங்கந் தன்னுள்
எங்கள்மால் இறைவன் ஈசன் கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன் ஏழையேன் ஏழை யேனே.

—தொண்டரடிப்பொடியாழ்வார்

### திருப்புகழ்

4. இசைந்த ஏறுங் கரியுரி போர்வையும் எழில்நீறும்
இலங்கு நூலும் புலியதள் ஆடையும் மழுமானும்
அசைந்த தோடும் சிரமணி மாலையும் முடிமீதே
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய குருநாதா!

உசந்த சூரன் கிளையுடன் வேரற முனிவோனே
உகந்த பாசக் கயிறொடு தூதுவர் நலியாதே
அசந்த போதென் துயர்கெட மாமயில் வரவேணும்
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமாளே.

—ஸ்ரீ அருணகிரிநாதர்

1. சகலகலாவல்லி=எல்லாக் கலைகளுக்கும் தலைவியான ஸரஸ்வதி.சகலகலாவல்லி மாலை என்னும் இந்நூல் பத்துப் பாட்டுக்கள் கொண்டது. இதனைப் பாடியவர் குமரகுருபர சுவாமிகள். இவர் நீதிநெறி விளக்கம், மீனாட்சியம்மை குறம் முதலியன பாடியுள்ளார்.

பாட்டு, அர்த்தம், பயன் உண்டாக ஆசிரியர் கலைமகளை வேண்டுகிறார். கூட்டும்படி=உண்டாகும்படி. கடைக்கண் நல்குதல்-அருட் கண்ணால் பார்த்தல். தீட்டும்-இயற்றும். கலைத்தமிழ்த் தீம்பால் அமுதம்-பல்வகைச் சாத்திரங்களைக் கொண்ட தமிழாகிய இனிய பாலையும் நீரையும். தெளிக்கும் வண்ணம் காட்டும்-தெற்றென விளங்கக் காட்டும். அமுதம்-நீர். ஓதிமப் பேடு-பெண் அன்னப் பறவை.

2. திருநாவுக்கரசர் சைவசமய குரவர் நால்வரில் ஒருவர். இவருக்கு அப்பர் என்ற பெயரும் உண்டு. அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய பாடல்களின் தொகுதிக்குத் தேவாரம் என்று பெயர். இவர் இறைவனை மன முருகப் பாடியுள்ளார்.

கைப்போது-கையாகிய மலரால். காதலித்து-அன்புகொண்டு. வானோர்-தேவர். முப்போது-மூன்று காலத்திலும். (காலை, பகல், மாலை) முடிசாய்த்து-தலை வணங்கி. ஐம்புலன்-மெய், வாய், கண், மூக்கு, செவி. அகத்தடக்கி-மனத்தால் அடக்கி.இனியான்-இனியவனாகிய கடவுளை. எப்போதும்-எக்காலத்தும்.

3. திருமாலை என்பது நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் தொண்டரடிப் பொடி ஆழ்வாரால் பாடப்பட்டது. முப்பது பாடல்கள் கொண்டது. திரு அரங்க நாதனைப்பற்றிப் பாடியது.

கங்கையின்-கங்கையைப்போல். புனிதமாய-பரிசுத்தமான. நடுவுபாட்டு-நடுவிடத்தில். பொங்குநீர்-மிகுந்த நீர். பூம்பொழில்-அழகிய சோலை. கிடந்ததோர் கிடக்கை-படுத்துக் கொண்டிருக்கும் நிலை. சயனத்திருக்கோலம். எங்ஙனம்-எவ்வாறு. வாழ்கேன்-வாழ்வேன். ஏழை-எளியவன்.

4. திருப்புகழ் என்பது அருணகிரிநாதரால் பாடப்பட்டது. படிக்கப் படிக்க இன்பந்தருவது. இசையோடு பாடுதற்கியல்வது. அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் இருந்தவர்; முருகன் அருள் பெற்றவர்.

இசைந்த-பொருந்திய. ஏறு-ரிஷபம்; காளைமாடு. கரியுரி போர்வை-யானையின் தோலை உரித்துப் போர்த்த போர்வை. எழில் நீறு-அழகு பொருந்திய திருநீறு. இலங்குநூல்-விளங்குகின்ற பூணூல். புலி அதள்-புலித்தோல். அசைந்த-ஆடுகின்ற. தோடு-காதணி. சிரமணி-தலையில் அணியும் மணி. பரிவுடன்-அன்போடு. உசந்த-உயர்ந்த. கிளை-சுற்றத்தோடு. வேர்அற-மூலத்தோடு அழிய. சூரன்-சூரபதுமன். முனிவோன்-கோபித்து அழித்தவன். பாசக்கயிறொடு தூதுவர்-எமதூதர். அசந்தபோது-செயலற்றுக்கிடக்கும் பொழுது. மிசை-மேல்,

# II. நீதிப்பகுதி

## 1. சதகம்

1. வாலிபந் தனில்வித்தை கற்கவேண் டும்; கற்ற
வழியிலே நிற்கவேண்டும்;
வளைகடல் திரிந்துபொன் தேடவேண் டும்; தேடி
வளரறம் செய்யவேண்டும்;
சீலமுடை யோர்களைச் சேரவேண் டும்; பிரிதல்
செய்யா திருக்கவேண்டும்;
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண் டும்; கொண்டு
தியாகம் கொடுக்கவேண்டும்;
ஞாலமிசை பலதருமம் நாட்டவேண் டும்; நாட்டின்
நன்றாய் நடத்தவேண்டும்;
நம்பன்இணை யடிபூசை பண்ணவேண் டும்; பண்ணி
னுலுமிகு பக்திவேண்டும்;
ஆலமமர் கண்டனே! பூதியணி முண்டனே
அழகன்எம தருமைமதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே.

—அறப்பளீசுர சதகம்

2. தங்கமா னதுதழலி னின்றுருகி மறுகினும்
தன்னொளி மழுங்கிடாது
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமே
தன்மணம் குன்றிடாது
பொங்குமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமே
பொலிவெண்மை குறைவுறாது
போதவே காய்ந்துநன் பால்குறுகி னுலும்
பொருந்துசுவை போய்விடாது
துங்கமணி சாணையில் தேய்ந்துவிட் டாலும்
துலங்குகுணம் ஒழியாதுபின்
தொன்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்களது
தூயநிறை தவறுகுமோ

மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாசனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

—குமரேச சதகம்.

3. எடுத்தாலும் ஊறும் இறைத்தாலும் ஊறும் இடைநடுவே
மடுத்தால் மறிபடு மோமணற் கேணித்தண் ணீரதுபோல்
அடுத்தாரை வாழ்விக்கச் செல்வமுண் டானவர் அன்புடனே
கொடுத்தாற் குறைவரு மோவச்சு தாநந்த கோவிந்தனே.

—கோவிந்த சதகம்.

சதகம் என்பது நூறு பாடல்களைக் கொண்டதோர் நூல். சதம்-நூறு. சதகங்கள் பல தமிழ் மொழியில் உள்ளன. பத்துப் பாடல்களைக் கொண்டது பதிகம் எனப்படும். தமிழ் மொழியைக் கற்கப் புகுவார் முதலில் இளமையில் சதகச் செய்யுளை மனப்பாடம் செய்வர். அதனால் ஞாபக சக்தியை விருத்தி செய்து கொள்ளுதலும், நீதிகளை அறிதலும் பயனுவதோடு பின் பெருநூலில் புகுதல் எளிதாகும்.

*1.* வாலிபம்-இளமை. வித்தை-கல்வி. கற்ற வழி-நூல்களில் தாம் கற்ற ஒழுக்கநெறிக்கேற்ப. வளை கடல்-சூழ்ந்துள்ள கடல். பொன்-செல்வம், 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்பது அறிக. சீலம்-ஒழுக்கம். தியாகம்-தமக்கென வேண்டாது பிறருக்கு அளித்தல். ஞாலமிசை-பூமியின் மேல். நம்பன்-கடவுள். இணையடி-இரண்டு பாதங்களை. ஆல் அமர் கண்டன்-கல்லால மரத்தடியில் தக்ஷிணாமூர்த்தியாய் அமர்ந்து நான்கு முனிவர்களுக்கும் உபதேசித்தவன், திருப்பாற் கடலில் தோன்றிய ஆலகால விஷத்தையுண்டு கழுத்தில் நிறுத்தியவன், பூதி-விபூதி. முண்டம்-உடல். மதவேள்-மன்மதன். அனுதினமும்-தினந்தோறும். சதுரகிரி-ஒரு மலையின் பெயர். அம்மலைமீதுள்ள சிவன் திருநாமம் அறப்பளீசுரன் என்பது.

*2.* தழல்-நெருப்பு. மறுகுதல்-முறுகக் காய்தல். ஒளி-பிரகாசம். மழுங்குதல்-ஒளியில்] குறைதல், மங்குதல். குறடு-கட்டை. மணம்-வாசனை. பொலி வெண்மை-விளங்கும் வெண்மை நிறம். போதவே-போதுமான அளவு. பால் குறுகுதல்-பால் சுண்டி வற்றுதல். பொருந்து சுவை-அதிலமைந்த இனிய சுவை. துங்கம்-பரிசுத்தம். மணி-ரத்தினக் கற்கள். துலங்கும்-ஒளிவிட்டு விளங்கும். தொன்மை-பழைமை. மடிந்தாலும்-இறந்தாலும். தூய நிறை-பரிசுத்தமான ஒழுக்கம். குறமங்கை-வள்ளி. சுரகுஞ்சரி-தெய்வயானை. திண்புயம்-வலிமை பொருந்திய தோள். புல்வயல்-ஓர் ஊர். குமரேசன்-முருகன்.

*3.* ஊறும்-பின்னும் பெருகும். மடுத்தால்-பள்ளந்தோண்டினல். மறிபடுமோ-தடுக்கப்பட்டு நின்று விடுமோ? மணற்கேணி-மணற்பாங்கான விடத்தில் தோண்டப்பெற்ற கிணறு. அடுத்தாரை-சார்ந்தவர்களை. அச்சுதன், ஆனந்தன், கோவிந்தன்-அழிவில்லாதவன், இன்பமானவன், பசுக்களைக் காப்பாற்றியவன்.

## 2. நன்னெறி

1. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ? நன்னுதால்! ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு?

2. கடலே யனையம்யாம் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையால் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும்.

3. தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று.

4. இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்?—நல்லாய்!
மொழியிலார்க் கேது முதுநூல்? தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு?

5. எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ?—பைந்தொடீஇ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி.

6. ஆக்கு மறிவான் அலது பிறப்பினல்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு.

—சிவப்பிரகாச சுவாமிகள்

நல்+நெறி: நல்ல வழியைப் போதிக்கும். இது நாற்பது வெண்பாக்களை உடைய நூல். இதனை இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்; வீரசைவர். பிரபுலிங்க லீலை முதலாகப் பல நூல்களை இயற்றியுள்ளார். இவர் 'கற்பனைக் களஞ்சியம்' என்று சிறப்பித்துக் கூறப்படுவர். இவர் புலமையை சோண சைல மாலை, நால்வர் நான்மணி மாலை, திருவெங்கைக் கோவை முதலியவற்றில் காணலாம். ஒரு சமயம் இவர் ஓர் ஆற்றின் கரையில் அமர்ந்திருந்த பொழுது நன்னெறி வெண்பா நாற்பதையும் பாடினர் என்ப.

*1.* மாசு அற்ற-குற்றமில்லாத. நெஞ்சு-மனம். வன்சொல்-கடுஞ்சொல். ஏனையவர்-மனத்தில் குற்றமுடையவர். பேசுற்ற-சொல்லும். பிறிது-தீது என்க-என்று கூறுக. ஈசன்-சிவன். நல்லோன்-நல்லவனாகிய சாக்கிய நாயனர்.

எறிசிலை-எறிந்த கல். நல்நுதால்-நல்ல நெற்றியையுடையவளே, மகடூஉ முன்னிலை. ஒண் கருப்பு வில்லோன்-ஒளிபொருந்திய கம்ருபை வில்லாக உடைய மன்மதன். மலர்-புஷ்பபாணம் (மலரம்பு). விருப்பு-விருப்பத்தைத் தந்தது.

2. கடலே அனையம்-பரந்த படிப்பினுல் கடலை ஒத்திருக்கிறோம். அடல் ஏறு அனைய-வலிமை பொருந்திய ஆண் சிங்கத்தை ஒத்த. செருக்கு-கர்வம், ஆழ்த்தி விடல்-மூழ்கும்படி விடாதே. முனிக்கரசு-முனிவர்களுக்கு அரசரான அகத்தியர். முழங்கும்-சப்திக்கும். பனி-குளிர்ச்சி.

3. தம் குறை-தங்கள் கஷ்டங்களை. தீர்வு உள்ளார்-நீக்க நினையார். தளர்ந்து-மனங்கசிந்து. உறாஉம்-நேரும்: வெம் குறை-கொடிய துன்பத்தை. விழுமியோர்-மேலோர். திங்கள்-சந்திரன். கறை இருள்-களங்கமாகிய இருட்டை, நிறை இருள்-நிறைந்த இருள்.

4. அன்பு இங்கு இல்லானுக்கு-இவ்வுலகில் அன்பில்லாதவனுக்கு. இடம், பொருள், ஏவல்-நிலம், செல்வம், ஏவலாட்கள். என்செய்யும்-என்ன பயனைத் தரும்? (ஒன்றும் தராது) நல்லாய்-நற்குணமுடையவளே, மகடூஉ முன்னிலை. மொழியிலார்-ஊமை. முதுநூல்-பழைமையான நூல்கள். ஏது-என்ன பயன் தரும்? (இல்லை). தெரியும் விழியிலார்-குருடர்.

5. என்+தந்தை-எந்தை-என் தகப்பனுர். நல்கூர்ந்தான்-தரித்திரன் ஆனுன். இரப்பார்க்கு ஈந்து-யாசிப்பவர்க்குக் கொடுத்து. ஈகை-கொடுத்தல். பசுமை+தொடி-பைந்தொடி-பசுமையான வளையல்களை அணிந்தவளே-மகடூஉ முன்னிலை. பயன் உதவி-பழமாகிய பயனைக் கொடுத்து. நில்லா அரம்பை-அழிந்து போன வாழை மரம். கீழ்க்கன்று-அதனடியில் முளைத்த வாழைக் கன்றுகள். கனி-பழம்.

6. ஆக்கும்-மேன்மையை யுண்டாக்கும். மீக்கொள்-மேலாகச் சொல்லப் பட்ட. உயர்வு, இழிவு-உயர்வும் தாழ்வும். வேண்டற்க-விரும்பாதே. அரவு-பாம்பு. பருமணி-பெரிய ரத்தினம். கடலின்-(திருப்பாற்) கடலில் தோன்றிய. கடு-விஷம், கவரார்-கொள்ளமாட்டார்-

## 3. நீதி நெறி விளக்கம்

1. எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனின் என்னகு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து.

2. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும்—நவையஞ்சி
ஈத்துண்ணர் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

3. கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

4. முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லும் தகரும் தகரா கனங்குழாய்!
கொல்லுலைக் கூடத்தி னால்.

5. தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மின்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று.

6. பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

—குமரகுருபர சுவாமிகள்

இதனை இயற்றியவர் குமரகுருபர சுவாமிகள். தந்தை சண்முக சிகாமணிக் கவிராயர். தாய்-சிவகாமியம்மை. ஐந்து வயது வரையிலும் ஊமையாயிருந்து திருச்செந்தூர் முருகப் பெருமான் அருளால் ஊமை நீங்கப் பெற்றுக் கவிகள் பாடினார். ஊர்-திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஸ்ரீவைகுண்டம். குலம்-வேளாளர் குலம். மதம்-சைவம். திருமலை நாயக்கர் காலம். இவர் பல நூல்கள் செய்துள்ளார்.

*1.* கல்வி எத்துணைய ஆயினும்-பலவகைப்பட்ட கல்வியை எவ்வளவு கற்றிருந்தாலும். இடம் அறிந்து-நூல்களில் நுட்பமும் பொருளாழமும் உடைய இடங்களை அறிந்து; உய்த்துணர்வு-மதிநுட்பத்தால் ஆராய்ந்து அறிதல். இல்லாகும்-கல்வியின் பயன் இல்லையாகும். சொல்வன்மை-பிறர்க்கு எடுத்துச் சொல்லும் திறம். அஃது-அந்தச் சொல்வன்மை. பொன்மலர்-பொன்னாலாகிய மலர். நாற்றம்-வாசனை.

*2.* அவையஞ்சி-சபைக்குப் பயந்து. மெய்விதிர்ப்பார்-சரீரம் நடுங்குபவர். அஞ்சா-பயப்படாத. ஆகுலச்சொல்-பொருளற்ற ஆரவாரச்சொல். நவை அஞ்சி-(செய்யத்தக்கவற்றைச் செய்யாமையாகிய) குற்ற முண்டாதலை அஞ்சி. ஈத்துண்ணார்-பிறர்க்குக் கொடுத்து உண்ணாதவருடைய. நல்கூர்ந்தார்-தரித்திரர். இல்நலம்-இல்வாழ்க்கையின் நன்மை. பூத்தலில்-உண்டாவதைக் காட்டிலும். பூவாமை-உண்டாகாதிருத்தல்.

*3.* கலைமகள்-ஸரஸ்வதி. வாழ்க்கை-வாழும் இடம். முகத்தது-நாவினிடத்தது. மலரவன்-பிரமன். வண்தமிழோர்-நூற்செல்வத்தைப் பிறர்க்கு அளிக்கும் வண்மை உடைய தமிழ்ப்புலவர்கள். வெற்றுடம்பு-உயிர் நீங்கினால் தனக்கெனப் பெருமையில்லாத உடம்பு. மாய்வன-அழிவன. இவர் செய்யும் உடம்பு-நூல்கள்.

*4.* முழுவதூஉம்-யாவற்றையும். கற்றனம்-யாம் கற்றுவிட்டோம். களியற்க-செருக்கு அடைதலை ஒழிக. சிறு+உளி-சிற்றுளி. கல்-மலை. தகரும்-பொடியாகிவிடும். கொல் உலைக்கூடத்தினால்-கொல்லரது உலைக்களத்திலுள்ள சம்மட்டியால். கனம் குழாய்-பருத்த (கனமான) காதணியை யுடையவளே. மகடூஉ முன்னிலை.

5. தம்மின் மெலியாரை-தம்மைக் காட்டிலும் செல்வத்தில் குறைந்தவர்களை. உடைமை-செல்வம். அகம் மகிழ்க-மனச் சந்தோஷமடைக. கருத்து அழிக-உள்ளம் உடைக. எற்றே-எவ்வளவு குறைவானது. இவர்க்கு-இக்கற்றவர்க்கு.

6. பெருஞ்சுட்டு-பெருமதிப்பு. வேண்டுவான்-விரும்புகிறவன். யாண்டும்-எக்காலத்தும். மறவாமே-மறக்காமல். நோற்பது-விரதமாகக் கொண்டு செய்யத்தகுவது. பிறர் பிறர்-மற்றையோர். சீர்-பெருமை. தூற்றி-பலர் அறியச் சொல்லி. சிறுமை-அற்ப குணங்களை; புறங்காத்து-தாமறிந்தாலும் வெளிவிடாமல் அடக்கி, யார் யார்க்கும்-எத்தகையவர்க்கும். தாழ்ச்சி-வணக்கத்தைப் புலப்படுத்தும் சொற்களை. சொலல்-சொல்லக்கடவன்.

## 4. இனியவை நாற்பது

1. குழவி பிணியின்றி வாழ்த லினிதே
கழறு மவையஞ்சான் கல்வி இனிதே
மயரிக ளல்லராய் மாண்புடையார்ச் சேரும்
திருவுந்தீர் வின்றே லினிது.

2. மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே
தான மழியாமை தானடங்கி வாழ்வினிதே
ஊன மொன்றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது.

3. கற்றார்முன் கல்வி யுரைத்தல் மிகவினிதே
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்னினிதே
எட்டுணை யானும் இரவாது தானீதல்
எத்துணையு மாற்ற வினிது.

4. பிறன்கைப் பொருள்வவ்வான் வாழ்தல் இனிதே
அறம்புரிந்து அல்லவை நீக்கல் இனிதே
மறந்தேயும் மாணா மயரிகட் சேராத்
திறந்தெரிந்து வாழ்தல் இனிது.

5. கயவரைக் கைகழிந்து வாழ்த லினிதே
உயர்வுள்ளி யூக்கம் பிறத்தல் இனிதே
எளியர் இவரென்று இகழ்ந்துரையா ராகி
ஒளிபட வாழ்தல் இனிது.

6. அடைந்தார் துயர்கூரா வாற்ற லினிதே
கடன்கொண்டுஞ் செய்வன செய்த லினிதே
சிறந்தமைந்த கேள்விய ராயினு மாராய்ந்
தறிந்துரைத்த லாற்ற வினிது.

—பூதஞ்சேந்தனர்

இனியவை நாற்பது என்பது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. நாற்பது வெண்பாக்களினாலாகிய நூல் பாடியவர் பூதஞ்சேந்தனார். ஒவ்வொரு செய்யுளிலும் சொல்லப்படும் விஷயங்கள் மூன்றாகி 'இனிது' என்று முடியும். இதுபோலக் கபிலர் பாடிய 'இன்னாநாற்பது' என்ற நூல் ஒன்றும் உள்ளது.

*1.* குழவி-இளமைப் பருவமுடைய குழந்தை. பிணி-நோய். கழறும்-பேசும் விஷயங்களை. அவை அஞ்சான்-சபைக்குப் பயப்படாதவனுடைய. மயரிகள் அல்லராய்-மயக்கமுடையவர்கள் அல்லாதவராய். மாண்பு உடையார்-பெருமைக் குணமுடையவர்களை. சேரும்-அடையும். திருவும்-செல்வமும். தீர்வு இன்றேல்-நீங்குதல் இல்லையானால்.

*2.* மானம்-தன் அளவில் தாழாமையும், தாழ்வு நேர்ந்தால் உயிர் வாழாமையுமாகிய அரிய குணம். அழிதல்-கெடுதல். வாழாமை-உயிர் வாழாதிருத்தல், (இறத்தல்). தானம் அழியாமை-தான் இருக்கும் நிலை கெடாதபடி, வாழ்வு-வாழ்தல். ஊனம்-குறைவு. மானிடவர்-மக்கள்.

*3.* மிக்கார்-கல்வி, கேள்வி, ஒழுக்கத்தால் மிகுந்த பெரியோர்கள். மிகமாண-மிகவும் சிறப்பாக. முன் இனிது-முதன்மையாக இன்பந் தருவது. எள்+துணை=எட்டுணை-எள்ளின் அளவு. மிகச் சிறிய அளவாயினும் என்றபடி. எத்துணை-எவ்வளவாயினும், எவ்விதத்திலாயினும், ஆற்ற-மிகவும்.

*4.* பிறன் கைப்பொருள்-பிறனிடத்திலுள்ள பொருளை. வவ்வான்-கவர்ந்து கொள்ளாதவனாய், அல்லவை-பாவமான செயல்களை. மறந்தேயும்-மறந்துபோயும், மறந்துங்கூட. மாணா-சிறப்பில்லாத. மயரிகள் சேராத் திறம்-மனமயக்கமுடையவர்களைச் சேராதிருக்கும் வழியாகிய மனவலிமை. (மயக்கமுடையோர் அறிவிலிகள்). தெரிந்து-ஆராய்ந்து அறிந்து.

*5.* கயவர்-கீழ்மக்களை. கைகழிந்து-நீக்கிவிட்டு. உயர்வு உள்ளி-மேலான காரியங்களையே நினைத்து. ஊக்கம்-மனவெழுச்சி. பிறத்தல்-உண்டாதல். எளியர் இவர்என்று-இவர் வறியவர் என்று. இகழ்ந்துரையாது-அவமதித்துப் பேசாது. ஒளிபட-கீர்த்தியுண்டாகும்படி.

*6.* அடைந்தார்-காப்பாற்று என்று அடைக்கலம் புகுந்தவர். துயர் கூரா-துன்பம் மிகுதியும் அடையாதபடி. ஆற்றல்-செய்தல். அமைந்த-பொருந்திய. கேள்வியர்-கேள்விஞான முடையவர்.

## 5. திரிகடுகம்

1. தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்
கோளாளன் என்பான் மறவாதான் இம்மூவர்
கேளாக வாழ்த லினிது.

2. மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாள் பெற்றானும்—உண்ணீர்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்.

3. வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை—எய்தப்

பலநாடி நல்லவை கற்றல் இம்மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள்.

4. வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும் நோன்பிலியும்
இல்லது காமுற் றிருப்பானும்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக்குத்திக் கைவருந்து வார்.

5. தானங் கொடுக்குந் தகைமையும் மானத்தார்
குற்றங் கடிந்த ஒழுக்கமும்—தெற்றெனப்
பல்பொருள் நீங்கிய சிந்தையு மிம்மூன்று
நல்வினை யார்க்குங் கயிறு.

6. தன்னச்சிச் சென்றாரை எள்ளா ஒருவனும்
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்
என்று மழுக்கா றிகந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார்.

—நல்லாதனார்

திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு, திப்பிலி என்ற மூன்று பொருள்களின் சேர்க்கையாலான மருந்து அம்மருந்து உடற்பிணியை நீக்குதல் போல, இந்நூலில் ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்படும் மும்மூன்று விஷயங்களும் உளப் பிணியைப் போக்கும். ஆதலின் மருந்தின் பெயர் இந்நூலுக்கு இடப்பட்டது. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இதன் ஆசிரியர் நல்லாதனார். இந்நூல் நூறு செய்யுட்களைக் கொண்டது.

1. தாள் ஆளன்-முயற்சியையுடையவன். கடன் படா-கடன் வாங்காமல். வேளாளன்-உதவியைச் செய்பவன். விருந்து-தன் வீட்டிற்குப் புதிதாகவந் தோன். கோளாளன்-பிறர் கூறுவனவற்றை மனத்தில் கொள்பவன். மறவா தான்-பிறர் கூறுவதை மறவாதவன். கேள்ஆக-நட்பினராக.

2. மண்-பூமி. வான்புகழ்-மிகு புகழ். நட்டான்-நிலைநாட்டியவன், உண்ணும்நீர்-குடிக்கும் நீர். கூவல்-கிணறு. தொட்டான்-தோண்டியவன். சாவா உடம்பு-அழியாத புகழ் ஆகிய உடம்பு.

3. வருவாயுள்-தனக்கு வரும் வரும்படியுள். கால் வழங்கி-நான்கில் ஒரு பங்கினைப் பிறர்க்கு அறமாகக் கொடுத்து. செரு-போர். வாய்ப்ப-வெற்றியுண் டாக. செய்தவை-செய்த வீரச் செயல்களை. நாடா-பிறர் புகழவேண்டுமென்று சொல்லிக் கொள்ளாத. நலமாட்சி-நற்குண நற்செயல்களால் பெருமை பெற்ற. கோள்-கொள்கைகள்.

4. வெல்வது வேண்டி-சொல்வெற்றியை விரும்பி. வெகுண்டு-கோபித்து. நோன்பிலி-தவம் இல்லாதவன் (தீயோன்). இல்லது-தனக்குக் கிடைத்தற் கரிய பொருளை. காமுற்று-விரும்பி. கல்வி-பிறன்கற்ற கல்வியில். செவிக்குற் றம்-செவியினாலுணரப்படும் குற்றம். உமிக்குத்திக் கைவருந்துவார் என்பது துன்பத்தையும் பயனின்மையையும் குறிக்க வந்தது.

**5. தானம்-பிரதிப் பயன் கருதாது பிறருக்களித்தல். தகைமை-பெருங் குணம். மானத்தார்-பழிக்கு நாணுபவரது. கடிந்த-நீக்கிய. தெற்றென-தெளிவாக. பல்பொருள்-பல விஷயங்கள். சிந்தை-மனம். நல்வினை-அறத்தின்பயனை ஆர்க்கும்-கட்டும்.**

**6. தன்நச்சி-தன்னை விரும்பி. எள்ளா-இகழாத. மன்னிய-நிறைந்த. பொச்சாப்பு-மறதி. என்றும்-எக்காலத்தும். அழுக்காறு-பொறாமை. இகந்தான்-நீக்கியவன். நின்றபுகழ்-நிலைத்தபுகழ்.**

## 6. திருக்குறள்

### கடவுள் வாழ்த்து

1. வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில.

### வான் சிறப்பு

2. தானந் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

### நீத்தார் பெருமை

3. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

### அறன் வலியுறுத்தல்

4. மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

### அன்புடைமை

5. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

### விருந்தோம்பல்

6. அகனமர்ந்து செய்யா ளுறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்.

### இன்சொற் கூறல்

7. இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

### செய்ந்நன்றி யறிதல்

8. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

### அடக்கமுடைமை

9. எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

### ஒழுக்கமுடைமை

10. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

### பொறையுடைமை

11. ஒறுத்தாரை ஒன்ருக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

### பயனில சொல்லாமை

12. பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

### தீவினை அச்சம்

13. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

### ஈகை

14. நல்லா றெனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

### வாய்மை

15. உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்.

### வெகுளாமை

16. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

### இன்னா செய்யாமை

17. இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

### கொல்லாமை

18. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

### கல்வி

19. கண்ணுடையர் என்பவர் கற்ருேர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

## கேள்வி

20. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.

— திருவள்ளுவர்.

திருக்குறள் என்பது தமிழிலுள்ள நீதி நூல்களில் தலை சிறந்தது. குறள்-என்பது இரண்டடிகளைக் கொண்ட ஒருவகை வெண்பா. அவ் வெண்பாவினாலாகிய நூலாதலின் திருக்குறள் எனப்பட்டது. இதற்குத் திருவள்ளுவர், பொய்யாமொழி, தமிழ்மறை, பொது மறை முதலிய பல பெயர்களுண்டு. இஃது, அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் எனும் மூன்று பிரிவுகளையுடையது. இதன்கண் 133 அதிகாரங்கள் உள்ளன. அதிகாரம் ஒன்றுக்குப் பத்துக் குறட்பாக்கள். திருக்குறள் 1330 குறட்பாக்களைக் கொண்டது. இந்நூற்கு உரை எழுதியோர் பதின்மர். அவருள் பரிமேலழகர் உரையே சிறந்தது.

இந்நூலை இயற்றியவர் திருவள்ளுவர். தந்தை பகவன் என்றும், தாய் ஆதி என்றும் கூறுவர். வள்ளுவர் மயிலாப்பூரில் வாழ்ந்தவர்: மதுரையில் வாழ்ந்தவர் என்று கூறுவாருமுளர். இவர் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் இருந்தவர் 'ஆலும் வேலும் பல்லுக் குறுதி; நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' என்பது பழமொழி. இரண்டு-இரண்டடியாலான திருக்குறள்.

1. வேண்டுதல்-விருப்பம். வேண்டாமை-வெறுப்பு. இலான்-இல்லாதவனான கடவுள். யாண்டும்-எப்பொழுதும். இடும்பை-துன்பம்.

2. தானம்-பிறருக்கு அளித்தல், இல்லறத்தானுக்குரியது. தவம்-தவம் செய்தல்; துறவறத்தானுக்குரியது வியனுலகம்-பரந்த உலகம், வானம்-மழை. வழங்காதெனின்-பெய்யாமற் போனால்.

3. செயற்கரிய-செய்வதற்கு அருமையான. செய்கலாதார்-செய்ய மாட்டாதவர்.

4. மனத்துக் கண்-மனத்தில். மாசு இலன்-குற்றமில்லாதவன். அனைத்தே-அவ்வளவே. ஆகுலம் நீர-ஆரவாரத் தன்மையுடையன.

5. அறத்திற்கே-தருமங்களைச் செய்வதற்குத்தான். அன்பு சார்பு என்ப-அன்பு பற்றுக்கோடு என்று கூறுவர்; அறியார்-அவ்வாறு கூறுபவர் அறியாதவர்கள். மறத்திற்கும்-பாவச் செயல்களைச் செய்யாதிருப்பதற்கும். அஃதே துணை-அந்த அன்பே துணையாகும்.

6. அகன் அமர்ந்து-மனம் விரும்பி. அகம்-அகன். போலி. அமர்தல்-விரும்புதல். செய்யாள்-இலக்குமி. உறையும்-வசிப்பாள். முகன் அமர்ந்து-முகத்தினால் விரும்பிப் பார்த்து (இன்முகம் கொண்டு) விருந்தோம்புவான்-விருந்தினரைக் காப்பான். இல்-வீடு.

7. இனிய-இன்பந்தரும் நல்ல மொழிகள். இன்னாத-துன்பந்தரும் தீய மொழிகள். கனி-இனிய மொழி. காய்-இன்னாத மொழி.

8. நன்றி-ஒருவன் செய்த உபகாரம். நன்றன்று-நல்லதல்ல. நன்றல்லது-ஒருவன் செய்த நல்லதல்லாததாகிய தீயகாரியத்தை. அன்றே-தீமையைச் செய்த அப்பொழுதே. நன்று-நல்லது.

9. எல்லார்க்கும்-எத்தகையவர்க்கும். பணிதல்-அடங்கி நடத்தல் செல்வர்க்கே-செல்வர்களுக்கு, (அடங்கி நடத்தல் அவர்களிடம் உள்ளதனால்) செல்வந்தனைத்து-பிறிதோர் செல்வம் போன்றதாகும்.

*10.* ஒழுக்கம்-நல் நடத்தை. இழுக்கம்-தீய நடத்தை. எய்தாப்பழி-அடையக் கூடாத பழி. உலகத்தார் இழிவாகக்கூறும் நிலைத்துள்ளதான சொல்.

*11.* ஒறுத்தாரை-தமக்குத் துன்பஞ் செய்தவர்களைத் தண்டித்தவர்களை. ஒன்ருக-மேலோருள் ஒருவராக. பொறுத்தாரை-தமக்குத் துன்பம் செய்தவர்களைத் தண்டிக்காது பொறுத்துக் கொண்டவர்களை. பொன்போற் பொதிந்து வைப்பர்-பொன்னைப்போல் சிறப்பாக வைப்பார்கள்.

*12.* பயன் இல்சொல்-பிரயோசனமில்லாத (வீண்) வார்த்தைகள். பாராட்டுவானை-எப்பொழுதும் பேசிக்கொண்டிருப்பவனை. மகன் எனல்-மக்களுள் சிறந்த ஒருவன் என்று கூருதே. மக்கட் பதடி எனல்-மக்களுக்குள் (நெற்) பதர் போன்றவன் (விலக்கத்தக்கவன்) என்று கூறு.

*13.* தீயவை-தீமையான காரியங்கள். தீய-துன்பங்களை. பயத்தலால்-உண்டாக்குதலால். தீயினும்-நெருப்பைக் காட்டிலும்.

*14.* நல் ஆறு எனினும்-நல்ல வழியால் பெறத்தகுந்ததாயினும். கொளல் தீது-பிறர்கொடுக்கக் கொள்ளுதல் தீமையே. மேல் உலகம்-மோட்சம். இல் எனினும்-இல்லை என்ருலும். ஈதலே-கொடுத்தலே. 'இன்னுயிரேனும் கொள்வது தீது; கொடுப்பது நன்ருல்' என்று கம்பர் கூறுவதும் காண்க.

*15.* உள்ளத்தால் பொய்யாது-மனம் அறியப்பொய்சொல்லாது. உலகத்தார் உள்ளத்துள் எல்லாம்-உலக மக்கள் மனத்தில் (எல்லோராலும் கொண்டாடப் படுவான் என்றபடி)

*16.* தன்னைத்தான் காக்கில்-ஒருவன் தன்னைத்தான் காத்துக்கொள்ள விரும்பினுல். சினம்-கோபம். காவாக்கால்-காத்துக் கொள்ளாமல் போனுல்; சினம் கொல்லும்-கோபம் அவனை அழித்துவிடும்.

*17.* இன்னு செய்தாரை-தீமை செய்தவர்களை. அவர் நாண-அத்தீமை செய்தார் வெட்கமடையும்படி. நல்நயம்-நல்ல தன்மையான செயல்களை. விடல்-அவர் செய்த தீமையையும் தான் செய்த நன்மையையும் மறந்து விடுதலாகும்.

*18.* தன் உயிர் நீப்பினும்-தன்உயிரைவிடுப்பதனுலும். செய்யற்க-செய்யக் கூடாது பிறிது இன் உயிர் நீக்கும் வினை-பிறிதொன்றின் இனிய உயிரைப் போக்கும் (கொல்லுதலாகிய) செயலை.

*19.* கற்ருேர்-நற்கல்வி கற்ருேர். கண் உடையர்-முகத்தில் அமைந்த கண்களோடு அறிவுக்கண்ணையும் பெற்றவர். முகத்து இரண்டு கண்ணுடையவராய்க் கல்லாதவர் புண்களை உடையவர். (அறிவுக் கண் இல்லை; அதனுல் நன்மை, தீமை அறியார்) முகத்தில் உள்ள கண்களுக்கு நோய் உண்டாதலும், பீளை சாய்தலும், குருடு ஆதலும் உண்டு ஆதலால் 'புண்' என்ருர்.

*20.* அஞ்சுவது-அஞ்சவேண்டுவதான பழிபாவங்களுக்குப் பயப்படுதல்-அஞ்சாமை-பயப்படாதிருத்தல். பேதைமை-அறியாமை. அஞ்சல்-பயப்படுதல். அறிவார் தொழில்-நல்லறிவுடையோர் செயலாகும்.

## வரலாறு

### 1. நண்டு கொக்கைக் கொன்றது

1. மீனொன்றையு மேதின்றுடல் மிகவேவளர் கொக்கு
தானங்கொரு பானண்டுதனைக்கண்டிரை கொள்ள
ஞானந்தரு மோனங்கொடு நண்ணும்படி கண்டப்
பானண்டிதை, 'நீஇங்குறை பண்பேதுரை ?' என்ன ;

2. என்னென்றுரை செய்வேனினி யானெங்ஙன முய்வேன்
கொல்நுந்திய வலைக்காரர்கள் கூடிக்குள மேரி
மன்னுந்தட மெல்லாமிக வளைந்தேவலை வீசிச்
சின்னஞ்சிறு பொடிமீன்முதல் சேரப்பிடித் தாரே !

3. இந்தக்குளம் நாளைக்கென எண்ணிக்கொடு போனார் ;
அந்தப்படி வந்தேபிடித் தவர்காவினி லெடுத்தே
சந்தக்கடை தொறுமீன்கடை தானேஎன விற்பார்
எந்தப்படி இவர்தப்புவ தெனவெண்ணி யிருந்தேன்.

4. 'அந்தப்பழி காரர்வரும் முனமேயொ ருபாயம்
சிந்தித்தனன் நானப்படிச் செய்தாலவை உய்யும்
எந்தப்படி யானும்மழைத் திங்கேவரு வாயேல்
இந்தக் குளம் விட்டோர்குளம் எய்தும்படி செய்வேன்.'

5. என்றேபக ராசன்சொல இயல்நண்டதை நம்பிச்
சென்றேபல மீனோடுறை செயவேஅவை கூடி
'நன்றேஎன வரஒவ்வொரு நடைக்கொன்றுகொண் டேகிக்
கொன்றேசில தின்றேசில கொடும்பாறையி லுலர்த்தி.'

6. அலவன்தசை தனையுண்டிட அதையுங்கொடு செலஅந்
நிலமெங்கணும் மீனென்புகள் நிறைகொண்டது கண்டே
நலதிங்கிது பலமீனையும் நனிதின்றது நமையும்
கொலவந்தது ; நாமும்இது கொலுமுன்கொலு வோமே.

7. 'நம்மால்வரும் பிழையேயிது, நாமும்அந்த மீன்போல்
சும்மாவிருந் தனமேற்கொலும் இதிலேயொரு சூழ்ச்சி
எம்மால்வகை வருமாறினிச் செய்வேன்'என எண்ணி
அம்மாபகன் கழுத்தைக்கவை அடியால்நெருக் கியதே.

8. நெருக்குண்டற வீழ்ந்தேபகம் நீங்கிற்றுயிர்; அலவன்
இருக்குந்தலம் ஏகித்தன தினத்தோடிருந் ததுவே;
செருக்கும்பகை பெரிதாகிலும் சிலதந்திர வகையால்
முருக்கும்படி நினைத்தாலதின் முடியாதது முளதோ?

பஞ்சதந்திரப் பாடல்] —வீரமார்த்தாண்டதேவர்

1. ஒருபால்-ஒரு பக்கம். இரை-உணவு. மோனம்-மௌனம், பேசாமலிருத்தல். கொடு-கொண்டு. நண்ணும்படி-அடையும்படி. இங்குறை-இங்கு வசிக்கும். பண்பு-தன்மை. ஏது-என்ன காரணம்.

2. உய்வேன்-பிழைப்பேன். கொல் நுந்திய-கொலைத் தொழிலை மேற்கொண்ட. மன்னும்-நிலைத்த. தடம்-குளம்.

3. காவினில்-கூடையில். எந்தப்படி-எவ்விதம். இவர் தப்புவது-இவரிடமிருந்து தப்பிப் பிழைப்பது.

4. பழிகாரர்-பாவச் செயலைப் புரிவோர். உபாயம்-தந்திரம். சிந்தித்தனன்-நினைத்தேன். எய்தும்படி-அடையும்படி. எந்தப் படியானும்-எவ்வழியினாலாயினும்.

5. பகராசன்-கொக்குகளுக்கு அரசன். இயல்நண்டு-நற்குணமுடைய நண்டு.

6. அலவன்-நண்டு. தசை-மாமிசம். மீன் என்புகள்-மீனின் எலும்புகள். நிறை கொண்டது-நிறைந்திருப்பது. நனி-மிகுதியும்.

7. சூழ்ச்சி-தந்திரம். அம்மா பகன்-அந்தப் பெரிய கொக்கின். கவை அடி-பிளந்த பாதம்.

8. பகம்-கொக்கு. இனம்-சுற்றம். செருக்கும் பகை-போரிடும் பகைவர். முருக்கும்படி-அழியும்படி.

## 2. மைனாவும் முயலும் மோசம் போன கதை

### காகம் சொல்வது

பாவிகள் மோனர் போலும்
பலவிர தியர்கள் போலும்
ஓவறு சகாயர் போலும்
உறமுறைச் சுற்றம் போலும்
மேவுவர் அவரைச் சேரின்
மேன்மைய ரேனும் உய்யார்
பூவையும் முயலும் முன்னோர்
பூனையைச் சேர்ந்த வாறே. 1.

என்னஅக் கதையே தென்றே
இனப்பற வைகள்வி னவ

முன்னமோர் மரத்தின் மேலே
முயங்கிநான் இருக்கும் போது
தன்னிக ரின்றி வாழுந்
தனிமுயல் ஒன்று வந்தே
உன்னுமோர் பொந்திற் சேர்ந்தங்
குட்புகுந் திருந்த தன்றே. 2.

பூவையொன் றங்கு வந்திப்
பொந்துநான் இருக்கும் வீடு
நீவரு வானேன் என்ன
நிழலொடு தருக்கள் சாலே
வாவிநற் கூபம் செல்லும்
வழியினில் தண்ணீர்ப் பந்தல்
சாவடி இவைக ளெல்லாம்
சகலர்க்கும் பொதுவே என்ன. 3.

ஆங்கவை இரண்டும் சண்டை
ஆகிப்பின் மத்தி யஸ்தர்
தங்களைக் கேட்போம் என்று
தனிமுயல் அழைத்துப் போக
இங்குநாம் வழக்கா வந்தோம்
இருதலை வழக்குந் தீர்க்குந்
துங்கர்ஆர் என்று பூவை
சொல்லவே முயலும் சொல்லும். 4.

கருதிய யமுனை யாற்றங்
கரையிலே தவத்தைப் பண்ணும்
பொருவில்கூர்ம் பல்லன் என்னும்
பூனையார் சொல்வார் என்ன
வெருவியே பூனை பக்கல்
மேவிநாம் செல்வ தெவ்வா
றுரைஎனத் தூர நின்றே
உரைப்பம்என் றழைத்துப் போக. 5.

இருவரும் போனார் அந்த
இருடியார் தவத்தைக் கண்டார்
பெரியவர் இவர்தாம் நம்மைப்
பிடிப்பதும் செய்யார் என்று

கருதினர் பணிந்தெ ழுந்தார்
கைகளுங் கட்டி நின்று
பரவினர் யோகம் நீங்கிப்
பார்த்தனர் பூனை யாரும். 6.

ஆரெவர் நீங்கள் நம்மை
அறிந்துநீர் இங்கு வந்த
காரியம் சொல்லும் என்று
கபடனர் உரைக்கத் தங்கள்
பேரொடு வழக்குஞ் சொல்லப்
பெருகிய மூப்பி னாலே
நீருரைப் பதுகே ளாது
நெருங்கிவந் துரைக்க என்ன. 7.

சற்றிடங் கிட்டி வந்து
சாற்றஇம் மாற்றம் காதில்
உற்றது போலும் பாதி
உருதது போலுங் கேட்டோம்
மற்றினிப் பட்ச பாத
வழக்குநாம் உரைப்ப தில்லை
குற்றமிங் கொருவர் மீதிற்
கூறிடிற் கோப மாமே. 8.

தருமமே விரும்பு வாரைத்
தருமமே விரும்பிக் காக்கும்;
தருமமே இகழு வாரைத்
தருமமே இகழ்ந்து நிற்கும்;
தருமமே மெய்யாய் நின்று
சகலமும் செய்த லாலே
தருமமே சொல்வ தல்லாற்
சற்றும்நாம் பொய்சொல் லோமே. 9.

எண்ணிய விரத மெல்லாம்
இயற்றினம்; இவைக்கு மேலாம்
புண்ணிய விரத மென்னும்
பொய்சொலா விரதம் ஒன்றும்;
நண்ணிய வுயிரைக் கொல்லா
நலந்தரு விரதம் ஒன்றும்;

மண்ணினில் அனுட்டிப் போம்நாம்
　　வழக்கிலோ ரஞ்சொ லோமே. 10.

கிட்டநீர் வந்து சொன்னால்
　　கேட்குநம் காது நம்மை
விட்டுநீர் தூர நின்று
　　விளம்பினால் கேளா தென்று
துட்டனார் மாரீ சத்தால்
　　துலங்குகூர்ம் பல்லன் என்பேர்
இட்டமார்ச் சாலன் சொல்ல
　　இவைதம துளத்தில் எண்ணி. 11.

மெய்கள்போற் சொன்ன எல்லாம்
　　விசுவசித் திரண்டும் செல்லக்
கைகளாற் பிடித்துக் கண்டம்
　　கடித்திரத் தங்கு டித்தே
செய்கப டான பூனை
　　செருக்கியங் கிருக்கச் சேர்ந்த
மொய்சிறைப் பூவை யோடே
　　முயலுமங் கிறந்த அன்றே. 12.

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்ட தேவர்

*1.* பாவியர்-பாவ காரியங்களைச் செய்வோர், மோனர்-மௌனமாயிருப்பவர். விரதியர்-விரதங்களைச் செய்பவர். ஓவு அறு-ஒளிதலில்லாத. சகாயர்-உதவி செய்வோர். உறமுறைச் சுற்றம் போலும்-உறவினராய்ச் சூழ்ந்திருப்பவர் போலவும். மேவுவர்-அடைவர். உய்யார்-பிழைக்க மாட்டார். பூவை-மைனாப் பறவை.

*2.* முயங்கி-ஒடுங்கி. நிகர்-ஒப்பு.

*3.* தருக்கள்-மரங்கள். வாவி-குளம். கூபம்-கிணறு. சாவடி-வழிப்போக்கர் தங்குமிடம். சகலர்க்கும்-யாவர்க்கும்.

*4.* மத்தியஸ்தர்-நடுநிலைக்காரர், இருதலை-இரு கட்சியாளர். துங்கர்-தூயவர். ஆர்-யார்?

*5* வெருவி-அஞ்சி.

*6.* இருடி-ரிஷி. யோகம்-தவம் செய்தல்.

*7.* கபடனார்-வஞ்சகத்தன்மையுடையவர். பெருகிய மூப்பு-முதிர்ந்த முதுமை.

*8.* சாற்ற-சொல்ல. மாற்றம்-சொற்கள். உற்றது-கேட்டது. பட்சபாதம்-ஒருவர் பக்கமாகச் சார்ந்து பேசுதல்; ஓரம் சொல்லுதல்.

*9.* இகழ்தல்-அவமதித்தல். சகலமும்-எல்லாம்.

*10.* தண்ணிய-அடைந்த. நலம்தரு-நன்மை தரும். அனுட்டித்தல்-செய்து வருதல். ஓரம் சொலோம்-ஒருவர் பக்கமாக நின்று பேசமாட்டோம்.

*11.* விளம்பிறல்-சொன்னால். துட்டன்-கெட்டவன். மாரீசம்-வஞ்சகம். துலங்கு-விளங்குகிற. இட்டமார்ச்சாலன்-விருப்பமான பூனை.

*12.* விசுவசித்து-நம்பி. கண்டம்-கழுத்து. செருக்கு-கர்வங் கொண்டு. மொய்சிறை-நெருங்கிய சிறகுகளையுடைய.

## 3. வேடன் கதை

1. வனமொன்றி லொருவேடன் வளர்குருவிக் கூட்டினொடும்
இனமொன்று வேட்டைகரு விகளுமெடுத் தேதிரியக்
கனமிருண்டு மழைபெய்யக் காற்றெழும்ப வவனடுங்கி
மனமருண்டோர் மரத்தின்கீழ் வந்திருந்தா னப்போது.

2. தங்குமதன் மேலிருந்த புறுவொன்று தன்பேட்டை
எங்ககன்ற தோவனத்தில் யாரேனும் பிடித்தாரோ
மங்கியதோ வெனப்புகல வதுகேட்டு வனசரன்றன்
அங்கையுறு கூட்டினுற்ற பெண்புறு வழுதுசொல்லும்.

3. முன்வினையா லிதுபெற்றே னுயினுநின் முனமடைந்த
இன்னவனுக் குபசாரம் புரியெனலு மெரிகொளுவி
அன்னவனை யழைத்துடலின் குளிர்போக்கி யாகாரம்
என்னைநீ யருந்தென்று வீழ்ந்திறக்க விவனேக்கி.

4. அன்பினு னம்பொருட்டு வீழ்ந்தவிதை யருந்தியிடில்
துன்பம்வரு மெனப்பேட்டை விடுத்திடலும் சூழ்ந்ததுவும்
தன்புருடன் பிரிவதனுல் வீழ்ந்திறக்கத் தகுமிரண்டும்
இன்பமுறு தெய்வவுரு வெய்திவா னுலகடைந்த.

5. இரக்கமொடு வேடுவனு மெரிவீழ்ந்து கதியடைந்தான்
தரைக்குளுளந் தளர்ந்துசர ணுர்த்தியென்று சார்ந்தார்க்கும்
புரக்கவருள் செயின்தாமே பொன்றவரி னும்வருமென்(று)
உரைத்துப்பொன் னெச்சமிடும் பறவைகதை யோதுமால்.

பஞ்சதந்திரப் பாடல்] [வீரமார்த்தாண்டதேவர்

*1.* வனம்-காடு. கனம்-மேகம். மருண்டு-மயங்கி.

*2.* பேடு-பெண் பறவை. மங்கியதோ-இறந்ததோ. வனசரன்-வேடன்; காட்டில் சஞ்சரிப்பவன். அம்கைஉறு-உள்ளங்கையிலிருந்த. கூட்டின் உற்ற-கூட்டிற்குள் இருந்த.

*3.* முன்வினை-முன்பிறவியிற் செய்த தீவினை. நின்முனம்-உன்முன்பு. இன்னவனுக்கு-இவனுக்கு. உபசாரம் புரி-நன்மையைச் செய், எரிகொளுவி-தீயுண்டாக்கி. அருந்து-உண்.

4. தெய்வஉரு-தெய்வவடிவம். வானுலகு-தேவலோகம்

5. எரிவிழ்ந்து-நெருப்பில் விழுந்து. கதி-மோக்ஷம். சரண் ஆர்த்தி-அடைக்கலம் காப்பாற்றுக. சார்ந்தார்-அடைந்தவர். புரக்க-காப்பாற்ற. அருள் செயின்-கருணை செய்தால். பொன்றவரினும் வரும்-இறக்கும்படி வந்தாலும் வரும். ஓதுவம்-சொல்வோம்.

## 4. புத்தர் தாயைத் தேற்றல்

**[புத்தர் நதிக்கரையில் அமர்ந்திருத்தல்]**

1. மூடமான இளமறியை முதுகி லேந்தி
மூவுலகும் கருணையினல் வென்ற வீரன்
திடமாகப் பல உயிரும் அளிக்குஞ் சோணைத்
தெய்வ நதிக் கரைவந்து சேர்ந்த போது.

**[தாய் கூறுதல்]**

2. மானைப் பழித்த விழியுடையாள்—ஒரு
மாமயில் போலும் நடையுடையாள்
தேனைப் பழித்த மொழியுடையாள்—பெண்ணின்
தெய்வ மெனத்தகும் சீருடையாள்.



3. ஆருகக் கண்ணீர் வடித்துநின்ருள்—கையில்
ஆண்மக வொன்றையும் ஏந்திநின்ருள்
தேருத உள்ளமும் தேற்றுவிக்கும்—ஞான
தேசிகன் சேவடி போற்றிநின்ருள்.

4. சிரித்தமுக மெனமலர்ந்து செழித்தசெடி நடுவே
   சிறுமகனும் விளையாடித் திரிந்திடு மவ்வேளை
விரித்தபட மெடுத்(து), அரவொன்(று) அடுத்தொருகை பற்றி
   விளங்குமணிக் கடகமென வளைந்துகிடந் ததுவே.

5. பால்மணமா றாதசிறு பாலகனு மறியான்
   படவரவை விளையாட்டுப் பண்டமெனக் கொண்டான்
வாலினையும் தலையினையும் வயிற்றினையும் வலித்து
   வருத்தமெழச் சிறுகுறும்பு செய்துவிட்டான் ஐயோ ?

6. கண்டாரில் மிக்கவுளக் கனிவுடையார் ஒருவர்
   காரிகையே ! மலைமீது காவியுடை அணிந்து
மூண்டிதமா யலையுமொரு முனிவரடி பணிந்தால்
   முடியாத காரியமும் முடியுமென உரைத்தார்.

7. காடும் மலையுங் கடந்துவந்தேன்—உன்னைக்
   கண்டு துயரெலாம் போக்கவந்தேன்
வாடு மலர்ச்செண்டு போல்கிடக்கும்—இந்த
   மைந்தன் உயிரெழச் செய்யுமையா ?

8. பெற்ற வயிறு துடிக்குதையா—ஒரு
   பிள்ளையும் வேறெனக் கில்லையையா !
உற்ற உறவினர் இல்லையையா—என் மீது
   உள்ளம் இரங்கிட வேணுமையா ?

[புத்தர் கூறுதல்]

9. தாயே! நின் மனக்கவலை—ஒழிந்திடத்
   தக்கநல் மருந்தளிப்பேன்
சேயினை எழுப்பிடுவேன்—விளையாடித்
   திரியவும் செய்திடுவேன்.

10. நாவிய கடுகு வேண்டும்—அதுவுமோர்
   நாவுரி தானும் வேண்டும்
சாவினை அறியாத—வீட்டினில்
   தந்ததா யிருக்க வேண்டும்.

11. பக்கமாம் பதிகளிலே—சென்றுநீ
   பார்த்திது வாங்கி வந்தால்
துக்கமும் அகலுமம்மா—குழந்தையும்
   சுகமாக வாழு மம்மா.

**[தாய், ஊரெங்கும் தேடி அலைந்து வெறுங் கையொடு மீளல்]**

12. புவியெலாம் நிறைந்த புகழோய்! புலவர்
கவியெலாம் நிறைந்த கருணையங் கடலே!
ஊரெலாம் அலைந்தேன்; ஒவ்வொரு மனையும்
ஏறி இறங்கினேன்; என்குறை உரைத்தேன்;
ஏழை ஒருமகன்—
இட்ட கடுகை ஏற்பதன் முன்னம்,
தாயே நீவிர் தங்கும் மனையிது
சாவறி யாத தனிமனை தானோ?
தந்தை தாயர் தமக்கை தங்கை
மைந்தர் எவரும் மரித்ததும் உண்டோ?
உரைத்திடும் என்றேன்; உரைகேட் டவரும்
* * * * *
இவள், கணவனை இழந்த கைம்பெண் அம்மா!
இவள், மைந்தனை இழந்த வறியவள் அம்மா!
இவள், தமையனை இழந்த தங்கை அம்மா!
இவள், மாமனை இழந்த மருகி அம்மா!
இவள், அன்னையை இழந்த அகதி அம்மா!
இறந்தவர் எண்ணிலர்; இருப்பவர் சிலரே.
பிறந்தவர் இறப்பதும், இறந்தவர் பிறப்பதும்
உலகி னியற்கை; ஒழித்தலும் எளிதோ?
* * * * *
மற்றொரு வீட்டின் வாயிலிற் சென்றேன்
கடுகினை அளந்து கட்டிவைத்து, "அம்மா,
உழுதவர் இந்நாள் உலகில் இல்லை.
விதைத்தவர் அன்றே விண்ணுல கெய்தினர்.
காத்தவர் காலமுங் கழிந்து விட்டது.
அடிமையும் இறந்துநாள் ஐந்தா றுகுது.
காலனை எவரே கடக்க வல்லார்"
என்று கூறினர்; என்செய, ஐயா!

13. "ஐயமிடு மனைகளிலே மரண மென்றும்
அறியாத மனையேதும் இல்லைஇல்லை
வையகத்தில் பிறப்புளதேல் இறப்பு முண்டு
மாற்றரிய விதியிதுவென்று உணர்ந்துகொண்டேன்;
கையமர்ந்த மகவினையும் கானி விட்டேன்
கண்விழியாப் பிணம்வைத்துக் காப்பதுண்டோ?

செய்யதிரு வடிபணிந்து போற்றி இந்தச்
செய்தியினைத் தெரிவிக்க வந்தேன்,'' என்றாள்.

ஆசியஜோதி] —சி. தேசிகவிநாயகம் பிள்ளை

*1.* முடம்-நொண்டி. மறி-ஆட்டுக்குட்டி. மூவுலகும்-பூமி, சுவர்க்கம், பாதாளம். வீரன்-புத்தர் பெருமான். திடமாக-உறுதியாக.

*2.* மானைப் பழித்த விழி-மான் கண் போன்ற மருண்ட கண். தேனைப் பழித்த மொழி-தேனைப் போல இனிமையான மொழி. சீர்-பெருமை.

*3.* ஆறாக-ஆறு போல. மகவு-குழந்தை. தேறாத-தேற்ற முடியாத. உள்ளம்-மனம். தேசிகன்-குரு. சேவடி-செம்மையான பாதம். போற்றி-வணங்கி.

*4.* அரவு-பாம்பு. மணிக்கடகம்-ரத்தினக் (வளையல்) காப்பு.

*5.* பால் மணம் மாறாத-பாலின் வாசனை வாயினின்றும் நீங்காத. பட அரவு-படத்தை உடைய பாம்பு. பண்டம்-பொருள். வலித்து-இறுக்கி இழுத்து. சிறு குறும்பு-பிள்ளையின் துட்ட விளையாட்டு.

*6.* கனிவு-இரக்கம். காரிகையே-பெண்ணே. காவியுடை-துறவிகள் அணியும் உடை. முண்டிதம்-மொட்டைத் தலை.

*7.* மலர்ச் செண்டு-மலர்களைத் தொடுத்து வைத்த பந்து.

*8.* சேய்-குழந்தை.

*9.* நாவிய-கொழுத்த. நாவுரி-அளவுப் பெயர் (ஆழாக்கு என்பது போல). சாவு-இறத்தல்.

*10.* பதி-நகர்.

*11.* புவி-பூமி. மரித்தது-இறந்தது. கைம்பெண்-விதவை, அகதி-திக்கற்றவள். எளிதோ-எளிதன்று. விண்ணுலகு-தேவலோகம். காலன்-இயமன். கடக்க வல்லார்-வெல்லவல்லவர்.

*12.* ஐயம்-பிச்சை. மனை-வீடு. மரணம்-சாவு. வையகம்-பூமி. மாற்றரிய-மாற்ற முடியாத. கையமர்ந்த-கையிலிருந்த. கானிலிட்டேன்-சுடுகாட்டில் வைத்தேன். (அடக்கம் செய்தேன்) பிணத்தைக் காப்பாற்றுவார் இல்லை. செய்ய-சிவந்த. திருவடி-அழகியபாதம். செய்தி-விஷயம்.

# IV. வருணனை

## 1. வெண்ணிலா

1. மீன்கள்கோடி கோடிசூழ வெண்ணிலாவே !—ஒரு
வெள்ளியோடம் போலவரும் வெண்ணிலாவே !

2. பானுவெங் கதிர்குளிக்கும் வெண்ணிலாவே !—நித்தம்
பாற்கடலும் ஆடுவையோ வெண்ணிலாவே !

3. ஆம்பல்களி கூரவரும் வெண்ணிலாவே !—உனக்(கு)
அம்புயம்செய் தீங்கெதுவோ வெண்ணிலாவே !

4. இரவையும் பகலாக்கும் வெண்ணிலாவே !—உன்னை
இராகுவும் விழுங்கிடுமோ வெண்ணிலாவே !

5. வளர்ந்து வளர்ந்துவந்த வெண்ணிலாவே !—மீண்டும்
வாடி வாடிப் போவதேனோ வெண்ணிலாவே !

6. கூகைஆந்தை போலநீயும் வெண்ணிலாவே !—பகல்
கூட்டினில் உறங்குவாயோ வெண்ணிலாவே !

7. பந்தடிப்போம் உன்னையென்று வெண்ணிலாவே !—நீயும்
பாரில்வர அஞ்சினையோ வெண்ணிலாவே !

8. பளிங்குபோலு முன்னுருவில் வெண்ணிலாவே !—கறை
பற்றியே இருப்பதேனோ வெண்ணிலாவே !

9. பூமியின் உருநிழலோ வெண்ணிலாவே !—அது
போகாக் குறுமுயலோ வெண்ணிலாவே!

10. குன்றும் குகைகளுமோ வெண்ணிலாவே !—அன்றிக்
கூனக் கிழவிதானோ வெண்ணிலாவே !

11. ஆழியும் நீ வரக்கண்டு வெண்ணிலாவே !—குதித்(து)
ஆடுவதெக் காரணமோ வெண்ணிலாவே !

12. ஆதாரம் ஒன்றில்லாமல் வெண்ணிலாவே !—நீயும்
அந்தரத்தில் நிற்பதேனோ வெண்ணிலாவே !

13. துன்பமிகத் தானடைந்தும் வெண்ணிலாவே !—பிறர்க்குச்
சுகமளிப்பார் உன்போலுண்டோ வெண்ணிலாவே !

14. இருளதனை விழுங்கவல்ல வெண்ணிலாவே!—உன்னை
இருள்விழுங்கும் சூழ்ச்சியெதோ வெண்ணிலாவே!

மலரும் மாலையும்] [—சி. தேசிக விநாயகம் பிள்ளை

வெண்ணிலா-வெண்மையான நிலவினைப் பொழியும் சந்திரன்.

1. மீன்கள்-நட்சத்திரங்கள்.

2. பானு-சூரியன். வெங்கதிர்-வெப்பமான சூரியகிரணம் (வெயில்). நித்தம்-தினமும். ஆடுதல்-நீராடல், மூழ்குதல்,

3. ஆம்பல்ஒரு-மலர். களிகூர-மகிழ்ச்சிமிக அம்புயம்-தாமரை. சந்திரன், தோன்ற ஆம்பல் மலரும், தாமரை குவியும். சூரியன் வரவால் தாமரை மலரும். ஆம்பல் குவியும் என்பனவறிக.

4. இராகுவும் விழுங்குதல்-சந்திரக் கிரகணம்.

5. வளர்ந்து வளர்ந்து வருதல்-வளர்பிறை. வாடி வாடிப் போதல்-தேய் பிறை.

6. கூகை-ஒருவகைப் பறவை, கோட்டான் என்றும் கூறுவர். உறங்கு வாயோ-தூங்குவாயோ.

7. பார்-பூமி.

8. பளிங்கு-கண்ணாடி. கறை-களங்கம்.

9. உருநிழல்-பிரதிபிம்பம். சந்திரகளங்கத்தைக் குறுமுயல் என்றும், மான் என்றும், கிழவி என்றும் கூறுதல் மரபு.

10. கூன்+அ-கூன. முதுகு வளைந்த.

11. ஆழி-கடல். 'தண்ணென் கதிர்வரவால் பொங்குங்கடல்' என்பது காண்க.

12. ஆதாரம்-பிடிப்பு, பற்றுக்கோடு. அந்தரம்-ஆகாயம்.

13. "தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்-திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது உலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று" என்ற செய்யுளையும் காண்க.

14. சந்திரன் தோன்ற இருள் அகலும். இருள் விழுங்கும்-கிரகணம். சூழ்ச்சி-தந்திரம், உபாயம்.

## 2. மழை

### மழைக் குறி

1. ஆற்றுவெள்ளம் நாளைவரத் தோற்றுதே குறி—மலை
யாளமின்னல்—ஈழமின்னல் சூழமின்னுதே.
நேற்றுமின்றும் கொம்புசுற்றிக் காற்றடிக்குதே—கேணி
நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே.
சேற்றுநண்டு சேற்றில்வளை ஏற்றடைக்குதே—மழை
தேடியொரு கோடிவானம் பாடியாடுதே.

போற்றுதிரு மாலழகர்க்(கு) ஏற்றமாம்பண்ணைச்—சேரிப்
புள்ளிப்பள்ளர் ஆடிப்பாடித் துள்ளிக்கொள்வோமே.

2. இக்கரைக்கா விற்பொருநை அக்கரைக்காலின்—மழைக்(கு)
ஏமமின்றிச் சாமமின்றி நாமல்லோ போவோம்.
தக்கதோணி யைத்துறையிற் சிக்கெனக்கட்டும்—படல்
தாழைக்குடைக் கொங்கணியும் வேளைக்கே வேண்டும்.
பக்கமேயுஞ் சூழ்கம்புஞ் சுருக்கவாங்கிடும்—சீலைப்
பந்தமும் விளக்கெண்ணெயும் முந்தவே தேடும்.
முக்கூடல் அழகர்பண்ணை மிக்க சேரியில்—பள்ளர்
முழுதுங் குரவையிட்டே எழுவோமடா!

### மழை பெய்தல்

3. காவுக்கிறைவ ஞகும்இந்திரன்
ஏவற்பணிகொண் டெழுந்தகார்
கடலிற் படிந்து திருவிற்கோட்டி
அடல்முக் கூடல் அரியுமாய்ப்
பூவுக்குயர்ந்த கலைமின்னோடு
மேவிக்கமலத்து அயனுமாய்ப்
புனலைத்தரித்து வரையிலேறிக்
கனலைத்தரித்த சிவனுமாய்த்
தாவிப்பறந்து பணிகள்பதுங்கக்
கோவித்தெழுந்த கருடனும்
தானேயாகி உலகுக்குரிமை
ஊனேயாகி உயிருமாய்க்
கோவிற்பெரிய வடமலேந்திரன்
மாவிற்கறுத்துப் பொழிந்தபின்
குளிருகின்றது கோன்கழுத்தினில்
வெளிறுகின்றது வானமே.

## 3. பண்ணைக்காரன் தோற்றம்

4. மாறுகண்ணும் பருத்திப்பைக்
கூறை வயிறும்—கீரை
மத்துப்போல் தலையும் சுரை
வித்துப் போல்பல்லும்
நீறுபோல் எழுந்தழுளை
ஊறு நாசியும்—தட்டி

நெரித்தமாங் கொட்டைபோல் ஈ
அரித்த வாயும்
தாறுமாறாய் மீசையில்அஞ்
சாறுமயிரும் — தூங்கற்
சண்ணைக்கடாப் போல்நடையும்
மொண்ணை முகமும்
வேறுகீறி ஒட்டவைத்த
ஏறுகாதுமாய்—நேமி
வீரனார்முக் கூடல்பண்ணைக்
காரனார் வந்தார்.

—முக்கூடற்பள்ளு

*1-2.* வளை ஏற்றடைதல்-வளை தோண்டுதல். புள்ளிப் பள்ளர்-சிறந்த பள்ளர். ஏமம்-பாதுகாப்பு. சாமம்-இரவு. கொங்கணி-மழையைத் தாங்கத் தலையில் கவிக்கும் சம்பங்கூடை. கம்பு-கொம்பு, இஃது இருளில் வழி தடவிப் பார்த்துச் செல்ல உதவும். சிலைப்பந்தம் முதலியன இருளில் வெளிச்சங் காட்டுதற்கு என்க. குரவை-ஒருவகைக் கூத்து.

*3.* காவுக்கு இறைவன்-மருத நிலத்திற்கும் (கற்பகச் சோலைக்கும்) தலைவனான இந்திரன்; மேகங்களுக்குத் தலைவன். திருவில் கோட்டி-வானவில்லை ஆகாயத்தில் வளைத்து. கடலில் படிந்தமையாலும், வில்லை வளைத்தமையாலும் மேகம் அரி (திருமால்) ஆயிற்று. கலைமின்-சரஸ்வதி. மின்-மின்னல். கலைமின்னொடு பொருந்தியதால் மேகம் அயன் (பிரமன்) ஆயிற்று. (கலை-ஒளி, கல்வி). புனலைத் தரித்து-கங்கையைத் தரித்து, வரை ஏறி-கயிலை மலையில் ஏறி. புனலைத் தரித்தமையாலும், வரைமேலேறியமையாலும் மேகம் சிவனை ஒத்தது. பணிகள்-பாம்புகள். பாம்புகள் பதுங்கும்படியாக இடித்து எழுந்தமையால் மேகம் கருடனையும் ஒத்தது. "விரிதிற நாகம் விடருள தேனும் உருமின் சேட்சினமுண்ணின்று முட்கும்" என்பதறிக. வடமலேந்திரன்: பிரபு. மா-குதிரை. கறுத்து கோபித்து. வெளிறுகின்றது-மழை பெய்தலின் வானம் களங்கமின்றிப் பிரகாசிக்கின்றது.

*4.* சண்ணை-தின்று கொழுத்த கடா. ஏறுகாது-சமமில்லாத காதுகள். நேமி வீரனார்-சக்கராயுதத்தையுடைய திருமால்.

## 4. வறண்ட வானம்

1. காரே!உன் நீரையெல்லாங் கள்வன் கவர்ந்தானோ?
நீரே உதவாய் நெறியாமோ?—நேரேதான்
வாரியுண்டு, வாரிமொண்டு, வாரியுண்டு வானிருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய்.

2. செல்லென்(று) உன் நாமத்தைச் செப்பினதே அல்லாது
'செல்' என்(று) உனைநாங்கள் செப்பினமோ?—வல்லென்று
மெய்யா உவமிக்க விண்மீது தோன்றியநீ
பெய்யாமற் போனதென்னோ பேசு.

3. 'செய்வேன்' எனச்சொல்லிச் செய்யா உலோபரைப்போல்
'பெய்வேன்' எனக்காட்டிப் பேர்முகிலே !—மைவானில்
ஓடுவாய், நிற்பாய் உருமுவாய், மின்னுவாய்
நீடுவாய், பின்பெய்யாய் நின்று.

4. வேண்டுங்கால் நீபெய்யாய் ; வேண்டாத போதுபெய்வாய்
தாண்டுநீ செய்வதெல்லாம் தப்புகளே—நீண்டுலவும்
வட்டமுகி லே!உனக்கு மாசுஎனப்பேர் தந்தோர்க்குப்
பட்டமது கட்டுவேன் பார்.

5. மையே ! எமைமுன் வளர்த்தநீ கைவிட்டால்
ஐயே ! இனிஎமையார் ஆதரிப்பார்—பெய்யே
கடகட வென்றுங் களகள வென்றுஞ்
சடசட வென்றுநீ தான்.

—**வேதநாயகம் பிள்ளை.**

1. காரே-மேகமே. நெறியாமோ-நீதி வழியாகுமோ ? வாரி-கடல், நீர் நிலை, முகந்து. பேரி-பேரிகை, பறை.

2. செல்-மேகம், போ என் ஏவல். வல்என்று-வலிமை என்று.

3. உலோபர்-ஈயாதவர். பேர்-பெரிய, நகர்கின்ற. முகில்-மேகம். மைவான்-கரிய வானில். நீடுவாய்-நீண்டதூரம் செல்வாய்.

4. மாசு-குற்றம், மேகம். தாண்டு-கபடச்செயல்.

5. மையே-கருநிறமுடைய மேகமே. ஐயே-இழிவு குறித்து வந்த இடைச்சொல். கடகட, களகள, தடதட-இரட்டைக் கிளவிகள் ; ஒலிக்குறிப்பு.

## 5. குறத்தி குறி சொல்லல்

1. குங்குமஞ்சந் தனக்குழம்பிற் குழைத்துத்தரை மெழுகிக்
கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையுங் காட்டிச்
செங்கனக நவமணிகள் திசைநான்கும் பரப்பித்
தென்மேலை மூலைதனில் பிள்ளையார் வைத்துப்
பொங்குநறு மலரறுகோ டைங்கரர்க்குச் சாத்திப்
புழுநெய்வார்த் திடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக் கரசியெங்க ளங்கயற்கண் ணமுதை
மனத்துள்வைத்து நினைத்தகுறி யினிச்சொலக்கே ளம்மே.

2. முந்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லை முன்னேவை அம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
யிரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே

உன்னுமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந் துதித்தார்
உனக்கினியெண் ணினகரும மிமைப்பினிற்கை கூடும்
என்னுணை யெங்கள்குலக் கன்னிமா ரறிய
வெக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே.

—குமரகுருபர சுவாமிகள்

**குறத்தி-மலை நாட்டுப் பெண். குறவன் ஆண்பால். அவள் சோழி, புலிப்பல், நகம் முதலியவற்றை அணிந்திருப்பாள். குறிபார்த்துச் சொல்லுவாள்.**

**(1) செங்கனகம்-செம்மையான பொன். நவமணி-ஒன்பதுவகை ரத்தினங்கள். முத்து, பவளம், கோமேதகம், புஷ்பராகம், மாணிக்கம், நீலம், வைரம், வைடூரியம், மரகதம். தென்மேலை-தென்மேற்கு. நறு-வாசனை. அறுகு-அறுகம் புல். ஐங்கரர்-பிள்ளையார். புழுகு-புனுகு,வாசனைப் பொருள். நிறைநாழி-நிறைந்ததாகப்படியளவு. அம் கயல் கண் அமுது-அழகிய மீன் போன்ற கண்களை உடையவளான அமுதம் போன்றவள் (மீனுட்சி)**

**(2) முந்நாழி-மூன்றுநாழி. நாழி-படி. சிறங்கை-உள்ளங்கை. முக்கூறு-மூன்று பங்கு. இரட்டைபட-இரண்டிரண்டாக. ஒற்றைபட்டது-ஒன்றுமிஞ்சி நின்றது. உன்னுமுன்-நினைக்குமுன். வேள்விமலை-ஒரு மலைப் பெயர். வந்துதித்தார்-தோன்றினுர். இமைப்பினில்-கண் இமை கொட்டுதற்குள்.**

# V. தேசீயப் பாட்டு

## எங்கள் நாடு

1. மன்னு மிமய மலை எங்கள் மலையே
மாநில மீதது போற்பிறி திலையே!
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரேது வேறே?
பன்னரு முபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே?
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே.
போற்றுவ மிஃதை யெமக்கில்லை யீடே.

2. பாரத வீரர் மலிந்தநன் னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்தபொன் னாடு
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையும் நாடுறு நாடு
பூரண ஞானம் பொலிந்தநன் னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரத நாடு பழம்பெரு நாடே
பாடுவ மிஃதை யெமக்கில்லை ஈடே.

3. இன்னல்வந் துற்றிடும் போததற் கஞ்சோம்
ஏழையராகி யினி மண்ணிற் றுஞ்சோம்
தன்னலம் பேணி யிழிதொழில் புரியோம்
தாய்த்திரு நாடெனி லினிக்கையை விரியோம்
கன்னலுந் தேனும் கனியுமின் பாலும்
கதலியும் செந்நெலும் நல்குமெக் காலும்
உன்னத ஆரிய நாடெங்கள் நாடே
ஓதுவ மிஃதை யெமக்கில்லை யீடே.

—சி. சுப்பிரமணிய பாரதியார்

1. மன்னும்-நிலை பெற்ற. மாநிலம்-பெரிய பூமி. பிறிது-வேறு. பன்னரும்-சொல்ல முடியாத. உபநிட நூல்-வேதங்களை விளக்க எழுந்த நூல், பார்மிசை-பூமி மேல். ஈடு-ஒப்பு.

2. மாரதம்-பெரிய தேர்கள். நாரத கானம்-நாரதரின் சங்கீதம். பூரண ஞானம்-இறைவனை அறியும் முழுமெய்ஞ்ஞானம்.

3. இன்னல்-துன்பம். துஞ்சோம்-இறவோம். தன் நலம் பேணி-தன் நன்மையைக் கருதி. இழிதொழில்-கீழான காரியங்கள். கைவிரித்தல்-இல்லை எனல் அல்லது ஆதரவு விடல். கன்னல்-கரும்பு. கதலி-வாழை.

# VI. தனிப் பாடல்கள்

1. புட்டவல்பட் டாணி பொரிதேங் குழலப்பம்
மட்டவிழுந் தோசை வடையுடனே—சட்டமுடன்
ஓயாமற் சோறுகறி யுண்டையுண்டை யாயடைக்கும்
வாயா நமச்சிவா யா.

2. இங்கிருக்க வென்று லெமனெட்டான் இவ்விடம்விட்
டங்கிருக்க வென்றால் அயனெட்டான்—எங்குவைத்துப்
பேணுவே னிவ்வுடலைப் பித்தா பிறைசூடும்
தாணுவே சொக்கநா தா.

3. சென்னிமலை வேலவர்க்குச் சேர்ந்தகொம்பி ரண்டுண்டு
கன்னிகுற வள்ளிக்குக் காலில்லை—முன்னமே
ஆட்டுக்குக் கொம்பில்லை ஆனைக்குக் காலில்லை
பாட்டுக்கு ளாராய்ந்து பார்.

4. ஓர்தட்டி லேபொன்னும் ஓர்தட்டி லேநெல்லு மொக்கவிற்கும்
கார்தட் டியபஞ்ச காலத்தி லுந்தங்கள் காரியப்பேர்
ஆர்தட்டி னுந்தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு
மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே.

5. தேட்டாளன் காயற் றுரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான்தமிழ் நாவலரை
ஓட்டாண்டி யாக்கி யவர்கடம் வாயில் ஒருபிடிமண்
போட்டான் அவனும் ஒளித்தான் சமாதிக் குழிபுகுந்தே.

6. மூங்கிலிலே யொளித்திருந்தான் முக்கண் சாமி
முதியகடற் போய்ப்படுத்தான் முகுந்த சாமி
தாங்கமலப் பொகுட்டுறைந்தான் தலைநாற் சாமி
தடவரையில் உழன்றுநின்றான் தகப்பன் சாமி
வாங்கியுண்ண வழிகாத்தான் வயிற்றுச் சாமி
வாணருக்கிங் குதவுவரார் மற்றோர் சாமி
ஓங்கியசீர் மயிலையிற்பொன் னப்ப சாமி
உதவியவேங் கடசாமி யுசித வேளே.

7. வில்லா லடிக்கச் செருப்பா லுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பா லடிக்கவிக் காசினியில்

அல்லார் பொழிற்றில்லை யம்பல வாணற்கொ ரன்னைபிதா
இல்லாத தாழ்வல்ல வோஇங்ங னேயெளி தானதுவே.

8. நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல்போல
நாளைக் கிருப்பாயோ நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே இரு.

9. வேயீன்ற முத்தர்தமை வெட்டினு னேஇடையன்
தாயீன்ற மேனி தயங்கவே—பேயாகேள்
எத்தனைநா ளென்றே இடறுவான் பாற்குடத்தை
அத்தனையும் வேண்டுமவர்க் கு.

10. வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கரையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லோர்க்கும் ஒவ்வொன் றெளிது.

1. மட்டு-தேன். அவிழ்தல்-கட்டு அவிழ்ந்து சொரிதல். சட்டமுடன்-நீதியாக; செல்வப் பெருக்குள்ள நமச்சிவாயன் என்பானிடத்தில் புலவர் ஒன்றும் பெருது இகழ்ந்து பாடியது.

2. அயன்-பிரமன். அங்கிருக்க வொட்டான் என்பது வினைப்பயனுல் பிறவி எடுக்க வேண்டுமாதலின். பிறைசூடும் தாணு-சிவன்.

3. சென்னிமலை, வேலவர்-இவற்றில் செ, வே என்பவற்றில் கொம்புகள் (ெ, ே) என்பன உள்ளன. 'வள்ளி' என்ற சொல்லில் கால் (ா) இல்லை. ஆடு, ஆனை என்ற சொற்களில் கொம்பும் காலும் இல்லை.

4. பொன்னும் நெல்லும் சமமாக விற்கும் பஞ்சகாலம். கார்-மேகம். காரியப்பேர்-காரியஸ்தர். தட்டினாலும்-தடுத்தாலும். தட்டு-முட்டுப்பாடு. வரோதயன்-வரத்தினுல் பிறந்தவன்.

5. தேட்டாளன்-முயற்சியால் பொருளைத் திரட்டியவன். காயல்-காயற்பட்டினம். ஓட்டாண்டி-கையில் ஓடு கொண்டு பிச்சை யெடுக்கும் நிலை. சமாதிக் குழி-பிணத்தைப் புதைக்கும் குழி.

6. முக்கண்சாமி-சோமன், சூரியன், அக்கினி என்ற மூன்று கண்களையுடைய சிவன். மூங்கிலில் ஒளித்தது-திருநெல்வேலித்தலத்தில். ('வேய் முத்தர்' என்ற பெயருண்மை அறிக) முதிய கடல்-திருப்பாற் கடல். முகுந்தசாமி-திருமால், (முகுந்தன் திருநாமங்களுள் ஒன்று,) கமலம் பொகுட்டு-தாமரையின் நடுவிடம். தலை நாற்சாமி-பிரமன். (திசைக் கொரு தலையாக நான்கு தலைகளையுடையவன், திசை முகன்) தடவரை-பெரியமலை. தகப்பன்சாமி- தந்தைக்கு உபதேசித்த முருகன் (சாமிநாதன், சிவகுருநாதன்).வயிற்றுச்சாமி-விநாயகர். வாணர்- கவிவாணர். மயிலை-மயிலாப்பூர். பொன்னப்பசாமி மகன் வேங்கடசாமி உசிதவேள்-அழகிய மன்மதன் போன்றவன்.

7. வில்லால் அடிக்க-அருச்சுனன் வில்லால் அடித்தான். செருப்பால் உதைக்க-செருப்பால் உதைத்தவர் கண்ணப்பநாயனர். கல்லால் எறிய-கல்லால் எறிந்தவர் சாக்கியநாயனர். பிரம்பால் அடிக்க-வையை ஆற்றுக் கரையில் அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடித்தான். காசினி-பூமி. அல் ஆர்-இருள் நிறைந்த. பொழில்-சோலை. தில்லையம்பலவாணர்-தில்லையாகிய சிதம்பரத்தில் பொன்னம்பலத்தில் வாழ்பவரான நடராசப் பெருமான். மாதா பிதா-தாய் தந்தை.

8- நீள-நீண்ட காலமாக. உழன்ருய்-வருந்தினுய். நல்குரவு-தரித்திரம். காளத்தி-காளத்தியப்பர் என்னும் வள்ளல். நின்றை-திருநின்றவூர்.

9. வேயின்ற முத்தர்-மூங்கில் பெற்ற முத்தனன சிவன்.(திருநெல்வேலிச் சிவன்) ஈன்ற மேனி-பெற்ற உடல்.'தயங்க-திகைக்க. இடறுவான்-கால் இடறுதல். அத்தனையும்-அவ்வளவும்.

திருநெல்வேலியில் மூங்கிற்பண்ணையின் நடுவேயுள்ள பாறை மார்க்கமாக ஓரிடையன் பாற்குடம் கொண்டுபோகும் பொழுது, தினந்தோறும் அதே இடத்தில் கால் இடறிப் பாற்குடம் கொட்டிவந்ததில் ஐயங்கொண்டு, மூங்கிலை வெட்டிப் பார்க்கும்பொழுது சிவலிங்கம் இருக்கக் கண்டு வணங்கினுன். இக்காரணத்தால் அப்பெருமானுக்கு வேய்முத்தர், விண்டு முத்தர் என்ற பெயர்களுண்டு. வேய், விண்டு-மூங்கில். சிவபெருமானுக்குத் தாய் மூங்கில் என்று கொண்டு 'தாயின்ற மேனி' என்ருர்.

10. வான்குருவி-தூக்கணங்குருவி. தொல்-பழமை. தேன்-தேன்கூடு. சிலம்பி-சிலம்பிக்கூடு. வல்லோம்-திறமை உடையோம். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று எளிதாயிருக்கும்; ஒருவருக்கு எளிதாயிருப்பது மற்ருெருவருக்கு அரிதாயிருக்கும். எனவே, கர்வம் கொள்ளுதல் கூடாதுஎன்பது கருத்து.

# அருஞ்சொல் அகராதி

| | | |
|---|---|---|
| அகத்தூய்மை | - | மனப்பரிசுத்தம் |
| அக நாடு | – | உள் நாடு |
| அம்புவி | – | பூமி |
| அமர | – | உட்கார |
| அயர்வு | – | சோர்வு |
| அயர்ச்சி | – | சோர்வு, தளர்ச்சி |
| அயலார் | – | அந்நியர் |
| அரண் | – | பாதுகாவல், கோட்டை |
| அருந்தி | – | உண்டு |
| அரியணை | – | சிம்மாசனம் |
| அல் | – | இருட்டு |
| அலரி | – | விடிந்து, ஒரு வகைப்பூ, மலர்ந்து |
| அலுவல் | – | வேலை |
| அற்புதம் | – | அதிசயம் |
| அறச் செயல் | – | தருமச் செயல் |
| ஆகமம் | – | ஒருவகை மத நூல் |
| ஆங்காங்கு | – | அவ்வவ்விடங்கள் |
| ஆடம்பரம் | – | டாம்பீகம், ஆரவாரம் |
| ஆண்டு | – | வருஷம் |
| ஆதரவு | – | பற்றுக்கோடு |
| ஆதனம் | – | அமரும் இடம் |
| ஆதாரம் | – | பற்றுக்கோடு, துணை |
| ஆமோதிக்கிறேன் | – | சம்மதிக்கிறேன் |
| ஆலமர் செல்வன் | – | சிவன் |
| ஆழ்ந்தது | – | முழுகிற்று |
| ஆற்றல் | – | வலிமை |
| ஆற்றி | – | செய்து |
| இக்கு | – | கருப்பஞ்சாறு |
| இகல் | – | போர் |
| இங்கிதம் | – | தன்மை |
| இடையூறு | – | துன்பம் |
| இடைவெளி | – | நடுவிடம் |
| இணைத்து | – | சேர்த்து |
| இயங்குதல் | – | நடத்தல் |
| இயல் | – | தன்மை |
| இயலாது | – | முடியாது |
| இயற்றி | – | செய்து |
| இரப்போர் | – | யாசிப்போர் |
| இருதிறத்தார் | – | இருகட்சிக்காரர் |
| இருவகையாலும் | – | இரண்டுவகையினாலும் |
| இரை | – | உணவு |
| இல்லம் | – | வீடு |
| இறுதி | – | முடிவு |
| இன்றியமையாத | – | இல்லாமல் முடியாத |
| இன்னல் | – | துன்பம் |
| ஈச்சரம் | – | சிவன் கோயில் |
| ஈட்டி | – | சேர்த்து |
| ஈந்தனையே | – | கொடுத்தாயே |
| உசாவு | – | விசாரி |
| உட்பிராகாரம் | – | உள்சுற்று வழி |
| உண்டி | – | உணவு |
| உண்கலம் | – | சாப்பிடும் பாத்திரம் |
| உதித்தவர் | – | தோன்றியவர் |
| உபாயம் | – | தந்திரம் |
| உய்க்கும் | – | செலுத்தும் |
| உயிர் நிலை | – | உயிர்க்கு ஆதாரமான இடம் |
| உரையாடல் | – | பேசுதல் |
| உரையற்க | – | சொல்லாதே |
| உல்லாசம் | – | இன்பம் |
| உலோகம் | – | பொன், வெள்ளி போன்றவை |
| உலோபம் | – | ஈயாத தன்மை |
| உவகை | – | மகிழ்ச்சி |
| உவப்பித்து | – | மகிழச் செய்து |
| உள்ளும்புறம்பும் | – | மனத்திலும் வெளியிலும் |
| உறை | – | தங்கு, வசி |

ஊதியம் – லாபம்
ஊர்தி – வாகனம்
ஊழ்வலி – விதியின் வலிமை
ஊன் – மாமிசம்
எத்துணை – எவ்வளவு
எய்துபவன் – அடைபவன்
எழில் – அழகு
ஏவல் – கட்டளை
ஐம்புலன் – மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.
ஐயம் – சந்தேகம், பிச்சை
ஐயப்பாடு – சந்தேகித்தல்
ஐயுற்றனர் – சந்தேகித்தனர்
ஒளிகுன்றி – பிரகாசம் குறைந்து
ஒற்றர் – தூதுவர்
கட்டணம் – ஏற்படுத்தும் வரித் தொகை
கடிந்து – கோபித்து
கண்ணோட்டம் – தாட்சணியம்
கணிதம் – கணக்கு
கபடம் – வஞ்சகம்
கருமி – உலோபி
கலை – இசை, சித்திரம் போன்ற கல்வி
கவளி – புத்தகப்பை
கவனம் – எச்சரிக்கை
கழி – நீக்கு, கோல், உப்பங்கழி
கற்பனை – மனத்தால் சிந்தித்தல்
கன்னல் – கரும்பு
காருகவினை – வீட்டிலிருந்து செய்யும் காரியம்
காலி – வெற்றிடமாக்கல், ஆடுமாடுகள்
கீதம் – சங்கீதம், இசை
குடியரசு – மக்களால் ஆளப்படும் அரசு
குடியேற்றல் – மக்களை இருத்தி வாழச் செய்தல்
குண்டலம் – காதணி
குருதி – இரத்தம்
குரோதம் – பகை
குழப்பம் – கலகம்
குறுநிலமன்னர் – சிற்றரசர்
கூர்ந்து – நுட்பமாக
கூந்தல் – தலை மயிர்
கூட்டுறவு – சேர்ந்து நடத்துதல்
கூரிய – கூர்மையான
கோடாது – வளையாது
கோடை – வெயில் காலம்
சந்திப்பு – கூடுமிடம்
சந்தேகம் – ஐயம்
சமர்த்தன் – கெட்டிக்காரன்
சமயச்சார்பு – மதசம்பந்தமான
சலனம் – அசைதல்
சாதனம் – துணைக்கருவி
சிக்கனம் – செட்டு
சீலம் – ஒழுக்கம்
சுண்டி விடாது – வற்றி விடாது
செதுக்கல் – உளியால் செதுக்குதல்
செய்தி – விஷயம்
செருக்கு – கருவம்
சேகரித்து – திரட்டிச் சேர்த்து
சேதம் – அழிவு
சேமித்து வைத்தல் – மிச்சப் படுத்தி வைத்தல்
சேமிப்பு – மிச்சப் படுத்துதல்
சோதித்து – பரீட்சை செய்து
தட்பம் – குளிர்ச்சி
தண்டு – கோல், சேனை இருக்குமிடம்
தர்க்கித்தனர் – வாதம் செய்தனர்
தரை நூல் – பூமியைப் பற்றிக் கூறும் நூல்
தலையெடுத்தல் – முன்னேறுதல்
தவிசு – அமரும் இடம், ஆசனம்
தவிர்க்க – நீக்க
தளர்ச்சி – சோர்வு
தளிர் – கொழுந்து இலை
தாவரம் – புல், பூண்டு, மரம், செடி, கொடி
தாள்நாணயம் – காகித நாணயம், (நோட்டு)
தானியம் – நெல், கம்பு முதலியன
திகழ்ந்தார் – விளங்கினர்

தியாகம் — பிறருக்கு அளித்தல்
திருவாக்கு — நல்லமொழி
திரைச் சீலே — தொங்க விடும் துணி
திறம் — தன்மை
திறன் — வலிமை
திறை — கப்பம்
துண்டம் — பிளவு
துணி — உறுதி கொள், பிளவு செய், வெட்டு
துயில் — தூங்கு
துறந்தார்க்கும்— யாவற்றையும் நீக்கியவர்க்கும்
துறை முகம் — கப்பல் வந்து தங்குமிடம்
தெருட்டுரை — அறிவூட்டும் மொழிகள்
தென் பால் — தெற்குத் திசை
தேர்ச்சி — சிறந்து விளங்கல்
தேற்றம் — நிச்சயம், திண்ணம்
தொன்று } தொட்டு } — பழங்காலம் முதல்
தோள்வலி — புஜபலம்
நச்சப்படாதவன் — விரும்பப்படாதவன்
நச்சுதல் — விரும்புதல்
நச்சுமரம் — விஷமரம் (நஞ்சு + மரம்)
நள்ளிருள் — நடு இரவு
நாயகம் — தலேமை
நிகழ்ச்சி — நடைபெறுதல்
நிதிச்சாலே — பணம் வைக்குமிடம், பாங்கி
நியமிக்கப்பட்ட — ஏற்படுத்தப்பட்ட
நிருபர் — அரசர்
நிவந்தங்கள் — கோயிலுக்கு அளித்த பொருள்
நீர்நிலே — குளம், ஏரி, குட்டை
நீறு — விபூதி
நுகர்தல் — அனுபவித்தல்
நுட்பம் — கூர்ந்து நோக்கும் தன்மை
நூற்றுண்டு — நூறு வருஷங்கள்
நெஞ்சகம் — மனத்திடத்தில் (மனத்தில்)
நெடிது — நீண்டகாலம்
நெறி — வழி
பகடு — மாடு
பஞ்சபூதம் — நிலம், நீர், தீ, காற்று, வெளி (பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்)
பண் — இராகம்
பண்டைக்காலம் — முன்காலம்
பணச்செலவு — பணத்தைச் செலவழித்தல்
பணி — வேலே
பயணம் — பிரயாணம்
பரவசம் — பிறர் நிலேயில் அமைதல்
பரி — குதிரை
பரிசில் — வெகுமதி
பரிவாரம் — இனத்தினர் கூட்டம்
பழுத்தற்று — பழுத்ததை ஒக்கும்
பாவனே — போலச் செய்தல்
பிரதிஷ்டித்தல் — நிலேநாட்டல்
பீலி — மயில்தோகை
புகட்டினன் — சொல்லிக் கொடுத்தான்
புதர் — செடிகள் நிறைந்த இடம்
புயல் — மேகம்
புரப்பார் — காப்பார்
புல்லினம் — புல்லின்வகை, அற்பரின் கூட்டம்
புலப்படுத்துதல் — விளங்கச் செய்தல்
புலமை — அறிவுடைமை
புலனாகும் — விளங்கும்
புவி — பூமி
புறங்காட்டி — முதுகுகாட்டி
புன்செய் — நெல்லொழிந்த தானியங்கள் பயிராகும் நிலம்
புன்முறுவல் — உதடு விரியச் சிரித்தல்
புன்மொழி — அற்பமான வார்த்தை

பூம்பொழில் – அழகிய சோலை
பெருங்குறி – பேரடையாளம்
பேறு – பாக்கியம்
பொருள் ஆதார நிலை – செல்வநிலை
பொறிகள் – இயந்திரங்கள்
பொன்னம்பலம் – சிதம்பரத்திலுள்ள சிற்றம்பலத்தின் பெயர்
போந்தவர் – வந்தோர்
போராட்டம் – கலகம், சண்டையிடல்
போற்ற – துதிக்க, காப்பாற்ற
மகவு – குழந்தை
மண்டலம் – பூமி, வட்டம்
மதுரக்கனி – இனிமையுள்ள பழம்
மரபு – முறை, குலம்
மருத்துவம் – வைத்தியம்
மறப்பண்பு – வீரத்தன்மை
மனப்பால் – மனத்தில் வெற்றியுற்றார்போல் நினைத்தல் (மனக்கோட்டை, மனோராஜ்யம்)
மாரி – மழை
மாலுமி – கப்பலோட்டி
மாற்றம் – வார்த்தை
மானியம் – வரியின்றி விடப்படும் நிலம்
மிடி – தரித்திரம்
மித்திரன் – நண்பன்
மிளிர்தல் – விளங்குதல்
மிளிர்ந்தது – விளங்கிற்று
மீண்டும் – மறுபடியும்
மீண்டோம் – திரும்பினோம்
மீள – திரும்ப
முகமன் – உபசார மொழிகள்
முத்தமிழ் – இயல், இசை, நாடகம்
முதிர்ந்து – முற்றி
முந்தி – முற்பட, முன்பு
முற்றுகை – சேனைகளைக் கொண்டு கோட்டையை வளைத்தல்
முற்றூட்டு – புலவர்க்குப் பரிசாக அளிக்கும் வரியில்லா நிலம்
முறியடித்தல் – தோல்வியுற்று ஓடும்படி செய்தல்
முனை – போர்க்களம்
மெல்லியலார் – பெண்கள்
ரஸிகர் – இன்பமனுபவிப்பவர்
வசதி – சௌகரியம்
வடபுலம் – வடக்குத் திசை
வடு – குற்றம்
வர்த்தகம் –வியாபாரம்
வர்த்தகன் –வியாபாரி
வரையாது –வரம்பில்லாமல், அளவின்றி
வல்லுநர் – வலிமையுடையோர்
வழிச் செலவு – பிரயாணம், யாத்திரை
வழி வழியாக –சந்ததிக்கிரமமாக
வள்ளல –வரம்பில்லாமல் கொடுப்பவன்
வளம் – செழுமை
வறுமை – தரித்திரம்
வாக்குறுதி – உறுதிமொழி
வாளாவிருத்தல் – பேசாமலிருத்தல்
விசை – வேகம்
வியப்பு – ஆச்சரியம்
வியந்தோம் – ஆச்சரியப்பட்டோம்
விவசாயி – பயிர்த் தொழில் புரிபவன்
விழைந்து – ஆசைப்பட்டு
விழைந்தது – ஆசைப்பட்டது
வெட்டுதல் – துண்டித்தல்
வெப்பம் – உஷ்ணம், சூடு
வெளித் தோற்றம் – மேலாகக் காணப்படும் நிலை
வேழம் – யானை, கரும்பு
வேளாண்குடி – பயிர்த் தொழில் புரிவோர் குலம்
வேளாண்மை – பயிர்த் தொழில்
ஜோடி – இரண்டு (இரட்டை)

86501

NEW METHOD

# NAMAGAL VACHAKAM

Book II for Form II

By

**Vidwan K. C. VANMEEKANATHAN, B.O.L., L.T.,**
*Assistant Lecturer, Teacher's College, Saidapet*

*and*

**Vidwan E. M. ARUMUGA CHETTIAR,**
*Senior Tamil Pandit,*
*Sir P. T. Chettiar's High School, Madras*

THE ORIENTAL PUBLISHING HOUSE
286, ESPLANADE, (APPAH BUILDINGS), MADRAS

Copyright]

[Price As. 0-15-0